# தொல்காப்பியப் பதிப்புகள்

முனைவர் ச.வே.சுப்பிரமணியன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# தொல்காப்பியப் பதிப்புகள்

**முனைவர் ச.வே. சுப்பிரமணியன்**
(மேனாள் — இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்)



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை-600 113.

முனைவர் உ.வே. சாமிநாதையர்
அறக்கட்டளைச் சொற்பொழிவு-6
(28, 29-4-92)

DR. U.V. SAMINATHAIYAR ENDOWMENT LECTURE No. 6
Endowment Lecture Publication No. 28

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Tolkāppiyap Patippukaḷ |
| Author | : | Dr. S.V. Subramanian,<br>Former Director,<br>International Institute of Tamil Studies |
| Publisher & Copy right | : | International Institute of Tamil Studies, T. T. T. I. (Post), Taramani Madras-600 113 |
| Publication No | : | 162 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 28-4-'92 |
| Edition | : | First |
| Paper used | : | Nowgong 16 kg Creamove |
| Size | : | 21×14 cms |
| Printing types | : | 12, 10 points |
| No of Copies | : | 1200 |
| No of Pages | : | XII + 177=189 |
| Price | : | Rs. 27-00 |
| Printers | : | Kavinkalai Acchagam<br>Madras-41, Ph : 41 71 41 |
| Artist | : | Jamal |
| Subject | : | A Study on the various editions of Tolkāppiyam |


---

* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.




**டாக்டர் அன்னி மிருதுலகுமாரி தாமசு**
இணைப் பேராசிரியர், இயக்குநர்—பொறுப்பு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-113.

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தனியார் முயற்சியாலும் குழுவினரின் ஒத்துழைப்பாலும் 1983 முதல் 15 அறக்கட்டளைகள் நிறுவப்பெற்று ஆண்டுதோறும் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்று வருகின்றன.

தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் பெயரில் நிறுவப்பெற்ற அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் ஆண்டுதோறும் அவர் பிறந்த நாளான பிப்ருவரி 19ஐ அண்மி நடைபெறுவது வழக்கம்.

1992க்குரிய சொற்பொழிவை நிகழ்த்த ஏற்றுக்கொண்ட நிறுவன, முதல் இயக்குநரும் எங்கள் பேராசிரியருமாகிய டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் '91 டிசம்பரில் சொற்பொழிவின் எழுத்துருவை நிறுவனத்திற்கு வழங்கியபோது, அவர் காலத்தில் இருந்தமை போல, நூலை வெளியிட்டே பொழிவை நிகழ்த்துவது என்ற கோட்பாடு மீண்டும் நடைமுறைப்படுத்தப்பெற முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

டாக்டர் உ. வே. சா. அவர்கள் மறைந்த 50ஆம் ஆண்டு நினைவு நாள் '92 ஏப்ரல் 28இல் வருவதால், அன்றே சொற் பொழிவு தொடங்கத் திட்டமிடப்பெற்று, இப்போது நிறைவேறும் நிலை உருவாகியுள்ளது.

தமிழ்த் தாத்தாவைப் பெற்றது தமிழகம் செய்த தவம். இத் தமிழ்ப் பேராளரைப் பெற்றது நாங்களும் நிறுவனமும் செய்த பேறு.

நிறுவன மேம்பாட்டில் தனிக்கவனம் கொள்ளும் நிறுவனத் தலைவர் அவர்கட்கும், தமிழ்வளர்ச்சிப் பண்பாட்டுத் துறைக்கும், தமிழரசுக்கும் எம் நன்றி.

16-4-'92

**அன்னிதாமசு**

# பதிப்புரை

பதிப்புலக மூலவர், தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதையரை நினைவுகூரும், 'முனைவர் உ. வே. சாமிநாதையர் அறக்கட்டளை' யின் ஆறாவது சொற்பொழிவு இந்நூல்.

1847 முதல் இன்றுவரை தொல்காப்பியத்திற்கு எழுந்துள்ள பதிப்புகளின் விளக்க ஆய்வாக, 'தொல்காப்பியப் பதிப்புகள்' எனும் இந்நூல் அமைகிறது. இதுவரை வெளிவந்துள்ள சுமார் 138 பதிப்புகளின் பொதுநிலை ஆய்வாக முன்பகுதி விளங்குகின்றது. இரண்டாம் பகுதி ஒவ்வொரு நூலையும் தனித்தனியே ஆய்வு நோக்கில் அறிமுகம் செய்துள்ளது. மூலம், மரபுரை, புத்துரை, உரைவளம், ஒப்பியல், மொழிபெயர்ப்பு எனப் பலவாக அவை அமைந்துள்ள முறை தெளிவாக விளக்கம் பெற்றுள்ளது. தொல் காப்பியத்திற்கு உடனடித் தேவையான செம்பதிப்பின் நோக்கங் களையும், அமைய வேண்டிய முறையினையும் தெளிவாக விளக்கி யுள்ளமை நூலுக்கு அணி சேர்க்கிறது. கிடைத்தற்கரிய பழம் பதிப்புகளில் மேலாய்வு செய்ய விழைவோர்க்கு உதவியாக, அவை இன்று காணக்கூடிய இடங்களையும் சுட்டியிருப்பது நூலாசிரியரின் ஆய்வு நோக்கிற்குச் சான்று பகர்கிறது.

நிறுவனத்தில் அறக்கட்டளைகளை உருவாக்கவும், அதன் வழி வெளியறிஞரைப் பயன் கொள்ளவும் அடித்தளமிட்டு நற்பாதை யமைத்துத்தந்த சான்றோர், இந்நிறுவனத்தின் முதல் இயக்குநர், பேராசிரியப்பெருந்தகை முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள். அவர்களை நிறுவனத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவாற்ற அழைத்தபொழுது மகிழ்வுடன் ஒப்புக்கொண்டதுடன், தமது நற்பெரு நோக்காகிய, 'சொற்பொழிவன்றே நூல்' என்பதையும் நிறைவேற்றித் தந்துள்ளார். தமிழ்ப்பணி ஒன்றையே தம் பணியாகக் கொண்டுள்ள அவருக்கு நிறுவனம் தன் நன்றியைக் காணிக்கையாக்குகின்றது.

நிறுவனத்தில் இவ்வறக்கட்டளை நிறுவ உதவிய அன்பர் திரு. மு. கோ. இராமன் உள்ளிட்ட பலருக்கும் நன்றி உரித்து. சொற்பொழிவிற்கு வழிவகுத்து, நூலாக்கத்திற்குத் துணை நின்ற

இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னிதாமசு அவர்கள்; நூல் அச்சுப்படி திருத்தற்கும் சொல்லகராதி தயாரித்தற்கும் துணை நின்ற ஆய்வு மாணாக்கர் திரு. தி. மு கந்தசாமி, திரு. அ. லோ. பழனிசாமி, செல்வி நா. புனிதப் பொற்கொடி ஆகியோர்; செம்மையாக அச்சிட்டுத் தந்துள்ள கவின்கலை அச்சகத்தார் அனைவருக்கும் எங்கள் நன்றி.

சென்னை-113
16-4-92.

அன்புடன்,
**ச. சிவகாமி**
அறக்கட்டளைப் பொறுப்பாளர்.



# ஆசிரியர் அறிமுகம்

**பெயர் :** **முனைவர் ச. வே. சுப்பிரமணியன்**

**பிறப்பு :** 31-12-1929; வீரகேரளன்புதூர்-நெல்லை மாவட்டம்.

**பணி :** தமது தமிழ்ப்பணியை முதன் முதலில் 1956இல் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியில் பயிற்றுநராகத் தொடங்கினார். கேரளத்தில் பல ஆண்டுத் தமிழ்ப்பணிக்குப்பின் 1966இல் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவரானார். 1974இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பேராசிரியர் முதன்மை அலுவல் ஆட்சியராகப் பொறுப்பேற்றுப் பின் அதன் முதல் இயக்குநரானார். 1987இல் ஓய்வு பெற்றதன்பின் திருவனந்தபுரம், 'திராவிட மொழியியல் நிறுவனத்தில்' தொல்காப்பிய பாடவேறுபாட்டுப் பதிப்புப் பணியில் ஈடுபட்டுள்ளார்.

**நூல்கள் :** 1962இல் சிலப்பதிகார வஞ்சிக்காண்ட மலையாள மொழி பெயர்ப்புடன் எழுத்துப்பணி தொடங்கியது. இது வரை 39 நூல்களைப் படைத்துள்ளார். இலக்கிய ஆய்வுகள், இலக்கண ஆய்வுகள், இலக்கணப் பதிப்புகள், மொழியியல் ஆய்வுகள், ஒப்பியல், மொழிபெயர்ப்பு எனப் பலவாக அவை அமைகின்றன. இவற்றுள் 4 ஆங்கிலத்தில் அமைகின்றன. இலக்கணத் தொகைகள், சிலம்பும் சிந்தாமணியும், கம்பன் கற்பனை, காப்பியப் புனைதிறன், கம்பன் இலக்கிய உத்திகள், பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள், திராவிடமொழி இலக்கியங்கள், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், இளங்கோவின் இலக்கிய உத்திகள், இளங்கோவும் கம்பனும் போன்றன

குறிப்பிடத்தக்க சில நூல்கள். இவைதவிர எண்ணற்ற நூல்களின் பதிப்பாசிரியராகவும் நூற்றுக்கு மேற்பட்ட தமிழ் ஆங்கிலக் கட்டுரைகளின் ஆசிரியராகவும் விளங்குகிறார்.

பயணம் : மொரீசியசு, பாரிசு, ரோம், லண்டன், ஏதென்சு, கெய்ரோ, செக்கோசுலேவியா, மேற்குஜெர்மனி, போலந்து, ஜப்பான், மணிலா, தாய்லாந்து, மலேசியா, சிங்கப்பூர், ஹாங்காங், இலங்கை.

பிற சிறப்புகள் : பல அறக்கட்டளைச் சொற்பொழிவுகளாற்றியுள்ள இவர் எண்ணற்ற தேசியக் கருத்தரங்குகளிலும் உலகளாவிய கருத்தரங்குகள் பலவற்றிலும் பங்கேற்றுள்ளார். உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கக் கருத்தரங்கம் (மொரீசியசு), மனித அறிவியல் கருத்தரங்கு (ஜப்பான்) போன்றன குறிப்பிடத்தக்கன.

கம்பன் இலக்கிய உத்திகள் நூலுக்காக 1984இல் தமிழ்நாடு அரசுப் பரிசு பெற்றுள்ளார். திருப்பத்தூர் தமிழ்ச் சங்கம் ‘தமிழாகரர் விருது’ 1985இல் வழங்கிப் பெருமைப்படுத்தியது.

தென்னிந்தியப் பல்கலைக் கழகங்கள் அனைத்திலும் பல குழுக்களில் உறுப்பினராகப் பணியாற்றியதுடன் மாநிலத் திட்டக்குழு, மைய சாகித்திய அகாதெமி (புதுதில்லி), மாநில சாகித்திய அகாதெமி (சென்னை) முதலானவற்றிலும் உறுப்பினராகப் பொறுப்பேற்றிருந்தார்.

ஏறத்தாழ ஐம்பது மாணாக்கர் இவர் நெறிமையில் சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மற்றும் கேரளம், மதுரை, பெங்களூர் பல்கலைக் கழகங்களின் வழி முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

# முன்னுரை

1990 பிப்ருவரி மாதம் எங்கள் பேராசிரியப் பெருந்தகை டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் அவர்களைத் திராவிடமொழி யியல் நிறுவனத்தில் சந்தித்தபோது ''தொல்காப்பியம்—பாடவேறு பாடுகளுடன் பதிப்பைச் செய்ய வேண்டும். திராவிடமொழியியல் நிறுவனம் உன்னை அழைக்கிறது எனக் கூறினார்கள்''. பின்பு தெரிவிப்பதாகச் சென்றேன், நன்கு சிந்தித்த பின்பு மே 1990 முதல் தொல்காப்பியப் பணியில் என்னை இணைத்துக் கொண் டேன்; அதனுடைய தேவையைத் தெளிவாக உணர்ந்தேன். அச்சில் வந்துள்ள பதிப்புகள் பெரும்பான்மையைப் பார்த்தேன். ஒன்றிரண்டு கிடைக்காமையால் விட்டுப்போயின. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத் தொல்காப்பியச் சுவடிகள் முப்பத்திரண்டும், சென்னை, கீழ்த்திசை நூலகச் சுவடிகள் இருபத்தேழும் பார்த்துள்ளேன்; இன்னும் ஏனைய சுவடிகளைப் பார்க்க வேண்டும்.

இந்நிலையில் 1991இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தினர் 'தொல்காப்பியப் பதிப்புகள்' பற்றி டாக்டர் உ.வே. சாமிநாதையர் அறக்கட்டளைச் சொற்பொழிவைச் செய்யுமாறு வேண்டுகோள் விடுத்தனர். அதன் விளைவு இந்நூல்.

தொல்காப்பியப் பதிப்புகள் பற்றி வித்துவான் மு. சண்முகம் பிள்ளை அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாய்வு எட்டாம் தொகுதியில் 70 பக்கத்தில் ஒரு கட்டுரை எழுதி 1978இல் தனியாகவும் வெளியிட்டுள்ளார்; அதில் 74 பதிப்புகள் பற்றிக் குறிப் பிட்டுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 'தொல் காப்பியச் சிந்தனைகள்' என்ற நூலை 1978இல் வெளியிட்டுள்ளது. அதில் தொல்காப்பியப் பதிப்புகள் பற்றி டாக்டர் ச. மெய்யப்பன் ஒரு கட்டுரை தந்துள்ளார். அதில் 48 பதிப்புகள் பற்றிய குறிப் புள்ளது. 'தொல்காப்பிய ஆய்வின் வரலாறு' என்ற கோ. கிருட்டிணமூர்த்தியின் ஆய்வேடு 1990இல் சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் வெளியிடப்பெற்றுள்ளது. அது 1981இல் டாக்டர் பட்டத்திற்குக் கொடுக்கப்பெற்ற ஆய்வேடு. அதனுள் 1980 வரை யுள்ள பதிப்புகள் 93ஐச் சுட்டியுள்ளார். இவற்றின் வளர்ச்சியே இந்நூல்.

இந்நூலில் 1991 வரையுள்ள பதிப்புகள் 138 வரை தரப் பெற்றுள்ளன. நான் பதிப்புகளைப் பார்க்கும் பார்வை பொது நிலையில் இருந்தாலும், சிறப்புநிலை பாடவேறுபாடுகளைக் காணும் நோக்கம்; அதன் வாயிலாகத் தொல்காப்பியச் செம்பதிப்பை அமைத்தல்.

இதன் அடிப்படையில் நூலை இரு பகுதிகளாகப் பிரித்துள்ளேன். முதல் பகுதி இதுவரை எழுந்துள்ள தொல்காப்பியப் பதிப்புகள் பற்றிய பொதுவான எண்ணங்களை, அவற்றின் சிறப்புகளைத் தருவதாகவும், இனி வரும் பதிப்பு எப்படி இருக்க வேண்டும் என்பதை உணர்த்துவதாகவும் அமைகின்றது.

இதுவரை எழுந்துள்ள பதிப்புகளின் அறிமுக உரையாக இரண்டாம் பகுதி அமைகிறது. காலவரிசையில் தொகுக்கப்பட்டுள்ளது. ஒருவர் அல்லது நிறுவனம் தொடர்ந்து அப்பதிப்பில் ஈடுபட்டிருந்தால் அவ்விடங்களில் மட்டும் கால வரிசை கருத்தில் கொள்ளப் படாது, அப்பதிப்புகள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. பொது நிலையில் பதிப்பாசிரியர் பெயர் தலைப்பாக அமைகிறது. தம் பதிப்பு முயற்சியே தனி நபர் பதிப்பிற்கு வாய்ப்பளித்துள்ளது என்ற சூழலில் பதிப்பித்த நிறுவனங்களுக்குச் சிறப்பளிக்கப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பின் சிறப்புக் கருதி ஈ.எஸ். வரதராஜ ஐயர் (அண்ணாமலைப் பல்கலைக்கழகம் எனத் தனித்துச் சுட்டாது) தலைப்புப் பெற்றுள்ளார். ஏனைய அ. ப. க. பதிப்புகள் மிகுதியும் மறு பதிப்பாக அமைதலும் நினைக்கத்தக்கது.

முதற்பகுதியில் கூறப்பட்ட சில எண்ணங்கள் வலியுறுத்தற் பொருட்டு இரண்டாம் பகுதியில் மீண்டும் இடம் பெற்றுள்ளன. தேவை கருதி முழு நிலையில் கால வரிசையில் பின்னிணைப்புகள் இரண்டு தரப்பட்டுள்ளன.

இவ்வாய்ப்பினை எனக்கு நல்கிய திராவிட மொழியியல் நிறுவனத்தினர்க்கும் அதன் மதிப்புறு இயக்குநர் டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் அவர்களுக்கும் என் அன்பான நன்றியைத் தெரிவிக்கிறேன்.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் தொல்காப்பியத்தைப் பதிப்பித்திருந்தால் மிகச்சிறப்பாக அமைந்திருக்கும் என்ற உணர்வு என் உள்ளத்தில் எப்போதும் உண்டு. பதிப்புத்துறையின்

பேராசான் சாமிநாதையர் அவர்கள். அவர்களால்தான் சங்க இலக்கியங்கள் சிறந்த பதிப்புகளாகத் தமிழர்க்குக் கிடைத்தன. அதனால் அவர் பெயரில் அமைந்துள்ள அறக்கட்டளைச் சொற் பொழிவினை, நான் எடுத்துக் கொண்ட ஆய்வாகிய தொல் காப்பியச் செம்பதிப்புக்காக—'தொல்காப்பியப் பதிப்புகள்' என்ற தலைப்பினையே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தினர் தந்தனர் போலும். அதுவும் அவரின் ஐம்பதாம் நினைவு நாளைச் சிறப்பிக் கும் வகையில் அமைந்துள்ளது எண்ணிப் பெருமை கொள்கிறேன். அவர்களுக்கு நன்றியுரியது.

**இந்நூலைத் தொல்காப்பிய முதல் பதிப்பாசிரியருக்குக் காணிக்கையாக்குவதில் பெருமகிழ்ச்சி காண்கிறேன்.**

இச்சொற்பொழிவினைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்துள்ள இயக்குநர் பொறுப்பு டாக்டர் அன்னிதாமசு அவர் கட்கும், அறக்கட்டளைச் சொற்பொழிவுகளைக் கவனிக்கும் பொறுப்பாளர் டாக்டர் ச. சிவகாமி அவர்கட்கும், என் நன்றியும் வாழ்த்துக்களும்.

அன்புள்ள,

**ச. வே. சுப்பிரமணியன்.**

# உள்ளே

பக்கம்

**தொல்காப்பியப் பதிப்பு நோக்கு (பகுதி-1)** **1-58**

பதிப்பின் சிறப்பு 3, தொல்காப்பியம்5, தொல்காப்பியப் பதிப்பு வரலாறு 8, தொல்காப்பியப் பதிப்புவகைப்பாடு 21, தொல்காப்பிய ஆழ்நோக்குப் பதிப்புகள் 39, தொல் காப்பியப் பதிப்பு நெறிமுறைகள் 48, நிறைவுரை 58

**தொல்காப்பியப் பதிப்புகள் (பகுதி-2)** **5**

தமிழாண்டு-ஆங்கில ஆண்டு 61, மழவை.மகாலிங்கையர் 62, சாமுவேல்பிள்ளை 64, சி.வை. தாமோதரம்பிள்ளை 69, இராசகோபாலபிள்ளை 75, சோடசாவதானம் சுப்பராயசெட்டியார் 80, சிவஞானமுனிவர் 82, அரசஞ் சண்முகனார் 82, பவானந்தம்பிள்ளை 82, பவானந்தர் கழகம் 83, ரா. ராகவையங்கார் 85, கா. நமச்சிவாய முதலியார் 86, வ. உ. சிதம்பரம்பிள்ளை 90, சிதம்பர புன்னைவனநாத முதலியார் 93, சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் 94, வேங்கடாசலம்பிள்ளை 107, பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் 108, ஆறுமுகநாவலர் 114, திரிசிரபுரம் எஸ். கனகசபாபதிப்பிள்ளை 115, ம. ஆ. நாகமணி 117, சி. கணேசையர் 118, தி. சு. பாலசுந்தரம் பிள்ளை 122, ச. சோமசுந்தர பாரதியார் 123, வே. வேங்கடராஜுலு ரெட்டியார் 127, ஈ. எஸ். வரதராஜ ஐயர் 128, மர்ரே. எஸ். ராஜம் 128, புலியூர் கேசிகன் 129, வெள்ளைவாரணனார் 130, சரசுவதி மகால் 131, வி. ஐ. சுப்பிரமணியன், ஆபிரகாம் அருளப்பன் 133, ஆபிரகாம் அருளப்பன் 135, ச. வே. சுப்பிரமணியன் 135, குழந்தை 137, அடிகளாசிரியர் 138, மு.இராமலிங்க னார் 142, கு. மா. திருநாவுக்கரசு 145, தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் 145, ரா. சீனிவாசன் 146. க. ப. அறவாணன், தாயம்மாள் அறவாணன் 147, மதுரை, காமராசர் பல்கலைக் கழகம் 149, அ. கு. ஆதித்தர் 154, கு. சுந்தரமூர்த்தி 154, உலகத் தமிழாராய்ச்சிநிறுவனம் 157, பாலசுந்தரம் 163, இராம. சுப்பிரமணியம் 165, நிர்மல் செல்வமணி 166.

**பின்னிணைப்புகள்** **167-177**

தொல்காப்பியப் பதிப்புகள்—கால வரிசை 167, தொல் காப்பியப் பதிப்பு விவரப்பட்டியல் 174, துணை நூற் பட்டியல் 175. சிறப்புச் சொல்லகராதி 176,

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அ. ப. க. | — | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் |
| அரசு | — | அரசு நூலகப் பழையவுரை |
| இளம் | — | இளம்பூரணர் |
| உ.தநி | — | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் |
| எழுத்து | — | எழுத்ததிகாரம் |
| கல் | — | கல்லாடர் |
| கழகம் | — | தென்னிந்திய, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| சி.வை.தா. | — | சி.வை. தாமோதரம் பிள்ளை |
| சொல் | — | சொல்லதிகாரம் |
| சேனா | — | சேனாவரையர் |
| தெ.பொ.மீ. | — | தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் |
| தெய்வ | — | தெய்வச் சிலையார் |
| தொல் | — | தொல்காப்பியம் |
| நச்சர் | — | நச்சினார்க்கினியர் |
| பழைய | — | அரசு நூலகப் பழையவுரை |
| பா. வே | — | பாடவேறுபாடு |
| பொருள் | — | பொருளதிகாரம் |
| ம. கா. ப. க | — | மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் |

## பதிப்பின் சிறப்பு

அன்று முதல் இன்றுவரை பதிப்பாசிரியர் பலர் தோன்றி யுள்ளனர். அவருள் பதிப்புச் சக்கரவர்த்தியாகத் (King of Kings) திகழ்பவர் உ. வே. சாமிநாதையர். தமிழ் முதல் நூலான தொல்காப்பியம் முதல் மிகப் பிற்காலத்தில் தோன்றிய தல புராணங்கள் வரை பதிப்பாசிரியரின் முயற்சியால்தான் தமிழுலகில் உலவத் தொடங்கின. எண்ண எண்ண இன்பந்தரும் இலக்கியங்கள் அனைத்தும் பதிப்பாசிரியரின் கடுமையான உழைப்பால்தான் நமக்கு இன்று கிடைக்கின்றன. சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் போன்ற நூல்கள் பதிப்பாசிரி யரின் வழி நமக்குக் கிடைக்கவில்லையெனில் இவற்றைத் தோற்று வித்த உருவாக்கிய மூல ஆசிரியரின் பெருமை தமிழுலகத்திற்கும் உலகத்தினர்க்கும் தெரியாமலே போயிருக்கும். நல்லனவற்றைச் செய்வது ஒருவகை; அதை உலகிற்கு உணர்த்துவது பிறிதொரு நிலை. ''நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தின்'' பெருமையை நாம் உணரச் செய்தவர் பதிப்பாசிரியர்தாம். இளங்கோவடிகள் தமிழுக்கு முதற்காப்பியத்தைத் தந்தவராக இருக்கலாம். சகலகலா வல்லவராக இருக்கலாம். அவர் எண்ணங்கள் அனைத்தையும் நம் மனத்தில் ஏற்றமுறச் செய்தவர் அடியார்க்கு நல்லார் என்ற உரையாசிரியர். இவ்விருவரின் சிறப்பையும் நம்மை உணரச் செய் தவர் பதிப்பாசிரியரே. மூல நூலாசிரியர்க்குள்ள தகுதி 90 விழுக்காடு இருந்தால் பதிப்பாசிரியரின் தகுதி 10 விழுக்காடிருக் கலாம். இப்பத்து விழுக்காட்டுத் தகுதியுடைய பதிப்பாசிரியரால் தான் தொண்ணூறு விழுக்காட்டு மூல நூலாசிரியரின் தகுதியைத் திறமையை ஆற்றலை உணர முடிகிறது. இப்பதிப்பாசிரியர்

இல்லையெனில் மூலநூலாசிரியரை நாம் அறியாது போயிருப்போம். அதனால் பதிப்பாசிரியரின் முயற்சி, உழைப்பு, திறன் இவை பாராட்டிப் போற்றத்தகுவனவாம்.

தமிழ்ப் பண்பாட்டின் புதைபொருட்களாகிய தமிழிலக்கியங்களை நிலனகழ் ஆய்வாளன், புதைபொருளாராய்ச்சியாளன் போல் தோண்டி எடுத்து அவற்றின் பெருமையை உலகத்திற்கு ஈந்தவர் பதிப்பாசிரியரே.

தமிழ்ப் பதிப்பாசிரியருள் குறிப்பிடத் தக்கோராகச் சிலர் உளர். அவருள்ளும் சுட்டிக் கூறத் தக்கோராக உ. வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், எஸ். வையாபுரிப் பிள்ளை, வ.உ. சிதம்பரனார் போன்றோர் சிலர்.

# தொல்காப்பியம்

தமிழில் தோன்றிய முதல்நூல், முதன்மையான நூல் தொல்காப்பியம்; கி.மு.வில் தோன்றிய நூல்; அதுவும் இலக்கண நூல். ஏறத்தாழ அந்நூல் தோன்றுவதற்கு முன் பன்னூறு ஆண்டுகளாவது தமிழ் இலக்கியம் ஓங்கிச் செழித்துப் பரந்திருந் தால்தான் இதுபோன்ற திண்மையான, மிக நுண்மையான இலக்கண நூல் தோன்றியிருக்க முடியும்.

எழுத்து, சொல், பொருள் என்ற முப்பெரும் பிரிவுகளாகவும், ஒவ்வொரு பிரிவுக்கும் ஒன்பது இயல்களாக 27 இயல்களையும் கொண்டுள்ளது தொல்காப்பியம். எழுத்தும் சொல்லும் மொழி பற்றிய இலக்கணம். பொருள் - இலக்கியம், தமிழ்ச்சமுதாயம், உளவியல், உடலியல், மரபு இவை பற்றிய இலக்கணம்.

இன்று வளர்ந்துள்ள மொழியியல் அடிப்படையில் தொல்காப்பியத்தை அணுகும்போது ''முன்னைப் பழம் பொருட் கும் முன்னைப் பழம் பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய்'' அமைந்துள்ளது.

உலகில் பல்லாயிரக்கணக்கான மொழிகள் உள. அவற்றுள் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளாக இடையறாது பயன் பெற்று வளர்ந்து வருகின்ற ஒரு மொழி தமிழ் மட்டுமே.[1]

இன்றும் பல மொழிகளுக்கு வரிவடிவம் இல்லை; ஒலிகளின் அமைப்பு வரையறுக்கப்பட வில்லை. ஆயின் தமிழ் ஒலி, வரிவடி வங்கள் எவை? எவ்வொலிகள் மொழி முதலில், இடையில், கடையில் வரும் போன்ற செய்திகளெல்லாம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே வரையறுக்கப்பெற்றுள்ளன. ஒலி வேறு பாட்டால் ஏற்படும் பொருள் வேறுபாட்டைத் தொல்காப்பியம்

---

1. Encyclopaedia Britannica Vol. 21; William Benton, Chicago; 1972; P. 647.

உணர்ந்திருந்ததால்தான் குறில் ஒலிகளை நூற்பா 3இல் கூறி, நெடில் ஒலிகளை நூற்பா 4இல் சொல்லி, இரண்டும் இணைந்த உயிரொலிகளை நூற்பா 8இல் உணர்த்துகிறார். அறிவியலடிப் படையில் மொழியியல் கோணத்தில் இவற்றைப் பார்க்கும்போது பழமையையும் புதுமையையும் உணரமுடிகிறது.

சொல்லிலக்கணத்தில் தொகைகள் அனைத்தும் புறநிலையில் (Surface level) புறப்பொருளையும் ஆழ்நிலையில் (deeper level) உட்பொருளையும் உணர்த்துவதை அறிகிறோம். அறிவியல் வளர வளர, சுரங்கம் போன்று தொல்காப்பியம் பல ஆழ்நிலைப் பொரு ளுடைய வைர மணிகளைத் தந்துகொண்டிருக்கிறது.

இத்தகைய பல சிறப்புகளைக் கொண்டுள்ள தொல்காப்பியத் திற்குத் தெளிவான, செம்மையான பதிப்பு இல்லையே என எண்ணும்போது அறிஞர் உள்ளம் மிகவும் துன்புறுகின்றது. முதன்மைப் பதிப்பாசிரியராகிய உ.வே. சாமிநாதையர் தொல்காப் பியத்தைப் பதிப்பிக்கவில்லையே என்ற ஏக்கமே அவர்பெயரால் அமைந்த அறக்கட்டளைச் சொற்பொழிவுக்குத் 'தொல்காப்பியப் பதிப்புகள்' என்ற தலைப்பைத் தேர்ந்தெடுக்கக் காரணமாக அமைந்தது. அவர் தொல்காப்பியத்தைப் பதிப்பித்திருந்தால் அது எவ்வாறு அமையும் என்ற எண்ணமும் இத்தொல்காப்பியப் பதிப்புப் பணியில் என்னை ஈடுபடச் செய்தது.

"Tolkāppiyam, lit. 'The Ancient Book' is a text of highly technical 1612 Sūtras (Stanzas) of unequal length, divided into three books, each of them containing 9 chapters. It is ascribed to one author of unknown name (called after the book Tolkāppiyam) and the date usually given 3rd - 1st cent. B.C. The first book called Eḻuttatikāram lit. 'The Part of letters' deals with orthography, graphemics, phonetics and phonemics of old Tamil. The second book entitled Collatikāram lit. 'The Part of words' deals with the morphology, syntax, semantics and etymology of the language. The third book, Poruḷatikāram lit. 'The Part of matter' contains prosody and rhetorics of old Tamil (its study being highly pertinent to the understanding of classical Tamil literature) and much material of psychological, ethnographic, anthropological and sociological interest. In short,

the whole gamut of pre-Aryan Tamil (Dravidian) culture and civilization is in some way contained in the 'grammar'. Thus its place within the history of pre-Aryan Culture and Civilization of India is more important than the place of Pānini's classical sanskrit grammar in the sanskritic culture of India. In the development of Indian Linguistic thought Tolkāppiyam (since it embodies pre-Paninian or extra Paninian tradition) is as important as the grammar of Pānini.

—Kamil Zvelebil, Journal of Tamil Studies, Vol. II, No. 2, October 1970, P. Part 2, 3-4.

# தொல்காப்பியப் பதிப்பு வரலாறு

தொல்காப்பியன் என்ற சொல் தொல்காப்பிய நூலை எழுதிய ஆசிரியனைக் குறிக்கும் என்பதைச் சிறப்புப் பாயிரம் ''தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி'' என்பதில் சுட்டு கின்றது. தொல்காப்பியன் எழுதியது தொல்காப்பியம் என நாம் வழங்குகின்றோம். சோமசுந்தர பாரதியார் 'தொல்காப்பியம்' என்பது வடமொழி அமைப்புமுறை அதனால் தொல்காப்பியர்[1] என்பதே நூலின் பெயர் என்று, தான் வெளியிட்டுள்ள தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை (அகத்திணையியல்) என்ற நூலின் உரைப்பாயிரத்தில் கூறுகின்றார்.

தொல்காப்பியம் பல ஆண்டுகளாக வழங்கிவந்த இலக்கண எண்ணங்களைத் தொகுத்த நூல். என்ப, மொழிப, என்மனார் புலவர், அறிந்திசினோரே போன்ற சொற்கள் இத் தொகுப்பின் தன்மையை உணர்த்துகின்றன. அதோடு தம் காலத்தில் வழங்கி வந்த வழக்குகளையும், தம் சொற்களில் அமைத்து நூலை உருவாக்கியுள்ளார்.

சிலம்புக்கு அரும்பத உரையாசிரியர் போன்று, பழைய உரையாசிரியர் என நாம் கருதும் அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு போன்றவற்றிற்கு உரையெழுதியோர் தொல்காப்பிய நூற்பாக்களைக் கையாண்டுள்ளமையை அறிகிறோம். தொல் காப்பியம் தோன்றியது முதல் வழக்கிலிருந்தது என்பதை இவ்வுரைக் கூற்றுகள் உணர்த்தும். 'பதித்தல்' என்ற சொல் அகம் 253[2]-இல் கையாளப் பெற்றுள்ளது. அச்சேற்றல் என்ற முறை பின்பு தோன்றியதுதான். சொல் வழக்கு முன்பே உள்ளது.

---

1. தொல்காப்பியர்-பொருட் படலப் புத்துரை (அகத்திணை யியல்) 1942. பக். IV.

2. மாக விசும்பின் திலகமொடு **பதித்த**
திங்கள் அன்ன நின் திரு முகத்து
—அகம் 253, 24-25.

'வரல்', 'ஆறு' இரு சொற்களும் தொல்காப்பியப் பயிற்சியில் உள்ளனவே.

தொல்காப்பியத்திற்குப் பின்பு தோன்றிய இலக்கணங்களில் பெரும்பான்மையும் நன்னூல், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம் போன்றவற்றில் தொல்காப்பிய நூற் பாக்கள் அவ்வாறே எடுத்தாளப்பெற்றுள்ளன. செய்யுளியலில் 'நூற்பா பாஅ வண்ணத்தைச் சார்ந்தது' எனக் கூறுகிறார்.

அவற்றுட்
பாஅ வண்ணம்
சொற்சீர்த்தாகி நூற்பாற் பயிலும்

என்பது நூற்பா. நூலின்கண் பயின்று வரும் என்பது உரை. நூற்பாற் - என்ற சொல்லுக்கு நூற்பாப் - என்ற பாடவேறுபாடும் உள்ளது. இங்கு நூல் - இலக்கண நூலைக் குறிக்கும். தொல் காப்பியத்தில் நூல் என்ற சொல் பெரும்பான்மையும் இலக்கண நூலையே உணர்த்துகின்றது. அதனால் தொல்காப்பியர் காலத் திலேயே நூற்பா என்றுதான் சூத்திரத்தைக் குறித்தனர். புதிய தாகத் தோற்றுவித்த சொல் அன்று நூற்பா என்பது. பிற்காலத் தினர் சூத்திரம் என்று வழங்கினர். அச்சொல்லும் தொல்காப்பியத் தில் உள்ளது.

இன்றுள்ள நிலையில் உலகம் முழுவதிலுமாக ஏறத்தாழ 130 தொல்காப்பியச் சுவடிகள் உள்ளன. அவற்றுள் இந்தியாவில் 120 சுவடிகள் இருக்கலாம். இதுவரை பதிப்பிற்குப் பிறர் பயன்படுத் தாத சுவடிகள் டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையச் சுவடிகள் என்பது பொதுக் கருத்து. இன்னும் கிராமங்களில் தொல்காப்பியச் சுவடிகள் இருக்கலாம். தொடக்க காலப் பதிப் புகள் அனைத்தும் சுவடிகளை நோக்கிப் பதிப்பித்தவை. பிற்காலத் தில்தான் அச்சு நூல்களைப் பார்த்துப் பதிப்பித்தனர். தமிழகத்தில் தொல்காப்பியம் கற்றோர் மிகச் சிலரே இருந்தனர் எனத் தெரிகிறது. 1885-இல் தொல் - பொருளதிகாரத்தைப் பதிப்பித்த சி.வை. தாமோதரம் பிள்ளை இவ்வாறு எழுதுகிறார் :

"சென்னபட்டணத்தில் இற்றைக்கு ஐம்பதறுபது வருஷத்தின் (1825-இல்) முன்னிருந்த வரதப்ப முதலியாரின்பின் எழுத்துஞ் சொல்லுமேயன்றித் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை உரை

யுதாரணங்களோடு பாடங்கேட்டவர்கள் மிக அருமை. முற்றாய் இல்லை என்றே சொல்லலாம். வரதப்ப முதலியார் காலத்திலும் தொல்காப்பியங் கற்றவர்கள் அருமையென்பது அவர் தந்தையார் வேங்கடாசல முதலியார் அதனைப் பாடங்கேட்கும் விருப்ப முடையரான போது பிறையூரிற் திருவாரூர் வடுகநாத தேசிகர் ஒருவரே தொல்காப்பியம் அறிந்தவர் இருக்கிறாரென்று கேள்வி யுற்றுத் தமது ஊரைவிட்டு அதிக திரவியச் செலவோடு அவ்விடம் போய் இரண்டு வருஷமிருந்து பாடங்கேட்டு வந்தமையானும், வரதப்ப முதலியார் ஒருவரே பின்பு அதனைத் தந்தைபாற் கேட்டறிந்தவரென்பதனானும், அது காரணமாக அவருக்குத் தொல்காப்பிய வரதப்ப முதலியாரென்று பெயர் வந்தமையானும், பின்பு அவர் காலத்திருந்த வித்துவான்கள் தமக்கு யாதாயினும் இலக்கண சமுசயம் நிகழ்ந்துழி அவரையே வினவி நிவாரணஞ் செய்தமையானும் நிச்சயிக்கலாம்.''[1] சுமார் கி பி. 1825-இல் தொல் காப்பியக் கல்வி நிலை இது.

முதன் முதலாக மழவை மகாலிங்கையர் ஆகஸ்டு 1847-இல் எழுத்து - நச்சினார்க்கினியத்தை வெளியிட்டார். வரலாற்றில் தொல்காப்பியம் முதன் முதல் அச்சில் வந்தது இப்பதிப்பு வழித் தான். சி.வை.தா.வைத் தவிர ஏனைய பதிப்பாசிரியர் பதிப்புரை எழுதுவதில்லை. முதற் பக்கமே பதிப்புரையாக அமையும். அந் நிலைதான் இம்முதற்பதிப்பிற்கும். சில வித்துவான்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க இப்பதிப்பு வந்துள்ளதாக எழுதியுள்ளார் (பதிப்பைப் பற்றிய முழுவிபரம் பின்பகுதியில் காண்க).

1858-இல் சாமுவேல் பிள்ளை என்பவர் வால்ற்றர் ஜாயீஸ் என்பவர் உதவியுடன் தொல்காப்பிய நன்னூல் என்ற தலைப்பில் தொல்காப்பியம் மூலமும், நன்னூல் மூலமும் தந்துள்ளார். இப் பதிப்பின் நோக்கத்தை ''இத்தேசத்தாரிடத்தில் ஐங்கிலியதுரைத் தனத்தார் கல்வி விருத்தி பண்ணி வருமுயற்சியினால், இனித் தமிழ் நாட்டின் நன்மைக்கென்று புது நூலியற்றுவோர்க்குப் பாஷை நடைகளின் பேதாபேதக் கியானத்திற்கு வேண்டிய தெளிவு'' எனத் தந்துள்ளார். நமக்குத் தொல்காப்பியம் மூலம் முழுவதும் அச்சில் கிடைத்தது இப்பதிப்பின் வழித்தான். மிகப்பெரிய நோக்கத் துடன் 'கிரந்தமந்தண கூடம்' (Tamil Museum and Review of

1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரை, சி.வை.தா. பதிப்பு, 1885, பதிப்புரை. பக். ரு.

Oriental Philology) என்ற ஒன்றைத் தொடங்கி சமஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம் மூன்றையும் இணைத்து 12 நூல்களுக்குமேல் வெளியிடப் போவதாக முன் பகுதியில் குறிப்பிட்டுள்ளார். பெரிய குறிக்கோள் ஒன்றும் நடைபெற்றதாகத் தெரியவில்லை. தமிழர்க்குக் கிடைத்த பயன் தொல்காப்பியம் முழுவதும் (மூலம்) அச்சில் வந்தது ஆகும். பதிப்பு வரலாற்றில் ஒரு மைல் கல்லாகவே இப்பதிப்பைக் கருதலாம். சுவடிகள் எங்கிருந்து கிடைத்தன; எத்தனை கிடைத்தன போன்ற செய்திகள் எதுவும் இதில் இல்லை.

1868-இல் எழுத்து—இளம்பூரணம்; சொல்-சேனாவரையம் ஆகியன வெளிவந்தன.

1885-இல் சி. வை. தா. பொருள் முழுவதையும் ஒரே தொகுதியாக வெளியிட்டார். இதில்தான் மிகத் தெளிவான பதிப்புரை எழுதியுள்ளார். அவர் பார்த்த ஏடுகள் பன்னிரண்டு. எங்கிருந்து கிடைத்தன என்பது பற்றிய சிறு குறிப்பு உண்டு. சாமிநாதையர் பதிப்புகளில் உள்ளதைப் போன்ற தெளிவு, பதிப்புரையில் எல்லாச் செய்திகளுக்கும் இல்லை. இருப்பினும் தமிழின் நிலை, சுவடிகளின் நிலை, தமிழ் கற்றோர் செய்ய வேண்டியவற்றையெல்லாம் தெளிவுறுத்துகிறார். பொருளதிகாரப் பதிப்பில் முதலாவதாக இது அமைகின்றது. பொருளதிகாரம் முழுவதற்கும் நச்சினார்க்கினியர் உரையென்றே கருதித்தான் இதை வெளியிட்டுள்ளார். 'பொருளதிகாரம் முற்றும். தொல்காப்பியம் நச்சினார்க்கினியம் முற்றும்' என்றுதான் குறிப்பிட்டுள்ளார். பொருளில் பின் நான்கு இயல்கள் பேராசிரியர் உரையே என்பதை ரா. ராகவையங்கார் பின்பு செந்தமிழில் எழுதித் தெளிவுபடுத்தினார். தொல்காப்பியப் பதிப்பு வரலாற்றில் சி. வை. தா. முக்கியப் பங்கு வகிக்கிறார். பொருள்; சொல்-சேனாவரையம்; சொல்-நச்சினார்க்கினியம் இவற்றை வெளியிட்ட பெருமை இவரைச் சாரும்.

1916, 1917-இல் பவானந்தம் பிள்ளையின் பொருளதிகாரப் பதிப்புகள் வந்தன. மிகப் பயனுடைய பதிப்புகள். சங்க இலக்கியப் பாட வேறுபாட்டுப் பதிப்புக்கு இப்பதிப்புகள் மிகுந்த துணை புரியும்.

நமச்சிவாய முதலியார் 1920களில் மூலப் பதிப்புகள், சொல்-இளம்பூரணம், பொருள்-அகம்-புறம் போன்றவற்றைப் பல சுவடிகளை ஒப்புநோக்கி வெளியிட்டுள்ளார். இவரின் தொல்காப்பிய ஈடுபாடு மிகவும் பாராட்டிப் போற்றற்குரிய ஒன்று.

புன்னைவனநாத முதலியார் 1922-இல் வெளியிட்ட மூலம் மட்டும் இங்கு நினைக்கத்தக்கது.

வ. உ. சிதம்பரம் பிள்ளை 1921 தொடங்கி 1936 வரை 15 ஆண்டுகள் எழுத்து—இளம்பூரணம், பொருள்—இளம்பூரணம் முழுவதையும் பல பகுதிகளாக வெளியிட்டுள்ளார். வையாபுரிப் பிள்ளையின் உதவி இவருக்குப் பொருள் பின்பகுதிகளைப் பதிப்பிக்கும்போது கிடைத்துள்ளது. இவர் பல சுவடிகளைப் பார்த்துப் பதிப்பித்துள்ளார். இவர் கருத்தின்படி இளம்பூரணரின் மூல உரைச் சுவடி ஒன்றுதான்; அதிலிருந்து பல பிரதிகள் தோன்றின என்பது. ஆயின் சாமிநாதையர் நூல் நிலையத்திலுள்ள 103-ஆம் எண் சுவடி, 'பொருள்—இளம்பூரணம்—களவியல் முதல் மெய்ப்பாட்டியல் 12-ஆம் நூற்பா முடிய' உள்ளது. இச்சுவடியில் அச்சில் இல்லாத சில பகுதிகள் உள்ளன.

1917-இல் ரா. ராகவையங்கார், செய்யுளியல் நச்சினார்க்கினியத்தை வெளியிட்டுள்ளது, நினைக்கத்தக்கது. இதுவே அந்நிலையில் முதல் பதிப்பாக அமைகின்றது.

1923-முதல் இன்றுவரை சைவ சித்தாந்தக் கழகம்தான் தொல்காப்பியப் பதிப்புகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது. மூலபாடப் பதிப்பு, உரைப்பதிப்புகள் எல்லாம் வெளியிட்டுள்ளது. தொடக்க காலங்களில் தி. த. கனகசுந்தரம் பிள்ளை, கந்தசாமியார், தேவநேயப்பாவாணர், சுந்தரமூர்த்தி போன்றோர் பதிப்பாசிரியராக இருந்து இக்கழகப் பதிப்புகள் வந்துள்ளன. இவர்களுடைய குறிப்புகள், விளக்கவுரைகள் பயனுடையன. வித்துவான். புலவர், பி.லிட்., முதுகலை போன்ற வகுப்புகளுக்குத் தொல்காப்பியம் பாடமாக உள்ளதால் தேவைப் பட்டபோதெல்லாம் மறுபதிப்புகள் வந்து கொண்டிருக்கின்றன.

தொடக்க காலப் பதிப்புகளில் சில சுவடிகளை ஒப்புநோக்கிப் பதிப்பித்தவை உண்டு. 1940க்குப் பின்பு வந்த பதிப்புகள் அனைத்தும் அச்சுநூலைப் பின்பற்றிப் பதிப்பித்தவையே. கழகம் நிறுவனமாக அமைந்துள்ளதால் பதிப்புகளைவெளிக்கொணர முடிகிறது. தொடக்க காலத்தில் முதற்பதிப்புகளாக அமைந்த சி. வை. தா. பதிப்புகள், நமச்சிவாய முதலியார் பதிப்புகள், பவானந்தர் கழகப் பதிப்புகள், வ. உ. சி. பதிப்புகள் போன்றவற்றை வெளியிட ஆட்கள் இல்லை. பதிப்புகள் தொடர்ந்து வருவதைப் பாராட்ட வேண்டும்; அதே வேளையில் கவனக்

குறைவால் மிகுதியான பிழைகளோடு வருகின்றன; அவற்றைச் சீர் செய்தால் மிகச் சிறப்பாக அமையும். சொல்—தெய்வச்சிலையார் உரையை 1929-இல் முதன்முதல் வெளியிட்டது கரந்தைத் தமிழ்ச் சங்கம். அவர்கள் மறுமுயற்சி செய்யவில்லை. கழகம் வெளி யிட்டுள்ளது. சொல்—கல்லாடனார் உரையைத் தெ. பொ. மீ. பதிப்பாசிரியராக மிகச் சிறந்த முன்னுரையோடு வெளியிட் டுள்ளமை நினைந்து போற்றத்தக்கது. இது ஆய்வு நெறிமுறை களில் அமைந்த பதிப்பு.

தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தில் தொல்காப்பியச் சுவடிகள் உள்ளதால் சில பதிப்புகள் அங்கிருந்து வந்துள்ளன. அவை செவ்வையான பதிப்புகள் எனக் கூறுவதற்கில்லை. கவன மின்மை மிகுதியால் பிழைகள் அதிகம் காணப்படுகின்றன.

**பதிப்பின் புறநிலை**

அச்சு, அமைப்பு போன்றவற்றைப் பதிப்பின் புறநிலையாகக் காணலாம்.

1. முதற்பதிப்புகளில் தொடக்க காலங்களில் நூற்பாவையும் உரையையும் ஒரே நிலை அச்சில் அமைத்தனர். நூற்பாவுக்கும் உரைக்கும் வேறுபாடு தெரியாது. ஆயின் நூற்பாவைத் தனி யாகவும் உரையைத் தனியாகவும் இடம்விட்டு அச்சேற்றிய தால் தெரியும்.

1847-இல் வெளிவந்துள்ள மகாலிங்கையர் பதிப்பிலிருந்து சான்று : நூற்பா 50.

குறுமையு நெடுமையு மளவிற்கோடலிற், றொடர் மொழி யெல்லா நெட்டெழுத் தியல

இஃதள பிறந்துயிர்த்தலுமென்னு நூன்மரபிற் சூத்திரத்திற்குப் புறநடையாய தன்கணிகழ்வ தோரைய மறுத்தல் கூறுகின்றது. என்னை உயிரு முயிர்மெய்யும் அளபிறந் திசைக்குங்கால் குறிலோ நெடிலோ விசைப்பதென மாணாக்கர்க்கு நிகழ்வதோரைய மறுத்தலின்

(அ) இவ்வாறு நூற்பா உரைநடை போன்று எழுதப் பட்டிருக்கும். உரையும் தொடர்ச்சியாக ஒரே வகை அச்சில் அமையும் (10 புள்ளி).

(ஆ) அச்சிலும் சில இடங்களில் ஏட்டைப் போன்று ா, ர வேறுபாடிருக்காது.

(இ) பக்க எண்கள், நூற்பா எண்கள் அனைத்தும் தமிழில் தரப்பெற்றிருக்கும்—சய—யசு—

(ஈ) பெரும்பாலும் அடிக்குறிப்புகள் இருக்காது. இப் பதிப்பில் பக். ௧௫௩ (153)இல் உரைப்பாடம்—'வெயிலிதழ்ப் பசுங்குடையென்றும் பாடம்' என்று எழுதியுள்ளார். எதற்குப் பாடம் என்று சொற்றொடரைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அவ் விடத்தில் உணர்த்தும் குறியீடு-* †-இருக்காது.

பக். ௧௯௭ (197) 'கிளையெழுத்தென்றும் பாடம் உண்டு' என்ற மூலபாடம் தந்துள்ளார். இந்த இரண்டு தான் அடிக்குறிப்பு.

(உ) பதிப்புரை, முன்னுரை, முகவுரை போன்றவை இருக்காது.

(ஊ) நூலுக்கெனத் தனிச்சிறப்புப்பாயிரம் சிலவற்றில் இருக்கலாம். இப்பதிப்பில் உண்டு.

(எ) தொல்காப்பியச் சூத்திரவகராதி நூலுக்கு முன்பே கொடுக்கப் பெற்றிருக்கும்.

2. 1858-இல் வந்த சாமுவேல் பிள்ளை பதிப்பிலிருந்து ஒரு சான்று, பக். ௨௩ (23).

ஏ Terminations.

72. ஏகாரவிறுதி ஊகாரவியற்றே. Compare 62; an and See Nunnool உயிரீற்றுப்புணரியல் 15. Ex. ஏக்கடிது, சேக்கடிது. & c. Special rule.

(இது உயிர் மயங்கியல் 72-ஆம் நூற்பா)

(அ) முழுவதும் ஒரே அச்சுவகை (8 புள்ளி)

(ஆ) தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதுதல். நோக்கம் தொல்காப்பியம் நன்னூல் ஒப்புமைதான். அதனால் முதல் ஒப்பியல் பதிப்பு.

(இ) ஒரு அடிக்குறிப்புக் கூடக் கிடையாது.

3. 1868 தொல் — எழுத்து — இளம்பூரணம், சுப்பராயச் செட்டியார் பதிப்பு, பக். உஉ (22).

உ ஊ ஒ ஓ ஔவென விசைக்கு
மப்பாலைந்து மிதழ்குவிந்தியலும் (10 புள்ளி)

என்னின். இதுவுமது உ ஊ ஒ ஓ ஔவெனச் சொல்ல விசைக்கு மக்கூற்றைந்தும் இதழ் குவித்துச் சொல்ல நடக்கும் எ-று. (8 புள்ளி)

(அ) நூற்பாவுக்கும் உரைக்கும் வெவ்வேறு அச்சுநிலை.

(ஆ) அடிக்குறிப்புகள் உள.

4. 1868-இல் வந்த சி. வை. தா. சொல்-சேனாவரையம் பதிப்பில் நூற்பா அமைப்பில் நூற்பா (10 புள்ளி). உரை 8 புள்ளி. அடிக்குறிப்புகள் உள.

5. 1922-இல் வெளிவந்த நமச்சிவாய முதலியார் மூலப்பதிப்பு, மிகத் தெளிவான அச்சிலமைந்துள்ளது. பக். 7.

48. ய-ர-ழ என்னு மூன்று *மொற்றக்
க-ச-த-ப ங-ஞ-ந-ம ஈரொற்றாகும்

அடிக்குறிப்பில் ‘முன்னொற்ற’* எனவும் பாடம் என எழுதுகிறார்.

(அ) பக்க எண்கள் ஆங்கில முறையில் தரப்பெற்றன.

(ஆ) அடிக்குறிப்புகளில் தெளிவாகப் பாடவேறுபாடுகளைத் தந்துள்ளார்.

(இ) உரையாசிரியர் பாட வேறுபாட்டைக் கூடத் தருகிறார். பக். 67.

உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே
அஃறிணை யென்மனார் அவரலபிறவே
ஆயிரு திணையின் *இசைக்குமன் சொல்லே

* இசைக்குமன—சேனாவரையர்.

(ஈ) நூற்பா நுவல்பொருளை நூற்பாவின்மேல் தருதல் காணப்படுகிறது.

6. 1922-இல் வெளிவந்துள்ள தொல்-மூலம். புன்னைவனநாத முதலியார் பதிப்பில்

(அ) மிகத் தெளிவான பதிப்புரை. (ஆ) பக்க எண்கள் ஆங்கில முறையில். (இ) நூற்பா எண்கள் 1—1610 வரை. தொல்காப்பியம் முழுமை என்ற உணர்வு இப்பதிப்பில் ஏற்படுகிறது. (ஈ) சூத்திரவகராதி, முன்பகுதியில் முன்பு தரப்பெற்றது. இப்பதிப்பில் நூலின் பின்பகுதியில் அமைக்கப் பெற்றுள்ளது. (உ) நூற்பா நுவல் பொருள் தருதல் காணப் படுகிறது.

7. 1943-இல் வெளிவந்துள்ள கழக மூலபாடப் பதிப்பில் அடிக் குறிப்பின் வளர்ச்சி நிலையைப் பார்க்கிறோம்.

(அ) பதிப்புரை. (ஆ) பக்க எண்கள் தமிழில். (இ) நூற்பா எண்கள் ஆங்கில முறையில், 1—1610 வரை தொடர் எண்கள். (ஈ) ஒவ்வொரு இயலுக்கும் அந்த இயல் நூற்பா எண்கள் தமிழில் வலப்பக்கத்தில், பக் கச (14).

* அகர இகரம் ஐகாரமாகும்
† அகர உகரம் ஔகாரமாகும்
‡ அகரத்திம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்

**அடிக்குறிப்பில்**

(பா. வே.) * அகர இகரம் எகரமாகும்
† அகர உகரம் ஒகரமாகும்
‡ இந்நூற்பாவினையடுத்து,

அகரத் திம்பர் வகரப் புள்ளியும்
ஔவென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்

இவ்வாறு தம் விருப்பம் போல் நூற்பாக்களை எவ்விதச் சான்று மின்றி உருவாக்கித் தரும் நிலை இப்பதிப்பில் வளர்ந்தது.

கிளை—உறுப்பாகிய எழுத்து, மெய்-வடிவு போன்ற சொற்பொருள் எழுதும் நிலை அடிக்குறிப்பில் வளர்ந்தது.

8. 1943-இல் வெளிவந்துள்ள தொல்காப்பியம் பொருளதிகாரம்—இரண்டாம் பாகம்—பின்னான்கியல்களும் பேராசிரியமும் யாழ்ப்பாணம் கணேசையர் உரைவிளக்கப் பதிப்பு.

(அ) முகவுரை. (ஆ) உரையாசிரியர் வரலாறு. (இ) நூல் சிறப்புப்பாயிரம். (ஈ) பிழைதிருத்தம். (உ) ஒவ்வொரு இயலுக்கும் சுருக்கம். (ஊ) இயல்உரை. (எ) உதாரணச் செய்யுளுரை. (ஏ) சூத்திரமுதற் குறிப்பகராதி. (ஐ) உதாரண அகராதி. (ஒ) அரும்பத முதலியவற்றின் அகராதி என அமைந்துள்ளது.

நூற்பா தனிஅச்சு (14 புள்ளி); உரை தனிஅச்சு (10 புள்ளி); அடிக்குறிப்பு தனிஅச்சு (8 புள்ளி); சான்றுப் பாடல்கள் தனி அச்சு (thick / அழுத்தம்—10 புள்ளி). இது, மிகத் தெளிவாக எல்லாச் செய்திகளும் புலப்படும்படியாக அமைந்துள்ளது.

இவ்வெட்டுச் சான்றுகளும், அச்சு, அமைப்புப் போன்ற புற நிலைகள் தொல்காப்பியப் பதிப்புகளில் அமைந்த விதத்தையும், காலந்தோறும் அவற்றில் ஏற்பட்ட மாற்றம் வளர்ச்சி ஆகியவற்றை யும் விளக்குகின்றன.

**பதிப்பின் அகநிலை வளர்ச்சி**

1. தொடக்க காலங்களில் முன்னுரை, முகவுரை, பதிப்புரை போன்றவை இல்லாமல் இருந்தன. பிற்காலப் பதிப்புகளில் அது உருவாயிற்று. வளர்ந்தது.

2. உரையாசிரியர் வரலாறு தொடக்ககாலப் பதிப்புகளில் இல்லை. பின்பு எழுதினர். தெளிவுபடுத்தினர். சான்றுகள் கொண்டு நிறுவும் நிலை ஏற்பட்டது. 1885—சி. வை. தா. பொருளதி காரத்தில் உரையாசிரியர் பற்றிய வரலாறு இல்லை. 1985ஆம் ஆண்டு கு. சுந்தரமூர்த்தியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள பதிப்பில் முன்னுரை, பதிப்புரை, ஆராய்ச்சி முன்னுரை என வளர்ந்தது. பேராசிரியர் பெயரில் ஐவர் (பக். iii) உள்ளனர் என்பது உரைக்கப் பெற்று, தெளிவு பெற முயற்சி நடைபெற்றுள்ளது. இது 100 ஆண்டுகளில் ஏற்பட்டுள்ள ஆய்வறிவின் வளர்ச்சி எனலாம்.

3. ஒவ்வொரு இயலுக்கும் பொருளமைப்பு என அவ்வியலின் கருத்துகளைத் தொகுத்துத் தருதல் என்ற நிலை பின்புள்ள பதிப்புகளில் உண்டு. முன்பு இல்லை.

4. தொடக்ககாலப் பதிப்புகளில் பாடவேறுபாடுகள் பற்றிய சிந்தனை இல்லை. பிற்காலப் பதிப்புகளில் பாடவேறுபாடுகள்

பற்றிய எண்ணம் வளர்ந்தது. எப்பாடம் சிறந்தது என்ற நிலையும் உருவாயிற்று.

(அ) 1868-இல் சி. வை. தா. சொல்—சேனாவரையத்தை வெளியிட்டார். பதிப்புரை கூட இல்லை, 1966-இல் கு. சுந்தரமூர்த்தி சொல்-சேனாவரையத்தை வெளிக் கொணர்ந்தார்; 1970-இல் இரண்டாம் பதிப்பும் 1989-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் மூன்றாம் பதிப்பாக, மறுபதிப்பாகவும் வெளியிட்டுள்ளது. அதில் சேனாவரையரின் உரைத்திறன், வடமொழிப் பயிற்சி போன்றவற்றை 35 பக்கங்களில் ஆராய்ச்சி முன்னுரையாகத் தந்துள்ளார். அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகளைக் குறிப்பிட்டுள்ளார்.

(ஆ) 1929-இல் சொல்-தெய்வச்சிலையார் உரை கரந்தைத் தமிழ்ச் சங்கத்தினரால் வெளியிடப் பெற்றது அதில் அடிக்குறிப்பில் சில இடங்களில் பாடவேறுபாடுகள் குறிக்கப் பெற்றுள்ளன. 1963-இல் சுந்தரமூர்த்தியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, கழகம் வெளியிட்டுள்ள தெய்வச்சிலையார் உரைப்பதிப்பில் ஆராய்ச்சி முன்னுரையாக 16 பக்கங்கள் எழுதியுள்ளார். அதில் பக். 22-இல் தெய்வச்சிலையார் மட்டும் தனித்த முறையில் கொண்டுள்ள பாடங்களைத் தொகுத்துத் தந்துள்ளார்.

5. நூற்பா நுவலும் பொருளை நூற்பாவின்மேல் தரும் பழக்கம் தொடக்ககாலப் பதிப்புகளில் இல்லை. முதலில் மூலபாடப் பதிப்புகளில் நுவல்பொருள் எழுதினர். பின் உரைப்பதிப்புகளிலும் அப்பழக்கம் வந்துவிட்டது.

**சான்று :**

[மாத்திரை இன்னதென்பது] —நமச்சிவாய முதலியார், 1922.
மாத்திரைக்கு அளவு கூறுவது —புன்னைவனநாத முதலியார், 1922.
மாத்திரைக்கு அளவு —கழகமூலம், 1943.
மாத்திரைக்கு அளவு —உரைப்பதிப்பு, 1944.

1929, தெய்வச்சிலையார் உரைப்பதிப்பில் மட்டும் நூற்பா நுவல் பொருள் நூற்பாவிற்குக் கீழே தரப்பெற்றுள்ளது. கணேசையர் போன்றோர் இந்நுவல் பொருளுக்குச் சொற்களை உரையாசிரியரிடமிருந்து எடுத்துக் கூறியுள்ளனர்.

6. தொடக்ககாலப் பதிப்புகளில் சந்தி பிரிக்காது நூற்பாக்கள் எழுதப் பெற்றன. பிற்காலப் பதிப்புகளில் பிரித்தெழுதினர்.

அவைதாங்; குற்றியலிகரங் குற்றியலுகர, மாய்த மென்ற; முப்பாற்புள்ளியு மெழுத்தோரன்ன-1847இல் பதிப்பு.

அவை தாம்
குற்றியலிகரம் குற்றியலுகரம்
ஆய்தமென்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன—1922இல் பதிப்பு.

மர்ரே ராஜம், புலியூர்கேசிகன் போன்றோர் 'பொது மக்க'ளுக்காகத் தொல்காப்பியத்தை வெளியிட்டதால் முழு நிலையில் சந்தி பிரித்தே பதிப்பித்தனர்.

7. அடிக்குறிப்புகள் இல்லாமல் இருந்த முதற்காலம்; அடிக்குறிப்புகளில் பாடவேறுபாடு மட்டும் குறிப்பிட்டது அடுத்த நிலை; அடிக்குறிப்பில் சொற்பொருள், இலக்கணக் குறிப்பு போன்றவை தருதல் எனப் பிற்காலம் வளர்ச்சி காட்டிற்று.

தங்கள் கருத்துகளைத் தெளிவுபடுத்துவதற்காகச் செய்திகளை மிகுதியாகவும் தந்தனர், அடிக்குறிப்பில்.

எழுத்து—நச்சர்—கழகம்—தேவநேயப் பாவாணர், 1950. பக். 53.

சகரம் மொழிக்கு முதலாகாது என்பது தொல்—நூற்பா; வரும் என்பது (பாவாணர்) கருத்து. அதற்கு முழுநிலை விளக்கமாக அடிக்குறிப்புத் தரப்படுகிறது. இதனைக் கொண்டு

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ ஐ ஔவெனும் மூன்றலங்கடையே

என்ற நூற்பாவிற்கு, இரண்டாம் அடி " 'அவை ஔ என்னும் ஒன்றலங்கடையே' என்று பாடவேறுபாடும் உள்ளது" என எழுதுகிறார். எங்குள்ளது, எச்சுவடியில், எப்பதிப்பில் என்ற குறிப்பில்லை.

8. தொடக்ககாலப் பதிப்புகளில் நூற்பா முதற்குறிப்பகராதி மட்டும் முன் பகுதியில் தந்தனர். பின்பு, அதைப் பின்பகுதிக்கு மாற்றினர். அதோடு, மேற்கோள் அகராதி, அருஞ்சொல் முதலியவற்றின் அகராதி போன்றவற்றைச் சேர்த்தனர். 1985இல் வந்த செய்யுளியல்—இளம்பூரணர் உரை, அடிகளாசிரியர், தமிழ்ப் பல்கலைக் கழகம்; 1988இல் வந்த சொல்—இளம்பூரணம், அடிகளாசிரியர், தமிழ்ப் பல்கலைக் கழகம் ஆகிய இரு பதிப்புகளிலும் 'நூற்பா—சொல்லகராதி' தரப் பெற்றுள்ளது மிகவும் பாராட்டற்குரியது. இவர் மட்டுந்தான் 'நூற்பா—சொல்லகராதி' தந்துள்ளார்.

# தொல்காப்பியப் பதிப்பு வகைப்பாடு

பதிப்புகள் பல வகைப்படும். உலக மொழிகள் அனைத்திலும், உலக இலக்கியங்கள் அனைத்திலும் இந்நிலை உண்டு. தொல்காப்பியப் பதிப்புகளைக் கீழ்வருமாறு அமைத்துக் காணலாம்

1. மூலப் பதிப்புகள்
2. உரைப் பதிப்புகள்
3. ஒப்பியல் பதிப்புகள்
4. மொழிபெயர்ப்புப் பதிப்புகள்
5. உரைவளப் பதிப்புகள்
6. பிறநிலைப் பதிப்புகள்

## 1. மூலப் பதிப்புகள்

மனனம் செய்வதற்காக மூலப்பதிப்புகள் மட்டும் தோன்றியிருக்கலாம். நோக்கம், அடிக்கடி படித்து மனப்பாடம் செய்தல். திரும்பத் திரும்ப, மாடு தின்ற உணவை வெளிக்கொணர்ந்து அசை போட்டு அசை போட்டுச் சீரணிக்கச் செய்தல் போல, படித்த பாடங்களை, மூலத்தை மறுபடியும் மறுபடியும் சிந்தித்துப் புதிப தெளிவுகளையும் விளக்கங்களையும் பெறுவதற்கு மனப்பாடம் செய்யும் முறை பயனுடையதாக அமையும். சான்றாகத் திருக்குறளைச் சொல்லலாம்.

''இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல் குலனுடையான் கண்ணே யுள'' என்ற குறளை மறுபடியும் மறுபடியும் நினைக்கும் போது 'இலன் என்னும் எவ்வம் உரையாமை'—யார் உரையாமை என்ற எண்ணம் வரும். ஒருவன் நம்மிடம் வந்து தன் தேவையைக் கூறுவதற்கு முன்பே அவனுக்குப் பொருள் தருதல் மிகப்பெரிய சிறப்பு. இதுதான் முதல் நிலைப் பொருளாகக் கொள்ளலாம்.

இரண்டாவது, நம்மிடம் பொருள் பெற்ற பின்பு இன்னொருவரிடம் சென்று 'இலன் என்னும் எவ்வம் உரையாது' அவனுக்குத் தேவை யான முழுப்பொருளையும் முழு நிலையில் தருவது. இது அடுத்த நிலை. "கரப்பவர்க்கு யாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர் சொல்லாடப்போம் உயிர்"—என்ற குறளை நினைவிலிருத்தும் போது கேட்பவன் கேட்பதற்குமுன், தன் இல்லாமையை உணர்ந்து வதற்கு முன், நாணத்தால் வெட்கத்தால் உயிர் போய்விடுமே— கேட்டவர்களுக்கு வைத்துக் கொண்டு இல்லை என்று சொல்லும் போது சொல்பவன் உயிர் எங்கு ஒளிக்கும் என்று கேட்கின்றார். அந்நிலையில் பெறுபவன் 'இலன் என்னும் எவ்வம் உரையாமை' மட்டுமன்று, கொடுப்பவனும் இலன் என்னும் எவ்வம் உரையாது தரல்வேண்டுமென்பது மூன்றாவது பொருள். தனக்குப் போகத் தானம் என்ற நிலை பிற்காலத்தில் தோன்றிய ஒன்று. தனக்கென வாழா பிறர்க்கென வாழும் நிலை முற்காலத்தில் இருந்தது. அதனால் தனக்குப் போக மீதத்தைக் கொடுக்க வேண்டும். கொடுப்பவன் தான் கொடுத்துவிட்டு, தான் பிறனிடம் சென்று இலன் என்னும் எவ்வம் உரைக்கக்கூடாது என்பது நான்காவது பொருள்.

இந்நிலையில் நூல் மூலத்தை மட்டும் மறுபடியும் மறுபடியும் மனப்பாடம் செய்து சிந்திப்பதற்காக மூலப் பதிப்புகள் தோன்றின. திருக்குறள் நிலையும் இதுதான். கம்பன் நிலையும் இதுதான். சிலம்பு நிலையும் அவ்வாறே. சேக்ஸ்பியர் மூலப் பதிப்புகளும் இந் நிலைதான். ஒரு நூலின் மூலப்பதிப்புகள்—கையடக்கமாகச் சிறிய அளவில் அமைந்தால்—எல்லா இடங்களுக்கும் பயணம் செய்யும் போது எடுத்துச் செல்லலாம். அடிக்கடி நினைவு படுத்திக் கொள்ளலாம். அந்நிலையில் மூலப் பதிப்புகள் தோன்றின.

தொல்காப்பியம் உரிச்சொல்லியலில் அடிச்சொற்களுக்குப் பொருள் தருகின்றது. ஒரு கருத்துக்கு ஒரு நூற்பா அமைகின்றது. 'வய வலியாகும்' 'வாள் ஒளியாகும்' என்பன தனித்தனி நூற்பாக் கள். இடைச்சொல்லியலில் இவ்வாறு பொருள் விளக்கந்தரும் நூற்பாக்கள் அமைகின்றன. சான்றாகக் 'கொல்லே ஐயம்' 'எல்லே இலக்கம்' என்பன. கொல் என்ற சொல் ஐயப்பொருளில் வரலாம் என்பது ஒருநிலை. கொல் என்றாலே ஐயம் என்ற பொருளும் இருந்திருக்க வேண்டும். காரணம் எல் என்பது இலக்கம் என்ற பொருளைத் தருவதால். இங்கு 'எல்லே இலக்கம்' என்ற நூற்பாவுக்குப் பல பாடவேறுபாடுகள் உள்ளன. எல்லே

விளக்கம், எல்லே இயக்கம், எல்லே இரக்கம் என்பன. இது மட்டு மன்று; இவ்விரண்டு நூற்பாக்களையும் ஒரே நூற்பாவாகத்தான் உரையாசிரியர் இளம்பூரணர் செய்யுளியல் 206ஆம் நூற்பாவுக்கு உரையெழுதும்போது தருகிறார். ‘கொல்லே யையம் எல்லே யியக்கம்’—என இவ்வாறு மறுபடியும் மறுபடியும் படிக்கும்போது எதுகை, மோனை, ஓசை அமைப்புகள் போன்றவை நினை வாற்றலை ஒருநெறிப்படுத்துகின்றன. அதனால் மனப்பாடம் செய்யும் அடிப்படை முதல் நோக்கத்திற்காக மூலப் பதிப்புகள் தோன்றியிருக்க வேண்டும். அந்நிலையில் தொல்காப்பியத்திற்கு மூலப் பதிப்புகள் தோன்றின. முதன் முதலில் தொல். முழு வதையும் மூலமாகத் தந்தது 1859இல் வெளிவந்த சாமுவேல் பிள்ளை பதிப்புதான். ஆனால் நன்னூலையும் இணைத்துத் தந்துள்ளார். தொல்காப்பியம் வேறு—நன்னூல் வேறாக அமைந் தாலும் நோக்கம் ஒப்புமைப் படிப்புத்தான்.

இந்நிலையில் தொல்காப்பியத்திற்குத் தனி மூலப் பதிப்பை நமச்சிவாய முதலியார் 1922 மார்ச்சில் எழுத்து, சொல்லை வெளி யிட்டார். 1924இல் பொருளைத் தனியாக வெளியிட்டுள்ளார். ஆயின் 1922 மே மாதம் எழுத்து—சொல்—பொருள் மூன்றையும் முழுவதுமாகப் புன்னைவனநாத முதலியார் வெளியிட்டார். இருவருமே பல சுவடிகளைப் பார்த்து வெளியிட்டுள்ளனர். சுவடி களிலுள்ள மூலபாட வேறுபாடுகளை அடிக்குறிப்பில் இருவரும் தந்துள்ளனர். புன்னைவனநாத முதலியார் தெளிவான விளக்க முன்னுரையும் எழுதியுள்ளார். உரையாசிரியர் பலர் விளக்கத் திற்குத்தக மூலநூற்பாக்களின் எண்ணிக்கை வேறுபடுகின்றது. 1595 முதல் 1610 வரை நூற்பாக்கள் வேறுபடும் நிலை அமை கின்றது. இவற்றையெல்லாம் சுட்டியுள்ளார். புன்னைவனநாத முதலியார் பதிப்பு கையடக்கப் பதிப்புதான். ($10\frac{1}{2}$—16 செ. மீ)

1943இல் சைவ சித்தாந்தக் கழகம் தொல்காப்பியம்—மூலப் பதிப்பை அதைக் காட்டிலும் சிறப்பாகவும் சிறிய அளவிலும் ($9\frac{1}{2}$—$14\frac{1}{2}$ செ. மீ.) வெளியிட்டுள்ளது. இதில் மூலம், பாடவேறுபாடுகள், இலக்கணக் குறிப்புகள், சொற்பொருள், சிறிய விளக்கங்கள் போன்றவை அமைந்துள்ளன. வந்துள்ள மூலப் பதிப்புகளில் இதுதான் முதல் நிலை உடையது.

1960இல் மர்ரே எஸ். ராஜம் தொல்காப்பிய மூலத்தைப் பல அறிஞர் இணைந்த குழுவின் பரிசோதனைக்குப் பின்பு சந்தி பிரித்து

சாதாரண மக்களுக்கும் புரியும்படி வெளியிட்டார். பொதுமக்கட் பதிப்பு, மலிவுப் பதிப்பு (popular edition, cheap edition, mass edition) போன்ற நிலைகளில் இப்பதிப்பு அமைந்தாலும் இறுதியில் பாடவேறுபாடுகளைத் தனியாகக் கொடுத்துள்ளனர். அது அந்நிலையில் ஆய்வறிஞர்க்கும் பயன்படும்.

மர்ரே. ராஜம் முக்கியமான தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் இதுபோன்று பொதுமக்களுக்காக மிகக் குறைந்த விலையில் வெளியிட்டார். தொல்காப்பியம்—மூலம் 1960இல் ஒரு ரூபாய்க்குக் கிடைத்தது. இந்நிலையில் முன்னும் பின்னும் கிடைத்ததில்லை. இனி அதற்கு வாய்ப்பே இருக்காது எனத் தோன்றுகிறது.

## 2. உரைப் பதிப்புகள்

உரைப் பதிப்புகளை இரண்டு நிலைகளில் அமைக்கலாம். (அ) மரபுரையாசிரியர் உரைப் பதிப்புகள்; (ஆ) தங்கள் எண்ணத்திற்குத்தக விளக்கம் தரும் பிற்காலப் புத்துரைப் பதிப்புகள் என அமைக்கலாம்.

### (அ) மரபுரைப் பதிப்புகள்

இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார் என்போர் மரபுரையாசிரியர். தொல்—சொல்—உரைக்கோவை 1963இல் ஆபிரகாம் அருளப்பன், வி. ஐ. சுப்பிரமணியம் வெளியிடும்போது பழஞ்சுவடியில் உள்ள ஒரு உரையை அரசு உரை எனக் குறிப்பிட்டு வெளியிட்டுள்ளனர். இதனையும் மரபுரையில் சேர்க்கலாம். சொல்—கல்லாடனார் உரையை வெளியிடும்போது இப்பழைய உரையையும் சேர்த்து வெளியிட்டுள்ளனர். இவ்வுரை கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியலில் 13 நூற்பாக்கள் வரையே உள்ளதாக வெளியிட்டுள்ளனர். ஆயின் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்திலுள்ள 48ஆம் எண்ணுள்ள சுவடியில் இப்பழைய உரை சொல்—முழுவதற்கும் உள்ளது. இதுவரை வெளி வரவில்லை. வெளிக்கொணர்வது தேவை. செய்திகளைப் பல நிலைகளில் தெளிவாக விளக்கியுள்ளார்.

மூல நூலாசிரியனுக்கும் கற்போனுக்கும் காலஇடைவெளி மிகுதியாகும்போது மூல நூலாசிரியனின் கருத்தைத் தெளிவுபடுத்த ஆசிரியர் விளக்கத்துடன் தெளிவுபடுத்திய, உரைத்த செய்திகளே

உரைகள். தொல்காப்பியர் காலம் கி. மு. முதல் நூற்றாண்டாக இருக்கலாம் என்பது பொதுக்கருத்து. அவர் காலத்தில் உரைகள் தேவைப்படவில்லை. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இளம்பூரணர் தொல்காப்பிய மூலத்தை விளக்கினார். அவர்தான் தொல்காப்பிய முதல் மரபுரையாசிரியர். அதனால் அவரை உரையாசிரியர் என்றே அழைத்தனர். தொல்காப்பியம் முழுவதற்கும் உரையெழுதியுள்ள உரையாசிரியர் அவர் ஒருவரே.

**எழுத்து**

தொல்—எழுத்திற்கு இன்று கிடைக்கும் உரைகள் இளம் பூரணரும், நச்சினார்க்கினியரும் உரைத்தவை.

இவற்றின் நச்சினார்க்கினியர்—எழுத்ததிகார உரைதான் முதன் முதலில் 1847இல் மழவை மகாலிங்கையரால் பதிப்பிக்கப் பெற்றது. 1868இல் சுப்பராயச் செட்டியாரால் எழுத்து—இளம் பூரணம் வெளிவந்தது. ஏட்டில் இருந்ததை அவ்வாறே பதிப்பித் தனர் முதற்பதிப்பில். உரைநடை போன்றே நூற்பாக்களும் உரையும் அமைந்துள்ளன. பிற்காலத்தில் நச்சர் உரையைச் சி. வை. தா. 1891இல் பதிப்பித்தார். இவரும் பல ஏடுகளை ஒப்பு நோக்கிப் பதிப்பித்துள்ளார். நூற்பா அமைப்பு முறையில் நூற்பாக்கள் உள்ளன. அடுத்து 1923இல் கழகத்தின் வழி, திருகோணமலை த. கனகசுந்தரம் பிள்ளை பல சுவடிகளைக் கொண்டு ஆய்ந்து பதிப்பிக்க, கா. சு. பிள்ளையின் ஆங்கில, தமிழ் முகவுரையுடன் வந்தது. 1944இல் எழுத்து—நச்சர் உரையைத் தேவநேயப் பாவாணர் விளக்கக் குறிப்புடன் கழகம் வெளியிட் டுள்ளது. இப்பதிப்புப் பல திருத்தங்களைப் பெற்று புதிய கருத்து களையும் கொண்டுள்ளது. இதற்குப் பல மறு பதிப்புகள் வந்துள்ளன.

1937இல் யாழ்ப்பாணம் கணேசையரின் விளக்கக் குறிப்பு களுடன் எழுத்து—நச்சினார்க்கினியம் வெளிவந்தது. இதற்குமுன் பல பதிப்புகள் வந்து விட்டதால், இவர் அவற்றை ஒப்புநோக்கி ஏடுகளையும் பார்த்து செவ்விய முறையில் இப்பதிப்பை அமைத் துள்ளார்.

1965இல் கு. சுந்தரமூர்த்தி எழுத்து—நச்சினார்க்கினியத்தை முந்தைய பதிப்புகளிலுள்ள பிழைகளை நீக்கி நன்முறையில் வெளி யிட்டார். 1967இல் தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையச் சுவடி

களை அடிப்படையாகக் கொண்டு, எழுத்து—நச்சர் உரையை இராம. கோவிந்தசாமிப் பிள்ளை பதிப்பித்துள்ளார். இவ்வாறாக எழுத்து—நச்சர் உரையை 1847 முதல் 1967 வரை எழுவர் பதிப்பித்துள்ளனர்.

எழுத்து—இளம்பூரணத்தை 1868க்குப் பின்பு 1928இல் வ.உ.சி. பதிப்பித்தார். இவரும் சுவடிகளை ஒப்புநோக்கிப் பதிப்பித்தவருள் ஒருவர். அடுத்து 1955இல் கழகம் தேவநேயப் பாவணர் உரைக் குறிப்புகளுடன் வெளியிட்டது. 1969இல் அடிகளாசிரியரும், கு. சுந்தரமூர்த்தியும், தனித்தனியாக எழுத்து—இளம்பூரணத்தைப் பதிப்பித்தனர். ஐந்து பதிப்புகள் எழுத்து—இளம்பூரணத்திற்கு வந்திருந்தாலும், மிகத் தகுதியுடைய பதிப்பாக 1969இல் வந்த அடிகளாசிரியர் பதிப்பைக் குறிப்பிடலாம்.

**சொல்**

சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார், பெயர் தெரியாத பழைய உரை என அறுவர் உரை எழுதியுள்ளனர். முற்றும் வெளிவராத ஒன்றாக இந்த ஆறாமவர் உரை உள்ளது.

'எழுத்துக்கு இளம்பூரணம் சொல்லுக்குச் சேனாவரையம்' என்று கூறுவது பொதுவழக்கு. சொல்லுக்குச் சேனாவரையர் உரைதான் முதன் முதலில் வெளிவந்தது. செப்டம்பர் 1868இல் சி.வை.தா., ஆறுமுக நாவலர் பல ஏடுகளை ஆராய்ந்துத் தயாரித்ததை வெளியிட்டார். நவம்பர் 1868இல் கோமளபுரம் இராச கோபாலப் பிள்ளை சேனாவரையத்தை வெளியிட்டார்.

சொல்லதிகார நூற்பா எண்ணிக்கை 463; சி. வை. தா. பதிப்பில் 463 ஆகவும் இராசகோபாலப் பிள்ளை பதிப்பில் 429 ஆகவும் உள்ளது. ஏட்டில் இருப்பதை அவ்வாறே அச்சிட்டுள்ளார் இராசகோபாலப் பிள்ளை. சேனாவரையர் உரையெழுதும்போது நான்கு நூற்பாக்களுக்கும் சேர்த்து உரையெழுதி, 'இவை நான்கு சூத்திரம்' என்றெழுதுவார். பதிப்பித்தவர் அதே போன்று பதிப்பித்துள்ளார். அதனால் எண்ணிக்கை வேறுபாடு அமைந்துள்ளது. 1923இல் கந்தசாமியார் சுவடிகளைக் கொண்டு ஒப்பு நோக்கிய சேனாவரையத்தைக் கழகம் வெளியிட்டது. பின்பு வந்த பதிப்புகளில் தேவநேயப் பாவாணர் குறிப்புரை சேர்த்து வெளியிடப் பெற்றது. சேனாவரையர் உரைக்கு விளக்கங்கள் தேவைப்

பட்டதால் ஆ. பூவராகம் பிள்ளை விளக்கவுரையுடன் கழகம் வெளியிட்டது. இதன் மறுபதிப்புகள் 1946, 1952, 1956, 1959, 1962, 1966, 1970, 1974 இவ்வாறு பல வந்துள்ளன.

1938இல் யாழ்ப்பாணம் கணேசையரின் உரைவிளக்கக் குறிப்புகளுடன் சேனாவரையம் வெளிவந்தது.

1966இல் கு.சுந்தரமூர்த்தி இதுவரை வந்துள்ள சேனாவரையம் அச்சுப் பதிப்புகளை ஓரளவு ஒப்புநோக்கி விரிவான பதிப்புரையுடன் வெளியிட்டுள்ளார்.

1934இல் ஆறுமுக நாவலர் சேனாவரையர் உரைப்பதிப்பு ஒன்று வந்துள்ளது. அதனைச் சி.வை. தாவின் 1868இன் இரண்டாம் பதிப்பாகக் கொள்வது உண்டு.

சொல்—சேனாவரையம் தமிழ்ப் புலவர், வித்துவான், முதுகலை இவ்வகுப்புகளுக்குப் பாடமாக அமைந்ததால் பலர் பதிப்பித்தனர். பல மறு பதிப்புகளும் வந்துள்ளன.

1892இல் சொல்—நச்சினார்க்கினியத்தைச் சி.வை. தா. முதன் முதலில் வெளியிட்டார். பின்பு 1941இல் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, பவானந்தர் கழகப் பதிப்பாகப் பல சுவடிகளை ஒப்பு நோக்கி ஆய்ந்து சிறந்த பதிப்பாக அமைத்தார். 1944இல் தேவநேயப் பாவாணர் குறிப்புரையுடன் சொல்—நச்சினார்க்கினியத்தைக் கழகம் வெளியிட்டுள்ளது. 1962இல் கு. சுந்தரமூர்த்தி எழுதிய விளக்கவுரையுடன் கழகம் நச்சினார்க்கினியத்தை வெளியிட்டது.

அறுபதுகளில் மரபுரைகளுக்கு விளக்கவுரை எழுதும் பழக்கம் ஏற்பட்டது. இவ்விளக்கவுரையை, அந்தந்த நூற்பாக்களின் கீழே தராமல், பின்பகுதியில், தனியாக ஒரு தனிநூல் போன்று அச்சிட்டு வெளியிட்டுள்ளதால் பெரும்பயன் விளைந்ததாகக் கூறுவதற்கில்லை.

1962இல் தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையத்திலுள்ள சுவடிகளைக்கொண்டு ஒப்புநோக்கி, சொல்-நச்சினார்க்கினியத்தை இரா. கோவிந்தசாமிப்பிள்ளை குறிப்புகளுடன் வெளியிட்டுள்ளார்.

1892 முதல் 1962 வரை 70 ஆண்டுகளில் சொல்— நச்சினார்க்கினியம் நான்கு பதிப்புகளைக் கண்டுள்ளது. குறிப்பிடத்தக்க பதிப்பு, 1941இல் வந்த பவானந்தர் கழக மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பே.

இளம்பூரணர் முதல் உரையாசிரியராக இருந்தாலும் அவரின் சொல்லதிகார உரை, சேனாவரையம் (1868) நச்சினார்க்கினியம் (1892) இவைகளுக்குப் பின்பு, 1927-இல் நமச்சிவாய முதலியாரால் வெளியிடப்பெற்றது. அதனால் இப்பதிப்பில் சேனாவரையர் உரையாசிரியரை மேற்கொண்டும் மறுத்தும் கூறுமிடங்கள் என 54 இடங்களை 21 பக்கங்களில் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். அதே போன்று நச்சினார்க்கினியர் உரையாசிரியரை மேற்கொண்டும் மறுத்தும் கூறும் இடங்கள் என 10 இடங்களைச் சுட்டியுள்ளார்.

1963-இல் சொல் - இளம்பூரணத்தைக் கு. சுந்தரமூர்த்தி எழுதிய விளக்கவுரைக் குறிப்புகளுடன் கழகம் வெளியிட்டுள்ளது.

செப்தம்பர் 1988-இல் சொல்—இளம்பூரணத்தை அடிகளாசிரியரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

இம் மூன்று பதிப்புகளிலும், சமீபத்தில் நன்கு ஆய்வுகள் வளர்ந்த பின்பு வெளிவந்த பதிப்பாகையாலும் சுவடிகளை வைத்துப் பதிப்பிக்கும் பழக்கம் உள்ளவராக அடிகளாசிரியர் அமைவதாலும் தமிழ்ப் பல்கலைக் கழகப் பதிப்பு சிறந்த முறையில் அமைந்துள்ளது.

1929-இல் சொல்—தெய்வச்சிலையார் உரையைக் கரந்தைத் தமிழ்ச்சங்கம், ஆர். வேங்கடாசலம் பிள்ளையைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்டுள்ளது. முதலில் ‘ஆத்திரேய கோத்திரம்’ என்ற தொடரைப் பேராசிரியர் உரையெனக் கருதியே அச்சிட்டனர். பின்பு டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்திலுள்ள தெய்வச்சிலையார் சுவடியைப் பார்த்தபோது இது தெய்வச்சிலையார் உரையே என்ற தெளிவு கிடைத்தது. அச்சுவடிக்கருத்துகளைப் பின் இணைப்பாக இப்பதிப்பில் சேர்த்துள்ளனர்.

1963-இல் கு. சுந்தரமூர்த்தியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு கழகம் இத்தெய்வச்சிலையார் உரையை மிகத்தெளிவான விளக்கங்களுடன் வெளியிட்டுள்ளது.

1989-இல் தஞ்சை சரசுவதிமகால் நூலகம், வேணுகோபாலனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு சொல்-ஆத்திரேயர் உரை என ஒன்றை வெளியிட்டுள்ளது. இது தெய்வச்சிலையார் உரையில் சில இடங்களில் ஏற்படுத்திய சிறிய மாற்றங்களுடன் அமைந்துள்ளது.

1964இல் சொல் - கல்லாடனார் உரை, கழகத்தாரால் சுந்தர மூர்த்தியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்தது. ஏற்கனவே குறிப்பிட்டபடி 1963-இல் சொல்—உரைக்கோவையில் சேர்க்கப்பெற்ற அரசு கையெழுத்துப் பழைய உரையும் இப் பதிப்பில் இணைக்கப்பெற்றுள்ளது.

1971-இல் கீழ்த்திசைச்சுவடி நூலகத்தின் வழி, தெ.பொ மீனாட்சிசுந்தரனாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வந்துள்ள சொல்—கல்லாடனார் உரை குறிப்பிடத்தக்க ஒன்று. பதிப்பு நெறிமுறைகளுடன் பல சுவடிகளை ஒப்புநோக்கி. மிகத்தெளிவான முன்னுரையுடன் வெளியிட்டுள்ளார்.

**பொருள்**

பொருளதிகார உரைப்பதிப்புகளில் முதலாக அமைவது 1885-இல் சி.வை.தா. வெளியிட்ட பதிப்பு. நச்சினார்க்கினியர் பொருள் முழுவதற்கும் எழுதிய உரை எனக் கருதி வெளியிட்டார். பின் நான்கியல்கள் பேராசிரியர்க்குள்ளதென பின்பு தெளிவுபெற்றார்.

முன் ஐந்து இயல்களுக்கு நச்சினார்க்கினியமும் பின் நான்கு இயல்களுக்குப் பேராசிரியமும் எனப் பொருளதிகாரம் 1916, 1917-இல் பவானந்தர் பதிப்பாக வந்தது.

1917இல் செய்யுளியல் நச்சினார்க்கினியத்தை ரா. ராகவையங்கார் வெளியிட்டார்.

1920இல் அகம்புறம்—இளம்பூரணம் நமச்சிவாய முதலியார் பதிப்பு வந்தது,

1921 முதல் 1936 வரை வ.உ.சி. பொருள் முழுவதும் மூன்று தொகுதிகளாக வெளியிட்டுப் பின்பு ஒரு தொகுதியாக்கினார். பிற்பகுதிகளுக்கு வையாபுரிப்பிள்ளை துணை கிடைத்தது.

1934-1935இல் வையாபுரிப்பிள்ளை, துரைசாமி ஐயர் இவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு திரிசிரபுரம் எஸ். கனக சபாபதிப்பிள்ளை பொருளதிகாரத்தை வெளிக்கொணர்ந்தார்.

1943-1948இல் கணேசையரின் பொருள் பதிப்புகள் வந்தன.

1952-முதல் கழகத்தினர் பொருள்—இளம்பூரணம், நச்சினார்க்கினியம், பேராசிரியம் இவற்றை வெளியிட்டுவருகின்றனர்.

**(ஆ) புத்துரைப் பதிப்புகள்**

இந் நிலையில் தமிழ் மக்களுக்கு எளிமையாக விளங்கும் வகையில் புலியூர் கேசிகன் தொல்காப்பியம் முழுவதற்கும் 1961இல் சந்தி பிரித்து நூற்பாக்களைத் தந்து, எளிதில் தெளிவாகும் பொருட்டுப் பொழிப்புரையும் தந்துள்ளார். இதுவரை ஏழு மறு பதிப்புகள் வந்துள்ளன.

சோமசுந்தரபாரதியார் பொருட்படலம்—அகத்திணையியல்—புறத்திணையியல் — மெய்ப்பாட்டியல் மூன்றிற்கும் புத்துரை தந்துள்ளார்.

சொல்லுக்கு அ.கு. ஆதித்தர்—ஆதித்தியம் என்ற பெயரில் இளங்கலை (B.A.) கற்கும் மாணாக்கரும் புரிந்து கொள்ளும் வகையில் நூற்பாக்களைப் பிரித்துப் பொருள் தெளிவுடன் தற்காலச் சான்றுகளுடன் தந்துள்ளார்.

தொல் எழுத்திற்கு வேங்கடராஜுலு ரெட்டியாரின் (1944) ஆராய்ச்சிப் பதிப்பு ஆய்வாளர்க்கு மிகப் பயன்பெறும் நிலையில் அமைந்துள்ளது.

பி.சா. சுப்பிரமணிய சாஸ்திரியாரின் தொல்—சொல்—குறிப்பு 1930; எழுத்து—குறிப்பு—1937 போன்றவை ஆய்வாளர்க்குப் பயன் படும் பதிப்புகள்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் அஞ்சல் வழிக்கல்வி யில் முதுகலை மாணாக்கர்க்குத் தொல்காப்பியத்தை விளக்கும் வகையில் குறிப்புகளுடன் வந்துள்ள ஆண்டியப்பன், காசிராசன், சாம்பசிவனார் குறிப்புரைகள் பயனுடையன.

தஞ்சை பாவலரேறு பாலசுந்தரனாரின் தொல்காப்பிய ஆராய்ச்சி காண்டிகையுரைகள் ஆய்வறிஞரைச் சிந்திக்கத் தூண்டும் நிலையில் அமைந்துள்ளன.

1989இல் வெளிவந்த 'தொல்காப்பியம்' எழுத்துப் படலப் பேருரையில் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் 1000 பக்கங்களில் மிக விளக்கமான தெளிவுரையை அமைத்துள்ளார்.

புலவர் குழந்தை, பொருளதிகாரப் புத்துரை முதற்பாகப் பதிப்பில், தம் கோணத்தில் தம் கருத்திற்காகத் தொல்காப்பியத் தைப் பல நிலைகளில் மாற்றியுள்ளார்.

இவ்வாறு புதுப்பார்வையில், புதுக்கோணத்தில் பல புத்துரைகள் அமைந்துள்ளன.

**3. ஒப்பியல் பதிப்புகள்**

(அ) 1858 இல் வெளிவந்த சாமுவேல் பிள்ளையின் 'தொல்காப்பிய நன்னூல்' என்ற இரண்டு இலக்கணங்களின் மூலம் முழுவதுமாகவுள்ள நூல்தான் ஒப்பியலுக்கு வித்திட்டதாகச் சொல்லலாம். அதே வேளையில் தொல்காப்பியமூலம் முழுவதும் நமக்கு அச்சில் கிடைத்ததும் இப்பதிப்பு மூலம்தான். முதலில் தொல்—எழுத்ததிகார நூற்பாக்களை இயல்வாரியாகத் தந்து பின்பு நன்னூல் எழுத்ததிகார நூற்பாக்களை இயல்முறையில் தந்துள்ளார். இது போன்று சொல்லதிகாரமும் தந்துள்ளார். நன்னூலில் பொருளதிகாரம் இன்மையால் தொல்காப்பியப் பொருளதிகாரத்தோடு நூல் நிறைவுறுகிறது, ஆங்கிலம் கற்றவர்கட்கும் நூல் விளங்கவேண்டுமென்பதற்காக ஆங்கிலத்தில் விளக்கங்கள் பெரும்பாலும் எல்லா நூற்பாக்களுக்கும் தந்துள்ளார். ஒரு சான்று—

அவைதாம்; இன்னே வற்றே அத்தே அம்மே, ஒன்னே, ஆனே அக்கே, இக்கே. அன்னென் கிளவி உளப்படப்பிறவும் அன்னவென்ப சாரியை மொழியே. Nunnool உருபு புணரியல் 5 (தொல்-புணரியல்—17ஆம் நூற்பா).

அன் ஆன் இன் அல் அற்று இற்று அத்து அம், தம், நம், நும், எ அ உ ஐ கு ன இன்ன பிறவும் பொதுச்சாரியையே, 17 புணரியல். (நன்—உருபு புணரியல்—5ஆம் நூற்பா).

These are the seventeen Adjuncts or Increments occurring in individual words or Combinations for the sake of Euphony. The obiect of உருபு புணரியல் is to show the occurrence of சாரியை in declension. Thus far of the principia of உருபு புணர்ச்சி Declensional syntax. பொது infers no சிறப்புச் சாரியை.

இவ்வாறுதான் அப்பதிப்பு ஒப்புமை நிலையில் அமைந்துள்ளது.

(ஆ) 1962இல் தொல்காப்பியம் — நன்னூல் — எழுத்ததிகாரம், வெள்ளைவாரணன் பதிப்பை அண்ணாமலைப் பல்கலைக்

கழகம் வெளியிட்டுள்ளது. இதில் தொல்-நூற்பா, அதற்குத் தெளிவான பொழிப்புரை விளக்கம் இவைதந்து பின்பு தொடர்புடைய நன்னூல் நூற்பா அதற்கு உரை விளக்கம்; பின்பு இரண்டிற்கும் உள்ள பொதுத் தன்மைகள், சிறப்பியல்புகள் போன்றவற்றைத் தெளிவாக உளம் கொளும் படித் தந்துள்ளார்.

(இ) 1971இல் வெளிவந்த தொல்காப்பியம்—நன்னூல்— சொல்லதிகாரம், வெள்ளைவாரணன், எழுத்ததிகாரம் போன்றே அமைந்துள்ளது. தொல்காப்பிய நூற்பா எண்கள் தமிழ் வடிவிலும், நன்னூல் நூற்பா எண்கள் ஆங்கில முறை வடிவிலும் எந்நூற்பாக்கள் எனத் தெரிந்து கொள்வதற்காகத் தரப்பெற்றுள்ளன.

(உ) இலக்கணத் தொகை—எழுத்து 1967
இலக்கணத் தொகை—சொல் 1971
இலக்கணத் தொகை—யாப்பு பாட்டியல் 1978

ஆகிய மூன்று தொகுப்புகளிலும் தொல்காப்பிய நூற்பாக்களை முதல் நிலையில் அமைத்து அதற்குத் தொடர்புடைய ஏனைய இலக்கண நூற்பாக்களைத் தொடர்ந்து தந்துள்ளார். இலக்கியங்களிலிருந்து சான்றுகள் கொடுத்துள்ளார். மூன்று தொகுப்புக்களையும் ச.வே. சுப்பிரமணியன் ஆக்கித் தந்துள்ளார்.

(ஊ) தொல்காப்பிய ஒப்பியல் என்ற நூல், 1975இல் க.ப. அறவாணன் வெளியிட்டுள்ளார். இதில் தொல்காப்பியம் மூலம் மட்டும் நூற்பாவாகத் தரப் பெற்றுள்ளது. ஏனைய இலக்கணங்களிலுள்ள ஒப்புமை நூற்பாக்கள் எண்கள் அளவில் தரப்பெற்றுள்ளன. பிற இலக்கண நூற்பாக்கள் இல்லை. ஏனைய இலக்கண நூல்கள் அனைத்தும் கையில் வைத்துக் கொண்டுதான் இவ்வொப்புமை நிலையைப் பயன்படுத்த முடியும். சான்றாக—

வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின்தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித்தொகை என்று
அவ் ஆறு என்ப தொகைமொழி நிலையே (தொல். எச். 16)

நேமி-60; வீ-45, 50; நன்-362; பி-20; இ-335;தொ-89; மு-737.

இலக்கணத்தொகை - சொல்-பக். 378-380. இந்நூற்பாக்கள் அனைத்தும் தரப்பெற்றுள்ளன.

**4. மொழிபெயர்ப்புப் பதிப்புகள்**

(அ) பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் 1930இல் எழுத்ததிகாரத்தை மொழிபெயர்த்தார். நூற்பா எழுத்துப்பெயர்ப்பு (transliteration) தரப்பெற்றுள்ளது. தமிழில் நூற்பாக்கள் தரப்பெறவில்லை. 1937இல் சொல்லதிகாரம் முதல் மூன்று இயல்களை மொழிபெயர்த்து வெளியிட்டார். இதில் தமிழில் நூற்பாக்கள் தரப்பெற்றுள்ளன. சொல்-முழுவதும் 1945இல் வெளிவந்துள்ளது. இதன் மறுபதிப்பை 1979இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது. பொருள்-பகுதி, பகுதியாக 1949, 1952, 1956இல் வெளிவந்துள்ளன. இவற்றில் தமிழில் நூற்பாக்கள் தரப்பெற்றுள்ளன. எழுத்துப்பெயர்ப்பு, மொழிபெயர்ப்பு, கருத்துச்சுருக்கம் விளக்கம் என்ற நிலையில் இப்பதிப்புகள் அமைகின்றன. பாடவேறுபாடுகளைச் சில இடங்களில் சுட்டியுள்ளார். சமஸ்கிருதத்தோடு தொடர்பு படுத்த வாய்ப்பு ஏற்படும்போதெல்லாம் தொடர்புபடுத்தி, அங்கிருந்து இங்குவந்தது என்ற உணர்வைத் தோற்றுவிப்பார். ஆய்வறிஞர் ஆகையால் ஆய்வுநெறிமுறைகளின்படி இப்பதிப்புகள் அமைந்துள்ளன எனலாம்.

(ஆ) அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக 1948இல் ஈ.எஸ். வரதராஜ ஐயர் மொழிபெயர்த்த தொல்-பொருள்-அகம்-களவியல் முதல் தொகுதியாகவும், கற்பு-பொருளியல் இரண்டாம் தொகுதியாகவும் வெளிவந்துள்ளன.

இருதொகுதிகளிலும் நூற்பாக்கள் தமிழில் தரப்பெற்றுள்ளன. இரண்டாம்தொகுதியில் எழுத்துப்பெயர்ப்பு, மொழிபெயர்ப்பு, விளக்கங்கள் உதாரணச் செய்யுட்கள், தமிழில் அதற்கு மொழிபெயர்ப்புகள், விளக்கங்கள் போன்றவை தரப்பெற்றுள்ளன. முதல் தொகுதியில் நூற்பா எழுத்துப் பெயர்ப்பின்மையை நிறைவு செய்ய இரண்டாம் தொகுதித் தொடக்கத்தில் அகத்திணையியல், களவியல்களுக்கு எழுத்துப்பெயர்ப்பு நூற்பாக்களுடன் கொடுக்கப்பெற்றுள்ளன. பாடவேறுபாடுகள் தனியாகக் குறிப்பிடப்பெறவில்லை. சான்றுப் பாடல்களில்

பெரும்பான்மையான சங்கப்பாடல்களை மொழிபெயர்த்து விளக்கமும் தந்துள்ளமை பாராட்டற்குரியது.

(இ) 1985இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொல்-எழுத்து-சொல்லதிகாரங்களைத் தமிழ் நூற்பாக்கள் இடப்பக்கத்திலும் வலப்பக்கத்தில் ஆல்பர்ட் என்பவரின் ஆங்கிலமொழி பெயர்ப்புமாக வெளியிட்டுள்ளது. நூற்பாக்கள் தமிழில் உள்ளதால் பதிப்பு நிலையில் கூறலாமே தவிர பாடவேறுபாடுகள் பற்றிய குறிப்பு ஒன்றும் இல்லை.

(ஈ) ஆர். வாசுதேவசர்மா அகத்திணையியலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து 1933இல் வெளியிட்டுள்ளார்.

(உ) இலக்குவனார் 1963இல் தம் முனைவர் பட்டத்திற்குரிய ஆய்வேட்டை 'Tholkāppiyam—(in English) with critical studies' என வெளியிட்டுள்ளார். இது தொல்காப்பியப் பதிப்பாகாது. மொழிபெயர்ப்பு எழுத்து, சொல், பொருள் மூன்று அதிகாரங்களுக்கும் உள்ளன. இரண்டாம் பகுதி திறனாய்வாக ('Critical studies') அமைந்துள்ளது. தொல்காப்பிய ஆய்வுகளுக்கு ஒரு சிறந்த கருவி நூலாக இது அமைகின்றது.

(ஊ) கமில் சுவலபில் 1970இல் தொல்காப்பிய மொழிபெயர்ப்புத் திட்டத்தை ஆய்வு நெறிமுறைகளின்படிச் செய்ய வேண்டுமென உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடும் தமிழியல் இதழில் (Journal of Tamil Studies) அறிவித்து, எழுத்து, (Vol. 1—5, 7,8), சொல் (Vol. 13, 21, 28) இரண்டிற்கும் நல்ல மொழிபெயர்ப்பைச் சில இதழ்களில் தந்துள்ளார். தமிழைப் பல ஆண்டுகள் தமிழகத்திலேயே வந்து கற்றுத் தெரிந்த காரணத்தால் தமிழின் பெருமையை உணர்ந்து நன்முறையில் மொழிபெயர்த்துள்ளார். வந்துள்ள ஆறு ஆங்கில மொழிபெயர்ப்புகளில் இது சிறந்ததாக அமைந்துள்ளது.

1989இல் நிர்மல் செல்வமணி என்பவரால் பொருள்-அகத்திணையியல் மட்டும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதும் சுட்டத்தக்கது.

(எ) தொல்காப்பியம் முழுவதையும் மா. இளையபெருமாள், எஸ்.ஜி. சுப்பிரமணிய பிள்ளை இருவரும் இணைந்து 1961இல்

மலையாளத்தில் மொழிபெயர்த்து உரைக் குறிப்புடன் வெளி யிட்டனர். இளையபெருமாள் தொல்காப்பியம் நன்கு கற்றவ ராதலால் மொழிபெயர்ப்புச் சிறப்பாக அமைந்துள்ளது.

எழுத்தச்சன் என்பவர் தொல்காப்பியத்தை மலையாளத் தில் சென்னை பல்கலைக்கழக வெளியீடாகிய (Annals of the oriental research) என்ற ஆய்விதழில் 1960-முதல் 1966 வரை மொழி பெயர்த்துள்ளதாகத் தெரிகிறது. கன்னடத்தில் 1963 இல் அதே இதழில் மாரியப்ப பட் மொழிபெயர்த்துள்ளதாகக் குறிப்புக்கிடைக்கிறது.

## 5. உரைவளப் பதிப்புகள்

(அ) 1963இல் ஆபிரகாம் அருளப்பன், வி. ஐ. சுப்பிரமணியம் இருவரும் இணைந்து தொல்காப்பியம் சொல்லதிகாரம்-உரைக் கோவை - முதற்பாகம்-வெளியிட்டனர். முதன் நான்கு இயல் களுக்கு இவ்வுரைக்கோவை அமைந்துள்ளது. உரையாசிரிய ரிடையே மூல ஆசிரியனைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முயலும்போது கருத்து வேறுபாடுகள் தோன்றின. அதனால் தான் பாட வேறுபாடுகளும் தோன்றின. தொல்காப்பியர் என்ன நினைத்தார் என்பதைப் புரிந்து கொள்ள இவ்வுரைக் கோவைகள் பயன்படும். அந்நிலையில் உரை வளத்திற்கு வித்திட்டவர் ஆபிரகாம் அருளப்பனும், வி. ஐ. சுப்பிரமணிய மும் ஆவர். அப்போது சொல்லதிகாரத்திற்குக் கல்லாடர் உரை அச்சில் வரவில்லை. அரசு கையெழுத்துப் பழையவுரை வந்த தில்லை. இரண்டையும் முதன் முதலாக அச்சில் கொணர்ந்த பெருமை இவர்களைச் சாரும். இப்பணியை இவர்கள் இதற்குப் பின் தொடரவில்லை. உரைவள வழிகாட்டிகளாக இவர்கள் அமைந்தனர்.

(ஆ) அடுத்து மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், மதுரைப் பல்கலைக் கழகமாக இருந்தபோது இப்பணியைத் தொடர்ந் தது. பொருள் அதிகாரத்திலிருந்து இவ்வுரைவளத் தொகுப்பு வேலையைத்தொடங்கிற்று. மு. அருணாசலம் பிள்ளை, தொல். அகத்திணையியல் உரை வளத்தைத் தயாரித்தார். அவருக்குக் கடைசிக் காலத்தில் கண்பார்வை இல்லை. அதனால் அவர் சொல்லச் சொல்ல எழுதியவர் மு. முத்துசாமிப்பிள்ளை. (இருவரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எனக்கு ஆசிரியர்) அருணாசலம்பிள்ளை புத்தகம் இல்லாமலே பாடம்

நடத்துவார். இலக்கண உரைகள் அனைத்தும் மனப்பாடம். அகத்திணையியலுக்கு இளம், நச்சர், பாரதியார் மூவர் உரைகளும் அருணாசலம்பிள்ளை ஆய்வுரையும் இணைந்து இப் பதிப்பு அமைந்துள்ளது. அவர் 1973இல் காலமானார். இப் பதிப்பு வெளிவந்தது 1975இல். கூறியது ஒருவர். எழுதியது இன்னொருவர். வெளியிட்டது வேறிருவர்: அதனால் கருத்துப் பிழைகள் (Factual errors) கூட உள்ளன. அச்சுப்பிழைகளும் உள்ளன. பதிப்பித்த ஆசிரியர் இப்பதிப்பைச் செவ்வையாகப் பதிப்பிக்கவில்லை. இப்பணியைப் பேராசிரியர் வெள்ளை வாரணன் 1980களில் தொடர்ந்தார். தொல்காப்பியத்தை ஆழமாகக் கற்றவர் வெள்ளைவாரணன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முப்பது ஆண்டுகளுக்குமேல் தொல் காப்பியம் பாடம் நடத்தியவர். நன்முறையில் புறம், களவு, கற்பு, பொருள், மெய்ப்பாடு, உவமை, செய்யுள் ஆகிய இயல் களுக்கு உரைவளம் தயாரித்தார். இவை, 1983 தொடங்கி 1989 வரை வெளிவந்துள்ளன. மரபியல் வரவேண்டும்.

(இ) இவ்வுரைவளப்பதிப்பை 80 களில் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் தொடங்கியது. மரபுக் கல்வியில் தோய்ந்த ஞானியாரடிகளிடம் கற்ற ஆ சிவலிங்கனார் இதன் பதிப்பா சிரியராக அமைந்தார்.

சிறப்புப்பாயிரம் முதல் மரபியல் வரை 28 தொகுதிகள் எனத் திட்டமிடப் பெற்று 1980-செப்டம்பரில் தொடங்கி 1991-மார்ச் வரை, சிறப்புப்பாயிரம், எழுத்து ஒன்பது இயல்கள், சொல் ஒன்பது இயல்கள், பொருளில் அகத்திணையியல், மரபியல் ஆக 21 தொகுதிகள் வந்துள்ளன. உரைவளப்பதிப்புகளில் முதலிடத்தை வகிக்கும் நிலையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பதிப்புகள் அமைந்துள்ளன.

இதுவரை வெளிவந்துள்ள உரையாசிரியர் அனைவர் கருத்து களும் தொகுக்கப் பெற்றுள்ளன. கிடைக்கும் மொழி பெயர்ப்புக் களாகிய இலக்குவனார், கமில்சுவலபில் மொழிபெயர்ப்புகள் தரப் பெற்றுள்ளன. ஆய்வு நிலையில், நூல் வெளிவரும் வரையுள்ள, ஆய்வறிஞர் கட்டுரைகளின் வாயிலாக வெளியிட்டுள்ள கருத்துகள் அனைத்தும் சேர்க்கப் பெற்றுள்ளன. நூல் அச்சாகி வந்த பின்பும் முந்திய இயல்களுக்குள்ள ஆய்வுக் கருத்துகள் கிடைப்பின் அவை களும் பிந்திய இயல் பதிப்புகளில் சேர்க்கப் பெற்றுள்ளன. பதிப்

பாசிரியரும் தம் எண்ணங்களைத் தந்துள்ளார். அந்நாள் வரை (upto date) வந்த எண்ணங்கள் இணைக்கப் பெற்றன. இந்நிலை மதுரைக் காமராசர் பல்கலைக் கழக உரைவளப் பதிப்புகளில் இல்லை. தொடக்ககாலத்தில் இப்பதிப்புகள். அச்சாகும் போது பதிப்பாசிரியரே அச்சுப் படிகளை ஒப்பு நோக்கிப் பார்த்ததால் பிழைகள் குறைவாக இருந்தன. இப்போது வந்த அகத்திணை யியல் பதிப்பில் பிழைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

பொது நிலையில் எந்த நூலையும் எந்த ஆசிரியன் உருவாக்கு கின்றானோ அந்த ஆசிரியனே அந்நூல் அச்சாகி நிறைவேறும் வரை முழுவேலைகளையும் பார்த்தால் அந்நூல் சிறப்பாக அமையும்; அவ்வாறில்லையெனில் பிழைகள் ஏற்பட வாய்ப்புகள் மிகுதியாக உண்டு.

## 6. பிறநிலைப் பதிப்பு

1969-இல் 'தொல்காப்பியவளம்' என்ற தலைப்பில் வ. வடலூரனார் தொல்காப்பியம் முழுவதையும் வெளியிட்டுள்ளார். நூற்பாக்கள் முழுவதும் உண்டு. விளக்கம் உண்டு. ஆங்கில மொழி பெயர்ப்புகளும் உள. அறிவியல் நோக்கும் காணப்படுகின்றது. இப்பதிப்பு மேற்கூறிய பதிப்பு வகைகளுள் ஒன்றிலும் அடங்காத ஒன்றாகவும், பலவற்றை அடக்கிய ஒன்றாகவும் அமைகின்றது. மூலம் உள்ளதால் சண்முகம்பிள்ளை[1] மூலப் பதிப்பென்றே கூறுகிறார். மொழிபெயர்ப்பு உள்ளது. ஆனால் முழுவதற்கும் இல்லை. அதனால் மொழி பெயர்ப்புப் பதிப்பிலும் அடக்க முடியாது. தெளிவுரை, விளக்கங்கள் உள. அவை மட்டுமிருந் தால் புத்துரைப் பதிப்புகளில் அடக்கி விடலாம். இவ்வாறு பல நிலைகளில் ஒரு புதிய அமைப்பாக இப்பதிப்பு அமைந்துள்ளது. 'புலவர் தேர்வுக்குரியது' என முதற்பக்கத்தில் அச்சிட்டுள்ளனர், புத்தக விற்பனைக்காக. இவர் எண்ணங்களை முழு நிலையில் புரிவதே கடினமாக உள்ளது. ஆயின் செய்திகள் உள்ளன என்பதில் ஐயமில்லை.

---

1. தொல்காப்பியப் பதிப்புகள்; மு. சண்முகம்பிள்ளை, தமிழாய்வு-எட்டாம்தொகுதி. சென்னைப் பல்கலைக் கழகம். பக். 47.

பதிப்பாசிரியன் நோக்கில்,

''யாழ் நூல் யாத்த பெருந்தகை நம் இசை மரபுகள் பலவும் கணிதக் கண்கொண்டு நிறுவியுள்ளார். அவ்வாறே தொல்காப்பிய வளமும் பலரால் காட்டுக்கு மாற்றப் பெற்றுள்ள முரண்பாடெல்லாம் போக்கி, தக்க அரண்பாடமைக்க நமக்கும் கணிதக் கண்ணே வழிகாட்டவல்லது. இதனைக் காழியன் வளை படம் கொண்டும், நுண்கணித வாய்பாடும் நேரியமும் கொண்டும். எண்கணிதம், பூங்கணித அடிப்படையில் நுண்கணிதப் பொருள் நிலைபெற்ற முறை கொண்டும். அறிவியல் வரலாறு கொண்டும் தொல்காப்பிய வளம் என்ற இவ்வாராய்ச்சி நூலில் பலவாறு காட்ட முயன்றிருக்கின்றோம். அறிஞர் உலகம் வரவேற்று ஆவன செய்யும் என நம்புகின்றோம்''—என (பக் xviii) எழுதுகிறார். 1969 முதல் 92' வரை, 23 ஆண்டுகளில் யாரும் இப்பதிப்பின் சிறப்பினை உணர்ந்து புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இப்பதிப்பிற்கு மட்டுமே ஒரு தனி ஆய்வு நடத்தலாம்.

இவ்வாறு தொல்காப்பியப் பதிப்பு வகைப்பாடுகள் அமைகின்றன. முழுநூலும் நூலின் பகுதியும் இவற்றுள் அடங்கும்.



# தொல்காப்பிய ஆழ்நோக்குப் பதிப்புகள்

தொல்காப்பியத்தை உலகிற்கு அச்சிட்டு அளித்த முதற்பதிப்பாசிரியர் அனைவரும் மிகுந்த தமிழ்ப் பற்றாளர். அவர் அனைவரும் அந்நிலையில் சிறந்த பதிப்பாசிரியரே. மழவை மகாலிங்கையர், சாமுவேல்பிள்ளை, சுப்பராயச் செட்டியார், சி. வை. தா, நமச்சிவாய முதலியார், வ. உ. சிதம்பரம்பிள்ளை, வையாபுரிப் பிள்ளை போன்றோர் குறிப்பிடத்தக்கோர். அவர்கள் பதிப்புகளை வெளியிட்ட காலத்து 1847 முதல் சுமார் 1925 வரை பதிப்பு நிலை, ஆய்வு நிலை வளர்ச்சியடையவில்லை. அதற்குப் பின் தோன்றிய பதிப்புகளில் சில ஆழ்நோக்குப் பதிப்புகளாக அமைந்துள்ளன.

தொல்காப்பியத்தில் சில பொது நிலைச்சொற்கள் பயின்று வருகின்றன, மேலோர், உயர்ந்தோர், இழிந்தோர், மூவர் போன்ற சொற்கள். தொல்காப்பியர் தாம் எழுதிய காலத்து என்ன நோக்கில் கூறினார் என்பது 1000 ஆண்டுகள் கழித்து இளம் பூரணர் உரை கூறும் காலத்து மாற்றமடைந்திருக்கலாம். நச்சினார்க்கினியர் தம் குறிக்கோளின்படி பொருள் செய்கிறார். சோமசுந்தர பாரதியார் 20-ஆம் நூற்றாண்டுக் கண்கொண்டும், தாம் கருதுகின்ற தமிழ்ப் பண்பாட்டுக் கண்கொண்டும் பார்க்கிறார்.

> ''மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே''
>
> —தொல். பொ. அகம். 29.

என்பது நூற்பா.

இங்கு **'மேலோர்'** என்ற சொல்லுக்கு முதல் உரையாசிரியராகிய இளம்பூரணர் மேலோராகிய **தேவர்** எனப் பொருள் கொள்கின்றார். நச்சர் மேல் அதிகாரப்பட்டு நின்ற **வணிகர்** எனப் பொருள் செய்கின்றார். சோமசுந்தர பாரதியார், வேந்தனென்றும்

வேந்தனொடு சிவணிய ஏனோர் என்றும் மேவிய சிறப்பின் ஏனோர் என்றும் குறிக்கப்பட்ட **மேலோர்** என்று பொருள் தருகின்றார். சமுதாயத்தில் மேல் மட்டத்திலுள்ளோர் என்பது பொருள். இன்றுள்ள வழக்கு நிலையில் கூறுவதாக இருந்தால் மேட்டுக் குடிமக்கள். "தேவர் பற்றிய குறிப்பு ஈண்டு வேண்டப் படாமையானும்; நான்கு வருணத்தாருள் வணிகர் மேலோராகார் மூன்றாம் வகுப்பினரே யாதலானும் இவ்விருரையும் சூத்திரக் கருத்தோடு மாறுபடும்." என்பது பாரதியார் வாதம்.

அந்நூற்பாவிலேயே 'நால்வர்' என்பதற்கு நான்கு வருணத் தார் என இளம்பூரணரும், நச்சர் மேலோரை வணிகர் எனக் கூறி விட்டதால்—அந்தணர் அரசர், இருவகை வேளாளர் எனவும் பொருள் செய்கின்றனர். இருவகை வேளாளர்—உழுவித்துண் போர், உழுதுண்போர் என்பது விளக்கம், பாரதியார், 'நானில மக்கள் என முல்லை முதலாகக் கூறிய நானிலத்தோர் நால்வர்' எனப் பொருள் கூறுகின்றார்.

ஒரே நூற்பாவில் மேலோர், நால்வர் என்ற இருசொற் களுக்கும் மூன்று நிலையில் உரைகள்; அதற்காக மூன்று உரை யாசிரியர். அதனால் தனி உரைப்பதிப்புகளும், தொகுத்த உரை வளப்பதிப்புகளும் தேவைப்பட்டன. 1847இல் முதல் தொல் காப்பியப் பதிப்புவந்தாலும் (1885-பொருள் பதிப்பு) 1963இல் 116 ஆண்டுகளுக்குப் பின்புதான் உரைக் கோவை எண்ணம் நமக்கு வந்தது; செயல்பட்டது 1975இல். இச்சான்றின் மூலம் பதிப்பு வளர்ச்சிக்கு நாம் எடுத்துக் கொள்ளும் காலம் புலப்படுகிறது.

தொல்காப்பியப் பதிப்புகள் சில ஆழ்நோக்குக் குரியன. அவை,

1. எஸ். கனகசபாபதி பிள்ளை பதிப்பு.
2. அடிகளாசிரியர் பதிப்பு.
3. யாழ்ப்பாணம் கணேசையர் பதிப்பு.
4. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் பதிப்பு.
5. மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை பதிப்பு.
6. உரைவளப் பதிப்பு.

என்பன,

1. 1934, 1935-களில் வந்த தொல்காப்பியப் பொருளதிகாரம்-முதற்பாகம் நச்சினார்க்கினியம், இரண்டாம் பாகம்

பேராசிரியம்-திரிசிரபுரம் எஸ். கனகசபாதிப் பிள்ளையால் பதிப்பிக்கப்பெற்றது. இரண்டுபகுதிகளுக்கும் மன்னார்குடி இயற்றமிழாசிரியர் ம. நா. சோமசுந்தரம் பிள்ளை எழுதிய அரிய ஆராய்ச்சிக் குறிப்புகளும் திருத்தங்களும் அமைந் துள்ளன. முதற்பகுதிக்கு ஏட்டுச்சுவடிகளைப் பார்த்து ஒப்பு நோக்கித்தந்தவர் வையாபுரிப்பிள்ளை. இரண்டாம் பாகத்திற்கு ஏடுகளை ஒப்பு நோக்கித் தந்தவர் துரைசாமி ஐயர். இப்பதிப்பு அக்காலம் வரை வந்துள்ளபொருளதிகாரப் பதிப்பில் புறநிலையிலும் அகநிலையிலும் ஆழ்நோக்குப் பதிப்பாக அமைந்துள்ளது.

(அ) தெளிவான அச்சு, நூற்பா அழுத்த எழுத்துக்களில்; உரை 10 புள்ளியில், எடுத்துக்காட்டுப் பாடல்கள் 8 புள்ளியில்; அடிக் குறிப்புகள் அதற்கும் சிறிய எழுத்தில். இதனால் எது நூற்பா, எதுஉரை, எது சான்றுப்பாடல், எது அடிக்குறிப்பு எனத் தெளிவாகப் புரியும்.

(ஆ) அடிக்குறிப்பில் மூலபாட வேறுபாடுகள், சான்றுப் பாடல் பாட வேறுபாடுகள். உரைப்பாட வேறுபாடுகள். கருத்து வேறுபாடுகள் அனைத்தும் தரப்பெற்றுள்ளன. சான்றாக அக்காலத்தில், 30களில், சிறுபொழுது ஆறா, ஐந்தா என்ற ஆராய்ச்சி அறிஞரிடையே நடைபெற்று வந்தது. செந்தமிழ் இதழில் ஒருவர் ஆறு என்றெழுத மற்றொருவர் ஐந்து என்றெழுத ஆய்வுப் போர் நடந்து வந்தது. இதைத்தோற்று வித்தவர் சிவஞான முனிவர், தம் 'தொல்காப்பியச் சூத்திர விருத்தி' என்ற நூலில். இக்கருத்துப் பரிமாற்றத்தின் விளக்க மாக பக்-28 முதல் 33 வரை, அடிக்குறிப்பே முக்கால் பக்க அளவில், 6 பக்கங்கள் தந்துள்ளார்'ஆய்வுக் குறிப்பாக. இது தொடர்பாக, யாழ்ப்பாணம் புன்னாலைக் கட்டுவன் கணேசையர், பொருளதிகாரம் முதற்பாகம் பதிப்பில் (1948) பின் இணைப்பில் அநுபந்தமாக, 'சிறுபொழுதாராய்ச்சி' என்ற தலைப்பில், பக்.75 முதல் 106 வரை 32 பக்கங்கள், சிறு பொழுதாறே என்பதைச் செந்தமிழில் எழுதி, நிலைநாட்டிய கருத்தைத் தெளிவுபடுத்தித் தந்துள்ளார்.

(இ) தொடக்ககாலப் பதிப்புகளில் பொருளதிகார எடுத்துக்காட்டுச் செய்யுட்கள் எந்தெந்த இலக்கியத்திலுள்ளன என்பது தெளி வற்றிருந்தது. உரையாசிரியர் இலக்கியப் பாடல்களைத்

தருவரே தவிர இலக்கியப் பெயரைச் சுட்டுவதில்லை. இதை யெல்லாம் கண்டு தெளிவுபடுத்தி, இலக்கியப் பெயர்கள் சுட்டி யுள்ளனர்.

(ஈ) நச்சர் உரை முதற்பாகமாக அமைந்தாலும் கருத்து வேறு பாடுகள் உள்ள இடத்து இளம்பூரணர் உரைக் கருத்துகளை அடிக்குறிப்பில் தந்துள்ளனர்: பக். 42, 64, 87, 89, 97, 129, 147, 163, 226. இதே போன்று செய்யுளியலுக்கு வெளியிட் டுள்ளது, பேராசிரியர் உரை. வேறுபட்ட கருத்துக் கொண்ட நச்சர், இளம்பூரணர் உரைக் கருத்துகளை அடிக்குறிப்பில் சுட்டியுள்ளார். பக். 917, 918, 927, 937, 943, 993, 1034, 1043, 1138, 1149.

(உ) நச்சினார்க்கினியர் இலக்கணத்திற்கும் இலக்கியத்திற்கும் உரையெழுதியுள்ளார். அகத்திணையியல் 13-ஆம் நூற்பா விற்கு விளக்கம் தரும்போது கலித்தொகைப் பாடல் 112-ஐத் தந்து (பக். 57) பெருந்திணையாதலின் முல்லையுட்கோத்தார் என எழுதுகிறார். ஆயின் இப்பாடலுக்குக் கலித்தொகையில் உரையெழுதும் போது[1] இது கைக்கிளை என எழுதுகின்றார். நச்சினார்க்கினியர் முரண்படும் இடத்தை, பரந்த அறிவும் மிகுந்த நினைவாற்றலும் உடையவரால்தான் சுட்ட முடியும். இதை அடிக்குறிப்பில் சுட்டியுள்ளார்.

(ஊ) செய்யுளியல் உரைப் பகுதியில் அடிக்குறிப்பாகக் காக்கைப் பாடினியார் (927), யாப்பருங்கலம் (927), அமிதசாகரர் (936), மயேச்சுரயாப்பு (937), சங்கயாப்பு (938), செய்யுளியலுடை யார் (943), பல்காயனார் (952) போன்ற செய்யுளியல் தொடர்புடைய நூல்கள் பலவற்றிலிருந்து சான்றுகள் தந்துள்ளார். 1934, 1935 பொருளதிகாரப் பதிப்புகள் மிகுந்த பயனுடையன. பதிப்பாசிரியராக அமைய வேண்டு மென்றால் மிகப் பரந்த இலக்கிய அறிவும் நுண்மையான இலக்கண அறிவும், எல்லாவற்றையும் தலையில் வைத்திருக் கின்ற நினைவாற்றலும் வேண்டுமென்பதை இப்பதிப்புகள் சுட்டுகின்றன.

---

1. கலித்தொகை மூலமும்-நச்சினார்க்கினியர் உரையும்-அனந்தராமையர் நிழற்படப்பதிப்பு-தமிழ்ப்பல்கலைக் கழகம்-1984 ப. 718.

2. அடிகளாசிரியர் 1969-இல் தொல் எழுத்து-இளம்பூரணத்தை இரண்டு சுவடிகளின் துணை கொண்டு மிகத் தெளிவாகப் பதிப்பித்துள்ளார். பதிப்புரை (பக். XI) யில் "சொல்லதிகார இளம்பூரணர் உரையினையும், செய்யுளியல் இளம்பூரணர் உரையினையும் பதிப்பிக்க வேண்டும் என்பது என் எண்ண மாகும். அவ்வெண்ணத்திற்கும் இறைவனுடைய திருவருள் தான் துணை செய்ய வேண்டும்" என்று எழுதியுள்ளார். 1969-இல் எழுதிய இவ்வெண்ணம் நிறைவேறுதற்குத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வாயிலாக 1985-இல் செய்யுளியல் இளம் பூரணத்தையும், 1988-இல் சொல்லதிகாரம், இளம்பூரணத் தையும் பதிப்பிக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது.

ஒருவன் ஒரு செயலைச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் உறுதியாக இருக்குமானால் 16 ஆண்டுகள் கழித்தேனும் 19 ஆண்டுகள் கழியினும் அது நடைபெறும் என்பதை இந்நிகழ்ச்சி காட்டுகிறது.

(அ) புறநிலையில் பதிப்புக்கூறுகள் இவர் மூன்று பதிப்புகளிலும் உள்ளன. பதிப்புரை, தொல்காப்பிய/ன்/வரலாறு, இளம் பூரணர் வரலாறு போன்றவை முதற்பகுதியில் அமைகின்றன. பிற்பகுதியில் நூற்பா அகரவரிசை எடுத்துக் காட்டுக்களின் அகரவரிசை, உரைப்பொருள் அகரவரிசை என 1969-பதிப்பில் கொடுத்துள்ளார். முன்பு சுட்டியது போல இவர் மட்டுந்தான் பதிப்பாசிரியரில், பின்னிணைப்பாகச் செய்யுளியலுக்கும், சொல்லதிகாரத்திற்கும் நூற்பா சொல்லகராதி தந்துள்ளார். தொல்காப்பியம் பதிப்பிப்போர் முறைப்படி நூற்பா சொல் லகராதி நூல் முழுவதற்கும் தருதல் வேண்டும். 1969-பதிப்பு சொந்தப்பதிப்பாகையால் பல வகை எழுத்துகளில் அப்பதிப்பு அமையவில்லை. தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புகள் பலவகைப் புள்ளி எழுத்துகளில் நூற்பாவேறு, உரைவேறு, சான்றுச் செய்யுள் வேறு என்ற நிலையில் அமைந் துள்ளன.

(ஆ) அகநிலையில், சுவடி வேறுபாடுகளையும், உரைவேறுபாடு களையும் குறிப்பிட்டுள்ளார். ஒவ்வொரு நூற்பாவுக்கும் உரைக் குறிப்பும் நூற்பாக்குறிப்பும் எனத் தம் கருத்துகளைத் தெளிவுபடுத்தியுள்ளார். இலக்கண நூல்களைப் பதிப்பிக்க

வேண்டுமென்றால் நிகண்டுகளைக் கற்க வேண்டும், மனப் பாடஞ்செய்ய வேண்டுமென்பது இவர் கருத்து[1]. ஒரு சான்று:

காரமும் கரமும் கானொடு சிவணி
நேரத்தோன்றும் எழுத்தின் சாரியை—எழுத்து. 135.

நூற்பாக்குறிப்பில் "இந்நூற்பா இதே வடிவத்தில் [2]திவாகர நிகண்டில் ஒலி பற்றிய தொகுதியில் எடுத்தாளப்படுகிறது" எனக் குறிக்கின்றார்.

பிங்கல நிகண்டில்,

கரமுங் கானுங் காரமும் அகரமும்
ஏனமும் பிறவும் எழுத்தின் சாரியை

என்று, அகரமும் ஏனமும் சேர்த்துக் கூறப்பட்டுள்ளது.

சூடாமணி நிகண்டு

கரமொடு கானே காரங் காட்டிய அகரம் என்ப
தர முறஎழுத்துக்கேற்ற சாரியை நான்கே சாற்றும்

என்று கூறுகிறது. பின்பு நன்னூல் நூற்பாவையும் தருகிறார் (பக். 134.)

இத்துணை இருப்பினும்,

னகாரை முன்னர் மகாரங் குறுகும்-எழுத்து. 52

என்ற நூற்பாவில் 'காரை' என்பதே எழுத்துச் சாரியையாகப் பல பதிப்புக்களில் உள்ளன. இதற்கு நச்சினார்க்கினியர் னகாரையென இடைச்சொல் ஈறு திரிந்து நின்றது எனக் கூறி, இடையியல் மூன்றாம் நூற்பாவிற்கும் இந்நூற்பாவை உதாரணம் காட்டு கிறார்.

(இ) சொல்லதிகார உரையில் இளம்பூரணர் கருத்தோடு மாறுபட்டு அமையும் சேனாவரையர், நச்சினார்க்கினியர் கருத்துகளை அடிக்குறிப்பில் சுட்டுகின்றார்: பக். 17, 143, 144, 145, 146, 148, 152, 157.

---

1. அடிகளாசிரியரிடம் அவர் இருப்பிடமாகிய குகையூர் சென்று, இந்நூலாசிரியன் தொல்காப்பியப் பதிப்பைப் பற்றிப் பேசும்போது இக்கருத்தைத் தெரிவித்தார்.
2. சேந்தன் திவாகரம்-மூலபாடம், தாண்டவராய முதலியார் பதிப்பு, 1917 பக். கஉச (124.)

(ஈ) செய்யுளியலில் பதிப்பாசிரியர் உரை பக். கஉ (12)-இல் ''இவ்வாறு ஆராய்ச்சி செய்து வெளியிடப் பெறும் இச்செய்யுளியற் பதிப்பின் பதிப்புரையில் யான் எழுதியுள்ள ஆராய்ச்சிகள் அனைத்தையும் எழுத முடியாதாயினும், சில வற்றை மட்டும் அறிஞர்க்கு விருந்தாகத் தருகின்றேன்'' என எழுதுகிறார்.[1]

நூற்பா சுவடி வேறுபாடுகள், உரைச் சுவடி வேறுபாடுகள், மேற்கோள் பாடல்கள் அடி யமைப்பிலுள்ள வேறுபாடுகள், போன்றவற்றைத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். செய்யுளியல் 197-ஆம் நூற்பாவை விளக்கும்போது பதிப்பாசிரியர் விளக்கம் என்ற நிலையில் (பக். 359) இறையனார்களவியல் உரையா சிரியர், நம்பியகப் பொருள், இலக்கண விளக்கம், வீரசோழிய உரையாசிரியர், பேராசிரியர், தண்டியாசிரியர், சோமசுந்தர பாரதியார் ஆகியோர் கருத்துகளை ஒப்புமையாகத் தருகிறார். இவரே ஒரு கவிஞர். அதனால் செய்யுளியலைத் தெளிவாக உணர்ந்துப் பதிப்பித்துள்ளார்.

பதிப்பாசிரியர்க்குரிய பல்துறை அறிவும் இவருக்கு இருந்தமை யால் இவர் பதிப்புகள் மூன்றும் ஆழ்நோக்குப் பதிப்புகளாகவே அமைந்துள்ளன.

3. (அ) யாழ்ப்பாணம் கணேசையர் பதிப்புகள் பொது நிலையில் ஆழ்நோக்குடையன. எழுத்து—நச்சினார்க்கினியம் 1937; சொல்—சேனாவரையம் — 1938; பொருள்—பேராசிரியம்— 1943; பொருள்—நச்சினார்க்கினியம்—1948 என இந்நிலையில் வந்துள்ளன. எழுத்து, சொல் பதிப்புகளைவிடப் பொருள் பதிப்புகள் சிறப்பாக அமைந்துள்ளன. புறநிலையில், அச்சு நிலையில் வேறுபட்ட புள்ளி அச்சுக்களால் நூற்பாவேறு, உரைவேறு, சான்றுப் பாடல்கள் வேறு, அடிக்குறிப்புகள் வேறு என்ற நிலையில் தெளிவாக உள்ளன. அகநிலையில் பொருள் பதிப்புகளில் நூற்பா நுவல் பொருள் நூற்பாவின்மேல்

---

1. குகையூரில் அவரிடம் நேரில் பேசிக் கொண்டிருந்தபோது செய்யுளியலுக்கு எழுதியவைகள் பலவற்றையும் பயன் படுத்த முடியாமல் போனதற்கு மிக வருந்தினார். புலமைக் காய்ச்சல் இதில் மறைந்திருந்தது என்பது என் கருத்தாயிற்று.

தந்துள்ளார். அடிக்குறிப்புகளில் தெரிந்த மூலபாட வேறு பாடுகள், உரைப்பாட வேறுபாடுகள், சொல்பொருள், இலக்கணக் குறிப்புகள். பிறர் கருத்துகள், அவற்றின் குறைகள் போன்றவற்றைச் சுட்டியுள்ளார்.

(ஆ) சொற்பொருளை விளக்கும்போது பிறர்உரைக் கருத்துகளையும் தருகிறார். மரபியல் 86-ஆம் நூற்பாவாகிய 'தோடே மடலே' என்ற நூற்பாவுரையில் நுகும்பு—என்ற சொல் வருகின்றது. அதற்கு விளக்கம் வேண்டும். "நுகும்பு—சுருண்ட குருத்து என்பர் உ. வே. சாமிநாதையர் (குறுந்தொகை உரை—௩0அ 308). இளமடல் என்பர் நற்றிணை உரையாசிரியர், நற்றிணை கூஉ (92).

குறுந்தொகை 213ஆம் பாடல் பேராசிரியர் உரையில் காணப்படுவதும், உ. வே. சாமிநாதையர் பதிப்பில் வேறாகக் காணப்படுவதையும் குறிக்கின்றார் (பக்-648).

இவர் எங்கெங்கு இம்மூலபாடம் பொருத்தமில்லை இவ்வாறிருக்கலாம் என்று கூறுகிறாரோ அங்கெல்லாம் அச்சுப் பதிப்புகளில் அப்பாடம் இல்லாவிடினும் சுவடிகளில் அப்பாடங்கள் உள்ளன. இவை பின்பு சுட்டப் பெற்றுள்ளன. இது இவரின் பாடவேறுபாட்டு ஆழ்நோக்கை உணர்த்துகின்றது.

4. 1971இல் வெளிவந்த தொல்—சொல்—கல்லாடனார் விருத்தி, பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, கீழ்த்திசைச் சுவடி நிலையம் வெளியிட்டுள்ளது.

பதிப்பு நெறிமுறைகள், ஆய்வு நெறிமுறைகள் இப்பதிப்பாசிரியர்க்கு மிகத் தெளிவாகையால் இது ஒரு ஆழ்நோக்குப் பதிப்பெனக் கூறலாம்.

ஏட்டுச் சுவடிகளையும் அதிலிருந்து எடுத்தெழுதப் பெற்ற கையெழுத்துப் படிகளையும் வைத்துக் கொண்டு இவ்வுரையைப் பதிப்பித்துள்ளார்.

சுவடிகளின் குடிவழிக்கு வரைபடம் தந்துள்ளார் (பக்-66). தெளிவான முன்னுரை ஆங்கிலத்திலும் தமிழிலும் தரப் பெற்றுள்ளது.

பாடவேறுபாடுகள் சுவடிகளில் உள்ளபடி அடிக்குறிப்பில் தரப்பெற்றுள்ளன.

5. 1941இல் பவானந்தர் கழகத்தின் வழிப் பதிப்பித்துள்ள தொல்—சொல், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ளது.

பதிப்பு நெறியை முழுமையாகப் பின்பற்றியுள்ளார். நூற்பா 14 புள்ளி பெரிய எழுத்திலும், உரை 12 புள்ளி எழுத்திலும் அடிக்குறிப்புகள் 10 புள்ளி எழுத்திலும் நன்கு தெளிவாக அச்சிடப் பெற்றுள்ளன. நூற்பா எண்கள் இடப்பக்கத்தில் அரபிய எண்களும், வலப்பக்கத்தில் இயல் நூற்பா எண்கள் தமிழிலும் தரப் பெற்றுள்ளன.

நூற்பா, உரைப்பாட வேறுபாடுகளுடன், இலக்கியக் காட்டுகள் அனைத்திற்கும் இலக்கியமும் இடமும் தெளிவாக அடிக்குறிப்பில் சுட்டியுள்ளார். பொருளதிகார நூற்பாவை எடுத்தாளும் போதும், சான்றுப் பாடல்களைச் சுட்டும் போதும் சுவடி வேறுபாடு தந்துள்ளார்.

விளக்கம் தேவைப்படும் இடங்களிலெல்லாம் பலர் உரைகளையும் இணைத்துக் கொடுத்துள்ளார் (நூற்பா 127 உரை).

சூத்திர குறிப்பகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி, விஷய அகராதி, மேற்கோள் அகராதி எனப் பலவும் தந்து தம் பதிப்பு ஆழ்நோக்குப் பதிப்பு என்பதை உணர்த்தியுள்ளார்.

6. இன்று ஆய்வுகள் வளர்ந்துள்ள நிலையில் தொல்காப்பிய உரைவளப் பதிப்புகள் மிகுந்த பயனுடையன. அவை ஆழ்நோக்குப் பதிப்புகளாகவும் அமைந்துள்ளன. ஆயின் அவை இதுவரை வந்துள்ள அச்சுப் பதிப்புகள் நூல்கள் அனைத்தையும் கொண்டு செய்யப் பெறவில்லை. கிடைக்கும் அச்சுப் பதிப்புகளையும் சுவடிகளையும் கொண்டு உரைவளப் பதிப்புகள் அமைத்தால் மிகச் சிறப்பாக இருக்கும்.

# தொல்காப்பியப் பதிப்பு நெறிமுறைகள்

1. அக்காலத்தில் எல்லா நூல்களும் ஓலைச் சுவடிகளில் எழுதப் பெற்றன. இன்று தொல்காப்பிய அச்சு நூல்கள் பல வகை களில் ஒரு லட்சத்திற்குமேல் வெளிவந்திருக்கலாம். சுமார் 10ஆம் நூற்றாண்டில் இளம்பூரணர் உரையெழுதுவதற்குமுன்பு தமிழகத்தில் தொல்காப்பியச் சுவடிகள் பத்து இருந்திருக் கலாம். இன்றைய நிலையில் ஏறத்தாழ 110 சுவடிகளுக்கு மேல் உலகம் முழுவதிலும் உள்ளன. அவற்றுள் லண்டன், பாரிஸ் இரண்டு நகரங்களிலும் 6 சுவடிகள் இருக்கலாம். ஏனைய சுவடிகள் இந்தியாவிலுள்ளவையே. அவற்றுள் கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகத்திலுள்ள சுவடிகள் 29; அவை பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையிடமிருந்த சுவடிகள்; பெரும்பாலும் பயன்படுத்தப் பெற்றிருக்கும் என நம்பப்படு கிறது. ஏனைய சுவடிகள் அனைத்தையும் பார்க்க வேண்டும். அவற்றுள் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையச் சுவடிகள் 32-உம், சென்னை கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிகள் 27-உம் பார்க்கப் பெற்றுள்ளன. தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையம், தமிழ்ப் பல்கலைக் கழகம், திருவாவடுதுறை ஆதீனம், கேரளப் பல்கலைக் கழகச் சுவடிகள் நூலகம், திருவேங்கடவன் பல்கலைக் கழகம் போன்ற இடங்களிலுள்ள சுவடிகள் அனைத்தும் பார்க்க வேண்டும். இச்சுவடிகள் அனைத்தையும் கையெழுத்தில் கொண்டு வரலாம். அல்லது நுண் நிழற்படமெடுக்கலாம். (micro-filming). அவற்றுள் மூலம் மட்டுமுள்ள சுவடிகள் எத்தனை? உரையுடன் கூடியவை எத்தனை? எழுத்ததிகாரச் சுவடிகள்—பொருளதிகாரச் சுவடிகள்—இது போன்ற நிலைகளிலும் பார்க்க வேண்டும். இளம்—நச்சர் — பேராசிரியர் — தெய்வச்

சிலையார்—கல்லாடர்—இவ்வாறு உரையாசிரியர் நிலையிலும் சுவடிகள் பார்க்கப்பட வேண்டும்.

சொல்லதிகாரத்திற்குக் கல்லாடனார் உரையென அரசு உரையென 1963இல் உரைக்கோவையாகச் சொல்லதிகாரம்—முதன் நான்கு இயல்களில் வெளிவந்தது. ஆயின் அவ்வுரை சுவடி எண் 48இல் உ. வே. சா. நூலகத்தில் சொல்—முழுவதற்கும் உள்ளது. இதுவரை வெளிவந்ததாகத் தெரியவில்லை—தொல்காப்பியம் முதன் முதலில் அச்சைக் கண்டது 1847இல். ஏறத்தாழ 145 ஆண்டுகளாகியும் இன்னும் அச்சாகாத தொல்காப்பியச் சுவடி இருப்பதை எண்ணும்போது இது போன்று ஒரு சில இருக்கலாமோ எனத் தோன்றுகிறது. அதனால் சுவடிகள் அனைத்தும் பார்க்கப்படல் வேண்டும்.

2. கையெழுத்துப் படிகள் : டாக்டர் உ. வே. சா. நூலகத்தில் ஏட்டிலுள்ளதைக் கையெழுத்துப் படிகளாக எழுதி வைத்துள்ளனர். அதே போன்று சென்னை—கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலும் கையெழுத்துப் படிகள் உள. சில சுவடிகள் மறு பதிப்பாக இல்லாயலும் இருக்கலாம். முன்பு சுவடிகள் பழுது பட்டபோது, அவை எழுதப் பெற்றிருக்கலாம். பிரிட்டிஷ் மியூசியத்தில் 43, 44, 45 என மூன்று தொல்காப்பியக் கையெழுத்துப் படிகள் இருப்பதாக அறிகிறோம். அவை பார்க்கப் பெற வேண்டும். இவை அடிப்படை மூலங்களாக அமையும்.

3. இதுவரை அச்சில் வந்துள்ள மூலம் மட்டுமுள்ள பதிப்புகள், உரைப் பதிப்புகள், புத்துரைப் பதிப்புகள், தெளிவுரை, காண்டிகையுரை, உரைவளம், ஒப்புமை, ஆராய்ச்சி, குறிப்பு, மொழிபெயர்ப்பு, போன்ற பலவகையான பதிப்புகள் 130க்கும் மேல் வந்துள்ளன. இவற்றின் மறுபதிப்புகள் (reprints) என்று பார்த்தால் சுமார் 300க்கு மேல் இருக்கலாம். இவை அனைத்தும் ஓரளவு பார்க்கப்பட வேண்டும். சில மறு பதிப்பு களில் வளர்ச்சி நிலைகள் காணப்படுகின்றன. முதன் முதலில் வந்த அச்சுப் பதிப்புகள் அனைத்தும் மிக இன்றியமையாதவை. அவை இருப்பதை அவ்வாறே அச்சிடப்பட்டவை. பிழைகள் சில இருந்தாலும் உண்மை வெளிப்படத் துணையாயிருக்கும். பின்வந்த பதிப்புகளில் பதிப்பித்தவர் இலக்கணம் தெரிந்ததாக

நினைத்துக் கொண்டு மாற்றியுள்ளனர். அது மூல வடிவத்தையே இழக்கச் செய்துள்ளது.

4. தமிழில் இதுவரை வந்துள்ள இலக்கண நூல்கள் அனைத்தும் பார்க்கப் பெறுதல் வேண்டும்; இலக்கணத் தொகை போன்று. பின்வந்த இலக்கண நூல்களுள் தொல்காப்பியத்தை முழு நிலையில் நூற்பாவையே அப்படியே எடுத்தாண்டவர் உண்டு. சில சொற்களை மாற்றி எடுத்தாண்டதும் உண்டு. இவை மூல பாடத்தைத் தெளிவுபடுத்தத் துணைபுரியும்.

5. தொல்காப்பியத்துள் தொல்காப்பியமாக உரையாசிரியர் செய்யுளியலில், எழுத்து, சொல்லதிகார நூற்பாக்களை எடுத்தாளுவார். களவியலில் அகத்திணையியல் நூற்பா எடுத்தாளப் பெற்றிருக்கும். இவற்றில் கூடச் சில வேறுபாடுகள் அமைந்துள்ளன. அவற்றை முழுவதும் பார்க்க வேண்டும். சான்றாகச் செய்யுளியல் 206ஆம் நூற்பாவிற்கு விளக்கந்தரும் போது இளம்—'கொல்லே ஐயம் எல்லே இயக்கம்'—எனத் தந்துள்ளார். இந்நூற்பாக்கள் இடைச் சொல்லியலில் 753, 754 இரண்டு நூற்பாக்களாக அமைந்துள்ளன. கொல்லே ஐயம் என்பது ஒரு நூற்பா. எல்லே இலக்கம் என்பது அடுத்த நூற்பா. இங்கு 'இலக்கம்' என்பதற்கு விளக்கம், இரக்கம் போன்ற பாட வேறுபாடுகள் காணப் பெறுகின்றன. ஆயின் 'இயக்கம்' என்ற பாடம் இங்குள்ளது. அதோடு இளம். காலத்தில் ஒரே நூற்பாவாக இருந்தது பின்பு இருநூற்பாவாகி யுள்ளது. இது போன்ற பாட வேறுபாடுகளையும், நூற்பா எண்ணிக்கை வேறுபாடுகளையும் தெளிவுபடுத்த இப்பார்வை துணை புரியும்.

6. தொல்காப்பியருக்கெனத் தனித்த சொல்லாட்சி உண்டு. அவற்றைக் கூர்ந்து நோக்கல் வேண்டும். சான்றாக (அ) மூன்றாம் வேற்றுமை உருபு 'ஒடு'தான் அவர் கூறுகிறார். சில இடங்களில் பதிப்பாசிரியர் 'ஒடு'வை 'ஓடு' ஆக்கியுள்ளனர். ஒருவேளை ஓசையின் பொருட்டுச் சில இடங்களில் நீட்டம் ஏற்றுக் கொள்ளலாம். எல்லா இடங்களிலும் பொருந்தாது. (ஆ) நூற்பா 700, 706—இரு இடங்களில் 'மேலை' என்ற சொல் பயன் பெற்றுள்ளது. இவ்விரு இடங்களில் மட்டுமே இவ்வாட்சி உளது. ''மேலைக் கிளவியொடு வேறுபாடிலவே'' என்பது சொற்றொடர். இதை எதுகைக்காக 'மேல'

என்றாக்கியுள்ளார் அடிகளாசிரியர் (1988). இவ்வடிவம் தொல்காப்பியத்தில் இல்லை. இது பொருத்தமாகவும் தோன்றவில்லை. (இ) ஆகுன, வருன, திரின—போன்ற வடிவங்கள் 'ற' ன்னகரமாகவே சுவடிகள் அனைத்திலும் முதற் பதிப்புகளிலும் உள்ளன. அவற்றைப் பின்பதிப்புகளில் ஆகுந, வருந, திரிந—எனத் 'த' ந்நகரமாக்கியுள்ளனர். (ஈ) 'பு'—'வு' என்ற வடிவங்கள் பொருள் வேறுபாடின்றிப் பயன்படுத்தப் பெறுகின்றன. அளபு—அளவு; உருபு—உருவு; நேர்பு—நேர்வு; பிரிபு—பிரிவு; உயர்பு—உயர்வு; சார்பு—சார்வு; முடிபு—முடிவு; திரிபு—திரிவு; இழிபு—இழிவு; என இவற்றுள் முந்தைய வடிவம் 'பு' வடிவமே. அதோடு பெரும்பான்மையான சுவடிகளிலும் முதற் பதிப்புகளிலும் 'பு' வடிவமே மிகுதியாக உள்ளது. இதனால் தொல்காப்பியர் கால ஆட்சியை உணர முடிகின்றது. (உ) உறழ்—உறழ்வே என இரண்டு வடிவங்கள் தொல் காப்பியத்தில் பயிற்சி உண்டு—ஆயின் சில இடங்களில் சுவடி களில் 'உறழ்' என்ற வடிவமே உள்ளது. இதனைக் கொண்டு அவருடைய ஆட்சி 'உறழ்' என்பதாக முடிவு செய்யலாம். இவ்வாறு பல நிலைகளில் தொல்காப்பியர் சொல்லாட்சியை யும் அவர் கால மொழி நிலையையும் அறிந்து அதற்குத்தகப் பாடங்களை நிர்ணயிக்கலாம்.

7. சங்க இலக்கியப் பழைய உரையாசிரியர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் போன்ற இலக்கிய உரையாசிரியர், நச்சினார்க்கினியர் போன்ற இலக்கண, இலக்கிய உரையாசிரியர்—இவர்கள் மேற்கோளாக எடுத்தாண்டுள்ள தொல்காப்பிய நூற்பாக்களை ஒப்பு நோக்கினால் பாட வேறுபாடுகள் பற்றித் தெளிவு கிடைக்கும். இம்மேற் கோளாட்சிகளையும் தொல்காப்பியப் பதிப்பிற்குப் பயன் படுத்தலாம்.

8. சங்கச் சொல்லாட்சிகளும், தொல்காப்பியச் சொல்லாட்சியும் சில நிலைகளில் ஒத்தமைகின்றன. அதனால் சங்க இலக்கிய மொழியமைப்பு, சொல்லாட்சி இவற்றையும் ஒப்புநோக்கலாம். 'முந்நீர்' என்ற சொல்லுக்கு 'முன்னீர் என்ற பாடவேறுபாடு தொல்காப்பியத்திலும் உண்டு. சங்க இலக்கியத்திலும் காணப் பெறுகின்றது. இது போன்ற நிலைகளையும் சிந்திக்கலாம்.

இவற்றை அடிப்படையாகக் கொண்டு மூல பாடத்தை உறுதிப்படுத்தலாம்.

9. இச்செம் பதிப்புக்கு மிகத் தெளிவான 'முகவுரை' எழுதப்படல் வேண்டும். உ. வே. சாமிநாதையரின் பதிப்பு முகவுரைகளைப் போல் அமைய வேண்டும். (அ) கிடைக்கப் பெற்ற சுவடிகள், கையெழுத்துப் படிகள் எங்கெங்கிருந்து கிடைத்தன, யார் வழிக் கிடைத்தன. மூலம் மட்டுமுள்ள சுவடியா? உரையுடன் கூடிய சுவடியா? யார் உரையுடன் கூடிய சுவடி எத்தனை இயல்கள் அச்சுவடியில் உள்ளன போன்ற செய்திகள் தரப்படல் வேண்டும். இவ்வாறு தரப்பட்டுள்ள தொல்காப்பியப் பதிப்பு ஒன்றுகூட இல்லை. சி. வை. தா. மட்டும் தொல்—பொருள் பதிப்புக்கு 12 சுவடிகள் கிடைத்ததாகக் கூறியுள்ளார். யார் வழிக்கிடைத்தது என்ற குறிப்பில்லை. எத்தனை மூலச்சுவடி கள், எத்தனை உரைச்சுவடிகள், உரைகளில் எந்தெந்தப் பகுதிகள் உள்ளன போன்ற செய்திகள் இல்லை. சான்றாக உ.வே.சா. புறநானூற்றுப் பதிப்பைப் பார்ப்போமானால் சுவடிக்குரியவர் யார், சுவடியைப் பெறுவதற்கு உதவியவர் யார், இடம்பெறும் பாடல் வரையறை, மூலம் மட்டுமா, உரை யுடன் சேர்ந்தா, அச்சுவடிகளிலுள்ள பாடல்கள் எத்தனை- போன்ற செய்திகளை எல்லாம் அட்டவணை தந்து தெளிவு படுத்தியுள்ளார். (பக். xvi - xvii —புறநானூறு—மூன்றாம் பதிப்பு—1935).

முதற்பதிப்பை வெளியிட்ட பின்பும் சுவடிகளைத் தேடிக் கொண்டிருந்தார் சாமிநாதையர். இன்னும் அடுத்த பதிப்பில் எந் நிலையில் தெளிவு படுத்தலாம் என்பதே அவர் நோக்கம். இதற்குச் சான்றாகச் சீவகசிந்தாமணி பதிப்பைப் பார்க்கலாம். இதன் முதல் பதிப்பிற்கு, மூலப் படிகள் 4-உம் நச்சினார்க்கினியர் உரை யோடுள்ள படிகள், 19-உம் கிடைத்துள்ளன. (பக். 8-9) இரண்டாம் பதிப்பிற்கு இவை போக 17 படிகள் கிடைத்துள்ளன. அவை எங்கிருந்து கிடைத்தன, யார் மூலம் கிடைத்தன, எத்தனை பாடல்கள் உள்ளன போன்றவற்றையெல்லாம் அட்டவணை இட்டுக் காட்டியுள்ளார் (பக். 11-12). அடுத்து மூன்றாம் பதிப்பின் முகவுரையில் "1907ஆம் ஹூத்தில் இதன் இரண்டாம் பதிப்பு வெளி வந்த பின்பு கிடைத்த சில கையெழுத்துப் பிரதிகளாலும் செய்து வந்த நூல்களின் ஆராய்ச்சிகளாலும் இந்நூலும் இவ்வுரை முதலியனவும் சில சில திருத்தங்களையும் பொருட் பெருக்கத்

தையும் விளக்கத்தையும் இப்போது அடைந்துள்ளன, இரண்டாம் பதிப்பில் சீவகசிந்தாமணி யாராய்ச்சி விளக்கமென்ற பெயருடன் 41 பக்கங்களில் வெளியான பகுதி 'ஒப்புமைப் பகுதிகள்' என்ற பெயருடன் 113 பக்கங்கொண்டு இதில் வெளியிடப் பெற்றுள்ளது'' (பக். 14) என எழுதுகிறார். இவ்வாறு சாமிநாதையர் செய்துள்ள எல்லா நூல் பதிப்புகளிலும் பதிப்புக்குப் பதிப்பு வளர்ச்சி, தெளிவு, பலவகையான அகராதிகள் இணைவு இவற்றைப் பார்க்கிறோம். இதுபோன்று தொல்காப்பியத்திற்கு ஒரு பதிப்புக்கூட இல்லை. அதைப்பற்றி யாரும் சிந்திக்கவும் இல்லை. அதைச் சிந்தித்துள்ள பெருமை திராவிடமொழியியல் நிறுவனத்தையும் அதன் மதிப்புறு இயக்குநர் டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் அவர்களையும் சாரும்.

காட்டாக இதுவரை தொல்காப்பியம் தொடர்பாகப் பார்க்கப் பெற்றுள்ள சுவடிகள் சாமிநாதையர் நூலகச்சுவடிகள் 32; கீழ்த் திசைச்சுவடி நூலகச்சுவடிகள் 27 ஆகும். நோக்கம் தொல் காப்பியம் மூலத்தைத் தெளிவான பாடவேறுபாடுகள் நோக்கி வெளியிடப் பெறவேண்டுமென்பது. அதனால் எல்லாச்சுவடி களிலும் மூலம் மட்டுமே தெளிவாகப் படிக்கப்பெற்றுள்ளது. தேவையான இடங்களில் உரையும் படிக்கப்பெற்றுள்ளது. சாமிநாதையர் நூலகச் சுவடிகளுக்கு மட்டும் சிறுகுறிப்பு என்ற நிலையில் இங்குத் தரப்பெறுகின்றது.

சாமிநாதையர் நூலகச் சுவடிகள் அனைத்தையும் பார்ப் பதற்குத் துணைபுரிந்தவர் அவருடைய பெயரர் திரு. க. சுப்பிர மணியன் அவர்கள். உடனிருந்து முழுவதையும் படித்து உதவியர் மயிலம் பேராசிரியர் திரு. வி. சிவசுப்பிரமணியன் அவர்கள் நூலகத்திலுள்ள அலுவலகர் பல நிலைகளில் துணைபுரிந்தனர்.

தொல்காப்பிய மூலச்சுவடிகள் மூன்று. * 115, 73, 1053

அவற்றுள் 115, 73 இரண்டும் மூலம் முழுவதும் உள்ள சுவடிகள். 1053, எழுத்து, சொல் இரண்டதிகாரத்திற்கு மட்டும் மூலம் உள்ள சுவடி. 115-ஆம் எண்சுவடி படித்தவரால் படித்துத் தேவையான இடங்களில் திருத்தப்பெற்ற சுவடி. 73, கூலிக்கு எழுதப்பெற்ற சுவடி. 1053, பிழைகள் பல உள்ள சுவடி.

---

* இங்குக் குறிப்பிடப்பெறும் எண்கள் சாமிநாதையர் நூலகச் சுவடி எண்கள்.

தொல்—உரைச் சுவடிகள் இருபத்தொன்பது. சில சுவடிகளில் ஒரு இயலுக்கு மட்டும் உரை இருக்கும். அதிலும் சிலவற்றில் ஒரு இயலுக்குக்கூட முழுவதும் இருக்காது, சில சுவடிகளில் ஒரு அதிகாரத்திற்கு முழுவதும் உரை இருக்கும். சில சுவடிகளில் இரண்டு அதிகாரங்களுக்கு உரை இருக்கும். சில சுவடிகளில் மூன்று அதிகாரங்களிலும் சில பகுதிகளுக்கு உரை இருக்கும். மூன்று அதிகாரங்களுக்கும் சேர்த்து முழுவதுமாக உரையுள்ள சுவடி ஒரே சுவடியாக ஒன்றுகூட இல்லை.

எழுத்து—இளம்

(அ) **1052**—எழுத்து, சொல் —இரண்டிற்கும் முழுவதும் உள்ளது.

(ஆ) **1051**—பிறப்பியல் ஏழாம் நூற்பா முதல் எழுத்திற்கு உள்ளது. இச்சுவடியில் சொல்—சேனாவரையம் கிளவியாக்கம்—வேற்றுமையியல் 13-ஆம் நூற்பாவரை உள்ளது.

(இ) **999**—தொடக்கம் முதல் இல்லை இடையிடையே பல பகுதிகள் இல்லை. குற்றியலுகரப் புணரியல் ஈற்றுப்பகுதியில்லை.

எழுத்து—நச்சர்

(அ) **1044**—எழுத்து முழுவதற்கும் உள்ளது. பிழைகள் உள.

சொல்—முழுவதற்கும் உள்ளது. பிழைகள் இல்லை.

(ஆ) **34**—எழுத்து 119-ஆம் நூற்பா முதல்
இறுதி வரை.
—சொல்—முழுவதும்
—பொருள்—அகத்திணையியல்
புறத்திணையியல்.

(இ) **11**—எழுத்தில் நூற்பாக்கள் 26-முதல் 53 வரை—104, 105, 170, 171, 211, 212, 213 இவை இல்லை—217க்குப் பின் உள்ளது. சொல்—எச்சவியல் 415, 416—நூற்பாக்களுக்கு உரை இல்லை.

சொல்—இளம்—41A—சொல் முழுவதற்கும்—
இடைச்சொல்லியலில் அச்சில் காணப்படுவதைவிட உரைப்பகுதிகள் சில இடங்களில் சில நூற்பாக்களுக்கு மிகுதியாக உண்டு.

சேனா—60—வினையியல் இச்சுவடியில் இல்லை.

இடையில் ஒரு ஓலை இல்லாததால் 356-முதல் 373 வரை யுள்ள நூற்பாக்களுக்கு உரை இல்லை.

நச்சர்—1—சொல் முழுவதும்

பொருள்—அகம் முதல் களவியல் வரை செய்யுளியல்—பேராசிரியர் உரை.

தெய்வ—951—சொல் முழுவதும்.

கல்லா—164—சொல்—254 நூற்பாக்கள் வரை.

அரசு—48—சொல்—முழுவதும். இதுவரை முழுவதும் வெளி வராத சுவடி. கிளவியாக்கம், வேற்றுமையியல்; வேற்றுமை மயங்கியல் 13ஆம் நூற்பாவரை. கீழ்த்திசைச் சுவடி நூலக வெளியீடாகக் கல்லாடனார் உரையுடன் வெளிவந்துள்ளது.

பொருள்—இளம்—106—அகம் முதல் கற்பியல் 23-ஆம் நூற்பா வரை.

106A அகம் புறம்
14 நூற்பாக்கள்—களவியல் முதல் நூற்பா—

1066—அகம் புறம்
29-ஆம் நூற்பா வரை.

103—களவு முதல் மெய்ப்பாடு 12ஆம் நூற்பாவரை.

476—செய்யுள்—114-ஆம் நூற்பா முதல் மரபு இறுதி வரை.

43A—செய்யுள்—11-ஆம் நூற்பா முதல் 67—வரை
117-ஆம் நூற்பா முதல் இறுதி வரை.

நச்சர்—74—அகம்—புறம்—அகத்தில் இரண்டாம் நூற்பா இல்லை—புறத்தில் இறுதி நாலு வரிகள் இல்லை.

75—களவு மட்டும்.

120—புறம் மட்டும்.

நச்சர் & பேரா—1054—அகம் முதல் மெய்ப்பாடு வரை.

16—பொருள் முழுவதற்கும் உரை உள்ள ஒரே சுவடி
முதல் ஐந்து இயல்கள் நச்சர்
பின் நான்கு இயல்கள் பேரா.

481—அகம்—முதல் செய்யுள் வரை
இடையே பல பகுதிகள் இல்லை—
செய்யுள்—நச்சர் உரை—

9—அகம் முதல் உவமம் வரை
இடையில் பல பகுதிகள் இல்லை.
53—அகம் முதல் மெய்ப்பாடு வரை.
502— ,, ,, ,, ,,

7—கற்பு முதல் மரபு வரை
செய்யுளியலில் பல நூற்பாக்களுக்கு உரை இல்லை.

575—செய்யுள்—பேரா உரை.

இவற்றைப்பற்றி முழுச் செய்திகள் இங்குத் தரப்பெறவில்லை. சாமிநாதையர் போன்று தமிழகம் முழுவதும் மூலை முடுக்குகளி ளெல்லாம் அலைந்து திரிந்து இச்சுவடிகளைப் பெறாமல் நாம் ஒரே இடத்தில் அவர் நூல் நிலையத்தில் பெற்றது பெரும் பாக்கியம். சுவடி பெற்ற இடங்கள் அவற்றின் கொடிவழி போன்ற முழுமைச் செய்திகள் தொல்காப்பியம் பதிப்பிக்கும் போது தெளி வுறுத்தப்பெறும்.

(ஆ) இதுவரை வந்துள்ள அச்சுப் பதிப்புகள்; அவற்றுள் தெளிவான, பின்பற்றக்கூடிய பதிப்புகள் எவை? காரணம் என்ன போன்றவை குறிக்கப்பெறுதல் வேண்டும். பொது நிலையில் யாழ்ப்பாணம் கணேசையர் பதிப்புகள் நன்முறையில் அமைந்துள்ளன. நூற்பாவிற்குத் தனியெழுத்து (14 புள்ளி) உரைகளுக்குத் தனி எழுத்து (12 புள்ளி) மேற்கோள் பாடல் களுக்குத் தனி எழுத்து (10 புள்ளி—அழுத்தமானது thick); அடிக்குறிப்புகளுக்கு (8 புள்ளி)—இவ்வாறு வேறுபடுத்தி அமைத்துள்ளமை புறநிலை. நுணுகிப் பார்த்து உரை விளக்கக் குறிப்புகள் தந்துள்ளமை, அகநிலை. தொல் காப்பியப் பதிப்பு வரலாறு தரலாம்.

(இ) நூலாசிரியர் பற்றிய குறிப்புகள் அவர் காலம் போன்றன காரண காரியங்களுடன் தரப்பெறுதல் வேண்டும். அவர் நூலிலிருந்தே அதற்குச் சான்றுகள் தருவது மிகுந்த பயனா யிருக்கும். பொதுநிலையில் எல்லா நூலாசிரியர்க்கும் கற்பனை வரலாறுகள் மிகுதி. அவற்றுள் உண்மை வரலாற்றை உணர்த்த முயலவேண்டும்.

(ஈ) உரையாசிரியர் வரலாறு, உரையின் சிறப்புகள் குறிக்கப் பெறலாம். இளம் பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் தெய்வச்சிலையார், கல்லாடனார், பெயர் தெரியாத சொல்லதிகார உரையாசிரியர் ஒருவர், பேராசிரியர்.

போன்றோரின் முடிந்த அளவு தெரிந்த வரலாறும் அவர்களின் தனித்தன்மையும் சிறப்புகளும் சுருக்கமாகச் சுட்டப் பெறலாம்.

(உ) பின்பு வந்த புத்துரையாசிரியர் சோமசுந்தர பாரதியார்· பாவலரேறு பாலசுந்தரம், புலவர் குழந்தை, புலியூர் கேசிகன் போன்றோரையும், இன்றுவரை தொல்காப்பியம் பற்றி வந்துள்ள தெளிவுரைகளையும் தரலாம்.

(ஊ) இதுவரை தொல்காப்பியம் பற்றிவந்துள்ள ஆய்வேடுகள், ஆங்கிலம், தமிழ்க் கட்டுரைகள் போன்றவற்றின் செய்தி களைத் தொகுத்துச் சுருக்கித் தரலாம். பிற்காலத்தில் தொல்காப்பிய ஆய்வடங்கல் தயாரிக்கின்ற நிலை இதனால் அமையலாம்.

(எ) (1) சாமிநாதையர், 'விசேடச்செய்திகள்' என நூலிலுள்ள முக்கியமான செய்திகளைத் தொகுத்துத் தருவார்.*
அது போன்று தொல்காப்பியத்திலுள்ள சிறப்புச் செய்தி களைத் தொகுத்து 20 பக்க அளவில் தரலாம். வரலாற்றுச் செய்திகள்—இலக்கியவகைச் செய்திகள்—மரங்கள்—பறவை கள்—நீர் வாழ்வன—அளவை, நிறைப் பெயர்கள்—போன்றன,
(2) இருபத்தேழு இயல்களுக்கும் சுருக்க விளக்கம் தர வேண்டும்.

(ஏ) நூல்—அமைப்பில் (1) நூற் பாக்கள் ஓசை நயம் கெடாமல் சந்திபிரிக்காமல் தரல் வேண்டும்.

(2) பாட வேறுபாடுகள் இன்னின்ன சுவடிகளில் இன்னின்ன பதிப்புகளில் இன்னின்ன வேறுபாடுகள் எனத் தந்து, சிறந்த சரியான மூலபாடம் இது என அறுதியிடுவதற்குரிய காரணம் தருதல் வேண்டும்.

(3) இதுவரை வந்துள்ள உரைகள் அனைத்தையும் நோக்கி மனத்துட் கொண்டு இன்றைய மொழி நிலையில் பிறர்க்குப் புரியும் வண்ணம் சிறு பொழிப்புரை தருதல்.

(4) எடுத்துக்காட்டுகள் தருதல்

(5) தேவைப்பட்டால் அடிக்குறிப்புகள் தருதல் என்ற நிலையில் நூல் பகுதி அமையலாம்.

(ஐ) பின் இணைப்புக்கள்—(1) நூற்பா முதற்குறிப்பகராதி
(2) தொல்காப்பியச் சொல்லகராதி—சொற்றொடர் அகராதி பொருளுடன்—பொருள் வேறுபாடுகளுடன் சான்றாக

* புறநானூறு—மூன்றாம் பதிப்பு—1935. (பக்-70-79).

நால்வர், மூவர், மேலோர், கீழோர், மயக்கம் போன்ற சொற்கள் பல இடங்களில் பல் வேறு பொருள்களுடன் உரை யாசிரியரின் எண்ணப்படி அமையலாம். அவற்றைத் தெளிவு படுத்திப் பொருள் தரல் வேண்டும்.

(3) பொது நிலையில் நூலிலுள்ள சொற்களின் **அருஞ்சொற் பொருளகராதி** என ஒன்றும் தருதல் வேண்டும்.

(4) மேற்கோள்கள் தந்தால் மேற்கோளகராதியும் தரப் பெறுதல் வேண்டும். இந்நிலையில் தொல்காப்பியப் பதிப்பு அமையலாம்.

## நிறைவுரை

தொல்காப்பியத்திற்கு 1847 முதல் இன்றுவரை 144 ஆண்டுகளில் பலவகையான பதிப்புகள் 130 வந்துள்ளன. ஒவ்வொரு பதிப்பும் ஒவ்வொரு நிலையில் பயனுடையது. ஆயின் சாமிநாதையர் சங்க இலக்கியப் பதிப்புகளைப் போன்று ஒன்று கூட அமையவில்லை. சாமிநாதையர் காலத்திற்குப் பின்பு இன்று பதிப்பு நிலையில் பல வளர்ச்சிகள் வந்துள்ளன. கணிப்பொறிக் காலம். இந்நிலையில் சொல்லகராதிகளைப் பல கோணங்களில் தயாரிக்க முடியும்.

மிகத் தெளிவான முன்னுரையோடு, தொல்காப்பியம், தொல் காப்பியர், உரையாசிரியர், பதிப்புகள், சுவடிகள் இவற்றின் வரலாறுகளையும் தந்து இதுவரை கிடைத்துள்ள பாடவேறுபாட்டு வகைகளையும் பட்டியலிட்டுக் கொடுத்து, நூற்பா நுவலும் பொருள், நூற்பா, பொழிப்புரை என்ற நிலையில் இது வரை வந்துள்ள உரைக் கருத்துகளின் அடிப்படையில் தந்து, சிறந்த அடிக்குறிப்புகளுடன், நூற்பா சொல்லகராதி பொருள் விளக்கத்துடன், அருஞ்சொல்லகராதி போன்றவற்றையும் கொடுத்து மூலபாடப் பதிப்பு; பாடவேறுபாடுகளுடன் கூடிய பதிப்பு என்ற நிலையில் வெளியிட்டாலே சுமார் 2500 பக்கங்கள் வரலாம்.

தமிழர் பண்பாட்டிற்கு அடித்தளமாக அமைகின்ற, தமிழ் மொழியின் தெளிவான கொள்கைகளை விளக்கும் நிலையில் அமைந்துள்ள தொல்காப்பியத்திற்கு மிகத் தெளிவான பதிப்பு வர வேண்டும் என்பதில் யாருக்கும் இரண்டாவது எண்ணம் இருக்க வியலாது.

# தமிழாண்டு-ஆங்கில ஆண்டு

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பிற(ர)பவ வருஷம் | | 1807 | 32 | விளம்பி | வருஷம் | 1838 |
| 2 | விபவ | ,, | 1808 | 33 | விகாரி | ,, | 1839 |
| 3 | சுக்கில | ,, | 1809 | 34 | சார்வாரி | ,, | 1840 |
| 4 | பிறமோதூத | ,, | 1810 | 35 | பிலவ | ,, | 1841 |
| 5 | பிறசோற்பத்தி | ,, | 1811 | 36 | சுபகிருது | ,, | 1842 |
| 6 | ஆங்கிரச | ,, | 1812 | 37 | சே(செ)ாபகிருது | ,, | 1843 |
| 7 | ஸ்ரீமுக | ,, | 1813 | 38 | குரோதி | ,, | 1844 |
| 8 | பவ | ,, | 1814 | 39 | விசுவா(வ)சு | ,, | 1845 |
| 9 | யுவ | ,, | 1815 | 40 | பராபவ | ,, | 1846 |
| 10 | தாது(தாத்ரி) | ,, | 1816 | 41 | பிலவங்க | ,, | 1847 |
| 11 | ஈஸ்வர | ,, | 1817 | 42 | கீலக | ,, | 1848 |
| 12 | வெகுதான்னிய | ,, | 1818 | 43 | சவுமிய | ,, | 1849 |
| 13 | பிற(ர)மாதி | ,, | 1819 | 44 | சாதாரண | ,, | 1850 |
| 14 | விக்கிரம | ,, | 1820 | 45 | விரோதிகிருது | ,, | 1851 |
| 15 | விஷு | ,, | 1821 | 46 | பரிதாவி | ,, | 1852 |
| 16 | சித்திரபானு | ,, | 1822 | 47 | பிற(ர)மாதீச | ,, | 1853 |
| 17 | சுபானு | ,, | 1823 | 48 | ஆனந்த | ,, | 1854 |
| 18 | தாரண | ,, | 1824 | 49 | ராக்ஷச | ,, | 1855 |
| 19 | பார்த்திவ(ப) | ,, | 1825 | 50 | நள | ,, | 1856 |
| 20 | விய | ,, | 1826 | 51 | பிங்கள | ,, | 1857 |
| 21 | சருவசித்து | ,, | 1827 | 52 | காலயுத்தி | ,, | 1858 |
| 22 | சருவதாரி | ,, | 1828 | | (காளயுக்தி) | | |
| 23 | விரோதி | ,, | 1829 | 53 | சித்தாத்திரி | ,, | 1859 |
| 24 | விகுருதி | ,, | 1830 | 54 | ர(ரௌ)வுத்திரி | ,, | 1860 |
| 25 | கர | ,, | 1831 | 55 | துர்(ன்)மதி | ,, | 1861 |
| 26 | நந்தன | ,, | 1832 | 56 | துந்துபி(மி) | ,, | 1862 |
| 27 | விச(ஜ)ய | ,, | 1833 | 57 | ருதிரோத்காரி | ,, | 1863 |
| 28 | சய(ஜெய) | ,, | 1834 | | (ருத்ரோத்காரி) | | |
| 29 | மன்மத | ,, | 1835 | 58 | ரக்தாட்சி | ,, | 1864 |
| 30 | துர்(ன்)முகி | ,, | 1836 | 59 | குரோதன | ,, | 1865 |
| 31 | ஏ(ஹே)விளம்பி | ,, | 1837 | 60 | அக்ஷய | ,, | 1866 |

* தமிழ்ப் புத்தாண்டு சித்திரைமாதம் முதல் நாள் பெரும் பாலும் ஏப்ரல் மாதம், 14-ஆம் தேதி தொடங்கும். அதுவே தமிழாண்டின் தொடக்கம்.

* A Grammar of the Common Dialect of the Tamil language by Constantius Joseph Beschi—Tanjore Sarasvatimahal Series No 133—1971. (Pp. 225-227). first published in 1848.

## மழவை. மகாலிங்கையர்

**தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்; 1847; கல்விக்கடல் அச்சுக்கூடம்; திருவண்ணாமலை; பக். 7+228=235.**

முதன் முதலில் தொல்காப்பியத்தை அச்சில் கொணர்ந்தவர் மழவை மகாலிங்கையர். தொல்காப்பியம்—எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையை 1847 இல் ஆகஸ்டு மாதம்* அதாவது சாலிவாகன வருஷம் 1770க்குச் சரியான பிலவங்க வருஷம் ஆவணி மாதம் (இவ்வாண்டு பிழையாகக் கொடுக்கப்பட்டுள்ளது) வெளியிட்டார். சுவடியில் இருப்பதை அவ்வாறே வெளியிட்டுள்ளார். நூற்பாவும், உரையும் உரைநடை அமைப்பிலேயே உள்ளன. நூற்பா வடிவத்தில் நூற்பாக்கள் தரப்பெறவில்லை. முகவுரை, பதிப்புரை போன்றன இல்லை. சிறப்புப்பாயிரமாக நிலைமண்டில ஆசிரியப்பா ஒன்றினைத் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் தாண்டவராய சுவாமிகள் கொடுத்துள்ளார். பின்பு தொல்காப்பியச் சூத்திரவகராதி—இயலகராதி இவை உள்ளன.

இயலகராதி இவ்வாறு அமைந்துள்ளது.

| பக்கம் | | இயலகராதி | சூத்திரம் | |
|---|---|---|---|---|
| 115 | ௱௰௫ | உயிர்மயங்கியல் | ௯௩ | 93 |
| 103 | ௱௩ | உருபியல் | ௩௰ | 30 |
| 193 | ௱௯௩ | குற்றியலுகரப்புணரியல் | ௭௮ | 78 |
| 81 | ௮௧ | தொகை மரபு | ௩௰ | 30 |
| 11 | ௰௧ | நூன்மரபு | ௩௩ | 33 |
| 53 | ௫௩ | பிறப்பியல் | ௨௰ | 20 |
| 59 | ௫௯ | புணரியல் | ௪௰ | 40 |
| 151 | ௱௫௧ | புள்ளிமயங்கியல் | ௱௰ | 110 |
| 32 | ௩௨ | மொழிமரபு | ௪௯ | 49 |

இயலகராதி முற்றிற்று

ஆக இயல் ௯க்குச் சூத்திரம் ௪௱௮௰௩ 483

இயலகராதி கூட முதற்பதிப்பில் அகரவரிசையில் கொடுக்கப் பெற்றுள்ளதை அறிகிறோம். எண்கள் அனைத்தும் தமிழில் தரப் பெற்றுள்ளன. நூலின் முதற் பக்கமே முகவுரையாகவும் பதிப்புரையாகவும் அமைகின்றது.

---

* An Indian Ephemeries—A.D. 1800 to A.D. 2000; L.D. Swamikannu Pillai; P. 97

உ

# தொல்காப்பியம்.

இஃது
ஜமதக்கினிமஹாரிஷியின் புத்திரரும்,
அகஸ்தியமஹாரிஷியின் முதன் மாணாக்கரும்
திரணதூமாக்கினியென்னுமியற்பெயருடைய

## தொல்காப்பியமகாரிஷியினால்

அருளிச்செய்யப்பட்டது.
இதில்
முதலாவது - எழுத்ததிகாரமூலமும்,
மதுரை ஆசிரியர் பாரத்துவாசி

## நச்சினார்க்கினியரால்

அருளிச்செய்யப்பட்ட விருத்தியுரையும்,
கரலிகிதங்களாலாய வழுக்களை நீக்கி பரிசோதித்துத் தருகவெனச் சில
வித்துவான்கள் கேட்டுக்கொள்ளக் கனம் பொருந்திய
கும்பெனியாரால் ஏற்படுத்தப்பட்ட பூவம்
சிட்டியென்னுஞ் சகல சாஸ்திர
சாலைத் தமிழ்த் தலைமைப்
புலமைநடாத்திய
மழவை

## மகாலிங்கையரவர்களால்

பலபிரதிகளைக்கொண்டாராயப்பட்டுத்
திருவண்ணாமலை

## வீரபத்திரையரால்

தமது-கல்விக்கடல் அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டன.

---

சா-லிவாகன - ௲ - [illegible] - சரியான பிலவங்க ௵ ஆவணிமீ.

இம்முதற் பக்கத்திலிருந்து பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர் மழவை மகாலிங்கையர்—பல வித்துவான்கள் வேண்டுகோளுக் கிணங்க இந்நூலை வெளியிட்டுள்ளார் எனத் தெரிகிறது. எத்தனைச் சுவடிகளைப் பார்த்துள்ளார், சுவடிகள் எங்கிருந்து கிடைத்தன? ஓலைச் சுவடிகளா! தாள் சுவடிகளா! போன்ற எந்தக் குறிப்பும் இல்லை. இத் தொல்காப்பிய முதற் பதிப்பின் முதற் பக்கத்திலிருந்து தொல்காப்பியர்— திரணதூமாக்கினி கதை எந்த அளவில் பரவியுள்ளது அல்லது பரப்பப்பட்டது என்பது தெளி வாகிறது. சுவடிகளில் இது போன்ற செய்திகள் இருப்பதாகத் தோன்றவில்லை. பதிப்பாசிரியர் தாம் கேட்டவற்றை உளத்தில் கொண்டு இவ்வாறு செய்துள்ளார் எனத்தோன்றுகிறது. (இப் பதிப்பு—திருப்பனந்தாள் தமிழ்க் கல்லூரி நூலகத்திலிருந்து திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள்வழியாகக் கிடைத்தது).

## சாமுவேல்பிள்ளை

**தொல்காப்பிய நன்னூல்; 1858; கிறிஸ்து மதக்கியான விளக்கச் சங்கத்தார் அச்சுக்கூடம்; சென்னை; பக். xvi+128+70=214.**

1847 இல் தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க் கினியம் வெளிவந்த பின்பு, சில ஆண்டுகள் கழித்து 1858 இல் தொல்காப்பியம் முழுவதும் வெளிவந்தது. எழுத்து, சொல், பொருள் மூன்று அதிகாரங்களும் மூலவடிவத்தில் நன்னூல் நூற் பாக்களை ஒப்பு நோக்கும் நிலையில் 'தொல்காப்பிய நன்னூல்' என்ற தலைப்பில் திரு. சாமுவேல்பிள்ளையால் வால்ற்றர் ஜாயீஸ் என்பவர் உதவியுடன் வெளியிடப்பெற்றது. தமிழர்க்குத் தொல் காப்பியம் முழுவதும் அச்சில் கிடைத்தது 1858 இல்தான். மேல் நாட்டினர் இந்தியாவை ஆண்டபோது தமிழரின் கல்வி வளர்ச்சிக் காகவும் தமிழ்மொழி இலக்கணத்தைத் தெளிவாகத் தெரிந்து கொண்டு நூல் இயற்றுவதற்காகவும் இவ்வொப்பு நூல் வெளியிடப் பெற்றதாகப் பதிப்பாசிரியர் கூறுகிறார்.

இந்நூலுக்கும் தெளிவான முகவுரையோ பதிப்புரையோ இல்லை—எனினும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்திற்கு விளக்கம் தரும்போது அகத்தியர் தொல்காப்பியர் கதை கூறப் பெறுகிறது. சமஸ்கிருதம் தமிழ் இவற்றின் தோற்றம் சிவனாலும் சுப்பிரமணியனாலும் அமைந்ததாகக் கூறப்பட்டுள்ளது. விளக்கங் கள் எல்லா இடங்களிலும் ஆங்கில மொழியில் தரப்பெற்றுள்ளன. சமஸ்கிருதம் தெலுங்கு வரிவடிவங்கள் கொடுக்கப்பெற்றுள்ளன.

# THOLCAPYA-NUNNOOL,

OR A

# COMPARATIVE REFERENCE EDITION

OF THE

## T: 8.6 THOLCAPYAM AND THE NUNNOOL

(THE MOST ANCIENT AND ONLY STANDARD SYSTEMS OF GRAMMATICAL LITERATURE),

WITH

## EXAMPLES, AND NOTES CRITICAL AND EXPLANATORY,

TO WHICH ARE APPENDED A SYNOPSIS OF THE WHOLE OF DRAVIDIAN PHILOLOGY, AND AN ACCOUNT OF THE STANDARD AUTHORS AND COMMENTATORS IN TAMIL.

BY

S. SAMUEL PILLAY,

REVISED BY

WALTER JOYES, ESQ

**PART I.**

MADRAS.

PRINTED FOR THE EDITOR,

BY D. P. L. C. CONNOR, AT THE PRESS OF THE SOCIETY FOR PROMOTING CHRISTIAN KNOWLEDGE, VEPERY.

1858.

# தொல்காப்பிய நன்னூல்;

இதனுள்

தொல்காப்பியமும் நன்னூலும், தம்முள் ஒற்றுமைவேற்றுமைகள் விளக்க, ஒருபான்மை உதாரணசகிதமாய்ச் சூத்திரசம்பந்தத்துடனே அச்சிடப்பட்டிருக்கின்றன :

இந்நூல்,

ஐந்திரபாணினீயமென்றும் சமரசபாஷியசித்தாந்தமென்றும் இனிப்பெயர் பெறும் பெற்றிக்கேற்ப உத்தேசித்து, வடமொழிவழக்கும் தமிழ்மொழி வழக்கும் ஐங்கிலியவழக்குங்கொண்டிருக்கின்ற சம்பந்தா சம்பந்தங்களைக் காட்டிப் பூரணவிருத்தியா யெழுதப்புகுந்திருக்குமொரு நூலுக்கு,

முதற்பிரயத்தனம்.

---

இப்பதிப்பு

இ. சாமுவேல்பிள்ளையினால், வால்ற்றர் ஜாயீஸ்

துரையவர்களுதவியைக்கொண்டு நிறைவேறியது.

---

நூற்பயன்,

இத்தேசத்தாரிடத்தில் ஐங்கிலியதுரைத்தனத்தார் கல்விவிருத்திபண்ணி வருமுயற்சியினால், இனித்தமிழ்நாட்டின் நன்மைக்கென்று புது நூலியற்றுவோர்க்குப் பாஷைநடைகளின் பேதாபேதத் தோன்றாநிற்குமேவேண்டிய, தெளிவு.

---

[illegible], ௲௮௱௫௰௮

சென்னபட்டணம், கிறிஸ்தியான விளக்கச்சங்கத்தார் அச்சுக்கூடத்தில் காணர் துரையவர்களால் பதிப்பிக்கப்பட்டது.

இதைப் பதிப்பித்த சாமுவேல்பிள்ளைக்குச் சுவடி எங்கிருந்து கிடைத்தது? எத்தனை சுவடிகள் கிடைத்தன போன்ற செய்திகள் எதுவுமில்லை. இருப்பினும் ஓலைச் சுவடியோ, தாள் சுவடியோ இன்றி இவர் பதிப்பித்திருக்க இயலாது. இவரிடம் தொல் காப்பியப் பொருளதிகாரம்—உரையுடனுள்ள கையெழுத்துப் படியைப் பெற்றதாகச் சி. வை. தாமோதரம்பிள்ளை தம் பொருளதிகாரப் பதிப்புரையில் குறிக்கின்றார்*

(இப்பதிப்பு அடையாறு தியாசபிகல் சொஸைற்றி நூலகத்தி லிருந்து பெறப்பெற்றது.)

**முதற்பதிப்புகளின் சிறப்பு**

பொது நிலையில் முதற் பதிப்புகள் அனைத்தும் மிகுந்த பயனுடையன. ஏட்டில் இருப்பதை அவ்வாறே அச்சிட்டனர். அதனால் தமக்குத்தெரிந்த இலக்கணத்தை அப்பதிப்புகளில் காட்டவில்லை. பாடவேறுபாடுகள் முதற் பதிப்புகளில் மிகக் குறைவாகவே உள்ளன. பிற்காலத்தில் பதிப்பித்தோர் தமக்கு இலக்கணம் தெரிந்துள்ளதாக நினைத்துப் பல பாடங்களை உருவாக்கியுள்ளனர். இதனால் உண்மை மறைந்து பிழை, நிலை பெற்றுவிட்டது. ஒன்றிரண்டு சான்றுகள் தரலாம்.

உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி யிறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பாகுநவு முறழ்பா குநவுமென்
றாயீ ரியல வல்லெழுத்து வரினே—152

(எழு—தொகைமரபு—9)

உயிரீறாகிய முன்னிலைக்கிளவி—எறி, கொணா—போன்றன

வல்லெழுத்து வருதல்—எறி+கொற்றா— }
உண்+கொற்றா— } இயல்பாதல்

நட+கொற்றா—நடகொற்றா }
நடக்கொற்றா }
ஈர்+கொற்றா—ஈர்கொற்றா } உறழ்பாதல்
ஈர்க்கொற்றா }

இங்கே இயல்பாகுநவும்—உறழ்பாகுநவும்—என்பது

---

* தொல்காப்பியம்—பொருளதிகாரம்—சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு—1885—பதிப்புரை—பக். 6.

இயல்பாகுனவும்—உறழ்பாகுனவும்—எனத் த(ந்) நகரத்திற்குப் பதில் ற(ன்)னகரமே உள்ளது முதற்பதிப்புகளில் 1848, 1858, 1868; (தொல்—எழுத்து—மூலம்—1858

,, ,, நச்சர்—1848

,, ,, இளம்—1868)

அதோடு எழுத்திலக்கண உரைச் சுவடிகளாகிய

இளம் பூரணர்—*1051; 1052;

நச்சினார்க்கினியர்—11;

மூலம் மட்டுமுள்ள சுவடி—115;

இவை அனைத்திலும் ற'ன்'னகரமே உள்ளது. ஆயின் 1900க்குப் பின்பு வந்த அச்சுப்பதிப்புகள் அனைத்திலும் த'ந்'நகரமே உள்ளது. அதனால் தற்போதைய தொல்காப்பியச் சொல்லகராதியில் இயல்பாகுன—உறழ்பாகுன—என்ற வடிவங்கள் இல்லை. 'ஆகுன' என்பதுதான் வடிவம்.

இச்சொற்களுக்குப் பொருள் எழுதும் பொழுது இயல் பாவனவும் உறழ்ச்சியாவனவும்—இளம்; இயல்பாய் முடிவனவும்—உறழ்ந்து முடிவனவும்—நச்சர்; என எழுதுகின்றனர்.

1. அதோடு ற(ன்) னகரம்—த(ந்) நகரம் ஆகாது புணர்ச்சியில்; த(ந்)நகரம்—ற(ன்)னகரம் ஆகும்.
   மேல்+நிலை—மேனிலை.

2. திராவிடமொழிகளிலும்—ஏன் இந்திய மொழிகளிலும் (ற) ன் னகரத்திற்கு வரிவடிவம் இல்லை (alveopalatalnasal). த(ந்) நகரத்திற்கு வரிவடிவம் உண்டு. தமிழ்மொழி தவிர எல்லா இந்தியமொழிகளிலும் 5 (ஐந்து) மெல்லின வரிவடிவங் களே உள. தமிழில் மட்டுந்தான் ஆறு மெல்லின வரிவடிவங்கள் உள. அசெமீஸ், ஒரியா போன்ற இந்திய மொழிகளில், மூன்று நான்கு மெல்லின வரிவடிவங்களே உள.[1]

---

* எண்கள் சுவடி எண்கள்.

1. தமிழிலுள்ள ழ, ற, ன இம்மூன்றும் வடமொழியில் இல்லை- தொல்காப்பியச் சொல்லதிகாரக்குறிப்பு—பி.சா. சுப்பிர மணியசாஸ்திரி—1930.
   Comparative Indian literature—vol-1 K. M. George Pages—38; 9; 32:

3. இயல்பாகுன—என்பது இயல்பாயின—இயல்பாவன—என்ற நிலைகளில் காலங்காட்டும். போனான்—சொன்னான்—போன்றவற்றில் ற(ன்)ன கரம் கால இடைநிலையாயுள்ளது. எவ்விடத்திலும் த(ந்) நகரம் காலம் உணர்த்தும் இடைநிலையாக வருவதில்லை.

4. தொல்காப்பியத்தில் மாற்றுவடிவங்களாக

வருந—வருன—வருவன
மிகுந—மிகுன—மிகுவன
தகுந—தகுன—தகுவன

என அமைகின்றன. ஆகுவன என்பதன் சுருக்கமாக ஆகுன அமையலாம். அங்குத் த(ந்) நகரம் வருவதற்கு வாய்ப்பே இல்லை. இந்நிலையில் தெளிவான பாடமாக 'ஆகுன' என்பது அமைவது பொருந்தும்.

அதோடு 'உறழ்பாகுன' என்ற வடிவம் முதற் பதிப்புகளில் 'உறழாகுன' என்றே உள்ளது (1848; 1858). 'உறழாகுன' முந்தைய வடிவம்; 'உறழ்பாகுன' பிந்திய வடிவம்.

இப்பாட வேறுபாட்டால் மொழி அமைப்பு மாற்றமடைகின்ற நிலையைப் பார்க்கிறோம். இதற்குக் காரணம், ஏட்டில் இருப்பதை அச்சேற்றாமல் தங்களுக்கு இலக்கணம் தெரியும் என மாற்றிய பதிப்பாசிரியர்தாம்.

## சி. வை. தாமோதரம்பிள்ளை

**1. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—சேனாவரையம்; 1863; கலாரத்நாகரம் அச்சுக்கூடம்; சென்னை; பக். 2+305+8=315**

தொல்காப்பியப் பதிப்புகள் தொடர்பாகப் பல நிலைகளில் முதல் நிலையில் நினைக்கத்தக்கவர் சி. வை. தாமோதரம்பிள்ளை. முதன்முதலில் தொல்—சொல்—சேனாவரையத்தைப் பதிப்பித்தவர்; 1868இல் நல்லூர் ஆறுமுக நாவலர் உதவியுடன் பல சுவடிகளைக் கொண்டு ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். பெரும்பான்மையும் முதற்பதிப்புகள் நூற்பா அமைப்பிலில்லாமல் உரை நடைபோன்று நூற்பாவும் உரையும் காணப்பெறும். 1848; 1858; மற்றும் 1868—இல் வெளிவந்துள்ள தொல்—சொல்—சேனாவரையம் கோமளபுரம் இராசகோபாலபிள்ளை பதிப்பும்

அவ்வாறே. சி. வை. தா—பதிப்பு விபவ ஹூ புரட்டாசி மீ; இராச கோபாலப்பதிப்பு விபவ ஹூ கார்த்திகை மீ. இரண்டு மாதங்கட்கு முன்பு சி. வை. தா. பதிப்பு வந்துவிட்டது. ஆயின் அது, நூற்பா அமைப்பில் நூற்பாக்களும், உரை பிறிதொரு சிறிய எழுத்திலும் அச்சிடப்பெற்றுள்ளது; அடிக்குறிப்புகள் சில இடங்களில் தரப் பெற்றுள்ளன. சிவஞான முனிவரின் தொல்காப்பியச் சூத்திர விருத்திக் கருத்துகள் ஒப்புமைக்கு எடுத்தாளப்பெற்றுள்ளன. பதிப்புரை இல்லை. முகப்புப் பக்கமே பதிப்புரையாக அமைகின்றது. பின்பகுதியில் நூற்பாக்களுக்கு அகராதி உள்ளது. சைவப்பற்றின் காரணமாக "உ—கணபதி துணை" என்பது இப்பதிப்பில் காணப்பெறுகிறது.

பொருளடக்கத்தைச் 'சூசி பத்திரம்' என வழங்கினர்,

**சூசி பத்திரம்**

| பக்கம் | | சூத்திரத்தொகை |
|---|---|---|
| க | கிளவியாக்கம் | சுக |
| சூஉ | வேற்றுமையியல் | உஉ |
| அஎ | வேற்றுமை மயங்கியல் | ௩௪ |
| ககங | விளிமரபு | ௩எ |
| கஉஎ | பெயரியல் | சங |
| கருரு | வினையியல் | ௫க |
| உ0க | இடையியல் | சஅ |
| உஉஅ | உரியியல் | க00 |
| உசஎ | எச்சவியல் | சூஎ |
| | | ஆ சசுங |

இவ்வாறு அமைந்துள்ளது. 1848இல் இயலகராதியும் அகர வரிசையில் தரப்பெற்றது; இப்போது இயல் வரிசையில் தரப் பெற்றுள்ளது.

தொல்—சொல்—சேனாவரையம் முதற் பதிப்பாகையால் ஒத்திட்டுப் பார்ப்பதற்கு மிகத் துணையாக அமைகின்றது. பாட வேறுபாடுகள் போன்றவை இல்லை. கணேசையர் பதிப்பைப் போன்று பிற அகராதிகளும் இல்லை,

உ

கணபதி துணை.

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

இஃது

வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த

சேனாவரையருரையோடும்

நல்லூர்

ஆறுமுகநாவலரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்த,

யாழ்ப்பாணம்

சி. வை. தாமோதரம்பிள்ளையால்

சென்னபட்டணம்:

ஊ. புஷ்பரதச்செட்டியாரது

கலாரத்நாகரவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1868

விபவஞு புரட்டாசியீ

**2. தொல்காப்பியம்—பொருளதிகாரம் — நச்சினார்க்கினியம்; 1885; வித்தியாநுபாலனயந்தரசாலை; சென்னை; பக். 889.**

தொல்காப்பியம்—பொருளதிகாரம்—ஒன்பது இயல்களையும் ஒருசேரப் பதிப்பித்தவர், சி. வை. தா. 1885இல் முதன் முதலாகப் பொருளதிகாரம் உரையுடன் வெளிவந்தது. எழுத்தையும் சொல்லையும் எளிதாகப் பதிப்பித்துவிடலாம். மொத்த நூற்பாக்கள் 1610*-இல் எழுத்து—483; சொல்—463; பொருள்—664. பொருளதிகாரத்தில் நூற்பாக்கள் ஏனைய அதிகாரங்களைக் காட்டிலும் மிகுதி. அதோடு எழுத்து, சொல்லைக் காட்டிலும், பொருளில் சங்க இலக்கிய எடுத்துக்காட்டுகள் மிகுதி. இலக்கியச் சான்றுகள் அதிகம். அவற்றை அறுதியிடுவது மிகக் கடினம். சுவடிகளிலிருந்து நூல்களை அச்சுக்குக் கொணர்வது எளிதன்று· உயிர்மெய்க்கும், மெய்களுக்கும் வேறுபாடிருக்காது. புள்ளிகள் வைப்பதில்லை. க—வை உயிர்மெய்யாகவும் மெய்யாகவும் படிக்கலாம். நெடிலுக்கும் குறிலுக்கும் வேறுபாடிருக்காது. கொடு—கோடாக இருக்கலாம். ரகரத்திற்கும் நெடில் 'ா' காலுக்கும் வேறுபாடில்லை. கா—கரவாகலாம். இதற்குச் சி. வை. தா. தரும் எடுத்துக்காட்டையே தரலாம்.

> **பொருட் தொகுதி** என்பதைப் போருட் தொகுதி என்றும், பேரர் உட்தொகுதி என்றும், பேர் அருட்தொகுதி என்றும், பேரருட் தேர்குதி என்றும், போருட்தேர்குதி என்றும், பொருட் தேர்குதி என்றும் படிக்கலாம். ஒரு சுவடியில் பொருட்டொகுதி என்றிருந்ததால் இது தெளிவுபடுகின்றது.

இப்பதிப்பிற்கு 12 பக்கங்களில் மிகத் தெளிவான பதிப்புரை எழுதியுள்ளார். திருநெல்வேலிப் படி 2; மதுரைப் படி 2; தஞ்சைப் படி 3; சென்னைப்பட்டணப் படி 3, யாழ்ப்பாணப் படி 2—ஆகப் பன்னிரண்டினை ஒப்பு நோக்கிப் பதிப்பித்துள்ளார். அவை யார் யாரிடமிருந்து கிடைத்தன என்பதையும் குறிப்பிட்டுள்ளார். அக்காலத்தில் சென்னையில் தொல்காப்பியம் முழுவதும் தெரிந்த ஒருவர் தொல்காப்பிய வரதப்பமுதலியார் என்றே அழைக்கப்பட்டுள்ளார்.

---

* **நூற்பா வேறுபாடுகள்**

| **எழுத்து** | **சொல்** | **பொருள்** |
|---|---|---|
| இளம்—483 | இளம்—456 | இளம்—656; (1595) |
| நச்—483 | சேனா—463; 429; | நச்—491; 6 இயல்கள் |
| | தெய்வ—452 | பேரா—418, 4 இயல்கள்— |
| | நச்—463 | |
| | கல்—254—உரை குறைவு | |

எழுத்தும், சொல்லும் பாடஞ்சொல்லப் பலர் இருந்தாலும் பொருள் பாடஞ்சொல்ல பிறையூர் வடுகநாததேசிகர் ஒருவரே அக்காலத்திருந்தார் என்ற குறிப்பும் கிடைக்கின்றது.

பழந்தமிழ் நூல்களை வெளிக்கொணர வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் மிகுந்த சிரமத்துடன் இத்தொல்காப்பியம்—பொருளதிகாரத்தைப் பதிப்பித்துள்ளார் என்பது அவர் பதிப்புரையால் மிகத் தெளிவாகின்றது.

''திரவியலாபத்தை எவ்வாற்றானுங் கருதி முயன்றிலேன். கைநஷ்டம் வராதிருப்பதொன்றே எனக்குப் போதும். இது வரையிற் பதிப்பித்த நூல்களால் எனக்குண்டான நஷ்டம் கொஞ்சமல்ல. இவ்வித முயற்சியிற் கையிடுவோர் நஷ்டமுறாதிருத்தற் பொருட்டுச் சர்வ கலாசாலைப் பரீக்ஷையிற் தேறி, ஆங்காங்கு பெரும் உத்தியோகம் வகித்திருப்போர் தத்தம் சொயபாஷையில் அச்சிடப்படும் பூர்வகிரந்தங்களில் ஒரு பிரதி வாங்குதல் அவர் கடமையென்றெண்ணுகிறேன்.

இந்நூலைப் பதிப்பித்தற்கு வேண்டிய காகிதத்திற்காகத் திரவிய சகாயஞ் செய்த கண்ணிய தர்மசீலர் இருவர் உளர். அவர்களுக்கு மிக்க நன்றி கூறுகின்றேன்'' என இறுதிப் பகுதியில் எழுதுகின்றார். (முடிந்தால் அவரது இப்பதிப்புரை முழுவதும் பின்னிணைப்பாகத் தந்திருக்கலாம்; இப்பதிப்புரையால் கடந்த நூற்றாண்டு உரைநடை அமைப்பு; 2. ஈழத்தமிழ் அமைப்பு; 3. பதிப்பித்தலின் சிக்கல்கள்; 4. தொல்காப்பியம் பற்றிய எண்ணங்கள்—இவற்றைத் தெரிந்துகொள்ளலாம்)

இவர் பொருளதிகாரத்தைப் பதிப்பித்தபோது முழுவதும் நச்சினார்க்கினியர் உரையென்றே கருதிப் பதிப்பித்துள்ளார். ''தொல்காப்பியம்—நச்சினார்க்கினியம் முற்றும்'' என்றே உள்ளது. நூற்பா ஒருவகை எழுத்திலும் உரை பிறிதொரு எழுத்திலுமாக அச்சிடப்பட்டுள்ளன. பின்பு ரா. ராகவையங்கார் முதல் ஐந்து இயல்களுக்கு நச்சினார்க்கினியமும், பின் நான்கு இயல்களுக்குப் பேராசிரியமும் எனத் தெளிவுபடுத்துகின்றார்.*

முதற்பதிப்பு என்ற முறையில் மிகவும் பயனுடைய பதிப்பு. அடிக்குறிப்புகளோ, பாடவேறுபாடுகளோ தரப்படவில்லை. முதலில் சூத்திர அகராதி xii பக். அடுத்துப் பதிப்புரை—கஉ (12) பக்; பிழைதிருத்தம்—ச (4) பக்; நூல்—அ௫க (851) பக்; ஆக 889 பக்கங்கள். வித்துவான் மு.சண்முகம்பிள்ளையிடமிருந்து இப்பதிப்பு கிடைத்தது.

---

* தொல்காப்பியம்—பொருளதிகாரம்—இரண்டாம்பாகம்—பின்னான்கியல்களும் பேராசிரியமும்—சி. கணேசையர் பதிப்பு—1943. முகவுரை—பக். vii.

**3. தொல்காப்பியம்— சொல்லதிகாரம் — நச்சினார்க்கினியம்; 1892; வித்தியாநுபாலன யந்திரசாலை; சென்னை; பக் 291+8=299**

தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் உரையைத் தாம் முழுவதும் வெளியிடவேண்டும் என்ற எண்ணம் சி. வை. தாவுக்கு இருந்ததால் 1848-இல் தொல்—எழுத்து—நச்சினார்க்கினியம் வந்திருந்தாலும் 1891-இல் நூற்பா அமைப்பில் நூற்பாக்களும், உரை பிறிதொரு வகை எழுத்திலுமாக அச்சிட்டார். பதிப்புரையில் இதுபற்றிக் குறித்துள்ளார். பதிப்புரை, பிழைதிருத்தம், நச்சினார்க்கினியர் பற்றிய உரைச் சிறப்புப் பாயிரம்—நூல்—இயல் வெண்பா—சூத்திர எண்ணிக்கை வெண்பா, சூத்திர அகராதி என்ற நிலையில் இப்பதிப்பு அமைந்துள்ளது. அடிக்குறிப்புகள் சில உள.

தொல்—சொல்—சேனாவரையத்தை 1868இல் வெளியிட்ட சி. வை. தா. தொல்—சொல்—நச்சினார்க்கினியத்தை 1892இல் வெளியிட்டார். இப்பதிப்புத்தான் இவ்வுரைக்கு முதற்பதிப்பாக அமைகின்றது. முன்பகுதி இல்லாததால் பதிப்புரை போன்றவை கிடைக்கவில்லை. அடிக்குறிப்புகள் இல்லை. நூல், இயல் நூற்பாஎண், வெண்பா, சூத்திர அகராதி—இந்நிலையில் நூல் அமைந்துள்ளது. முதற்பதிப்பாக இருப்பதால், பின் பதிப்புகளோடு ஒத்துப்பார்த்துப் பாடவேறுபாடுகள் காண மிக உதவியாக உள்ளது. இப்பதிப்பு மறைமலையடிகள் நூலகத்திலிருந்து கிடைத்தது.

தொல்—சொல்—சேனாவரையம் (1868)
தொல்—பொருள் —நச்சினார்க்கினியம் (1885)
தொல்—சொல்—நச்சினார்க்கினியம் (1892) மூன்றையும் முதன் முதல் அச்சில் கொணர்ந்தவர் என்ற பெருமை சி. வை. தா. வைச் சாரும்.

## இராசகோபாலபிள்ளை

**தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—சேனாவரையம்; 1868; வர்த்தமான தரங்கிணி அச்சுக்கூடம்; சென்னை;**

ஒப்புமைக்காக அதே 1868-இல் வெளிவந்துள்ள தொல்—சொல்—சேனாவரையம் இராசகோபாலபிள்ளைப் பதிப்புச் செய்திகளையும் இங்கே குறிப்பிடலாம். சி. வை. தா. சைவர், அதனால் 'உ' பிள்ளையார் சுழி—கணபதி துணை—என்றும்

இராசகோபாலபிள்ளை—வைணவர் — அதனால், ஸ்ரீ—ஸ்ரீமத் வரவரமுநயே நம: என்றும் உள்ளன. இதற்கும், பதிப்புரை, முகப்புப்பக்கமே. தனிப்பதிப்புரையோ முகவுரையோ கிடையாது.

தொல்காப்பியச் சேனாவரையம். கா—பச்சையப்பமுதலியார் தர்மவிசாரணை சபாத்தியக்ஷராகிய ம-ா-ா-ஸ்ரீ மேலைமணம்பேடு ஸ்ரீநிவாஸ சடகோப முதலியாரவர்கள் வேண்டுகோளின்படி சென்னை—நார்மல் ஸ்கூலென்னும் போதனா சத்திவிர்த்தி வித்தியாசாலைத் தமிழ்த் தலைமைப் புலவர் கோமளபுரம் இராசகோபாலபிள்ளையவர்களால் கையெழுத்து வழுவறப் பரிசோதிப்பித்து, பு—கந்தசாமி முதலியாரவர்களால் வர்த்தமான தரங்கிணீசாலை அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. விபவ ஹூ கார்த்திகை மீ.

இவ்வாறு முகப்புப் பக்கம் உள்ளது.

முதற்பகுதியிலேயே ஸ்ரீ-ஸ்ரீமத் பராங்குசாய நம: சூத்திரவகராதி உள்ளன. இயலகராதி, பிழைதிருத்தம், நூல், நூற்பாவும் உரையும் (சேனாவரையர்) உரை நடை அமைப்பில் அமைந்துள்ளன. ஆயின் நூற்பா தனியாகத் தெரியும் நிலையிலும்—உரை அதன் கீழும் கொடுக்கப்பெற்றுள்ளன. சொல்—நூற்பா எண்ணிக்கையாக இவர் 429 தருகிறார். பொதுவாக 463. காரணம் சேனாவரையர், உரிச்சொல்லியலில் சில நூற்பாக்கட்குச் சேர்த்து உரையெழுதி உரைக்குப்பின் இவை இரண்டு சூத்திரம் (பக்-௧௩௩—நூற்பா—௩௦௦; ௩௦௨; ௩௦௩; ௩௦௬) இவை மூன்று சூத்திரம் (பக்—௧௩௫—நூற்பா—௩௧௫; ௩௧௬); இவை நான்கு சூத்திரம் (பக்—௧௩௫—நூற்பா—௩௧௮) என எழுதுகின்றார். அதை அவ்வாறே அச்சிட்டுள்ளார். ஏட்டிலிருப்பதை அவ்வாறே அச்சிடுகின்ற நிலை. தொல்—சொல்—சேனாவரையச் சுவடி எண் 60-இல் இதே நிலை காணப்பெறுகிறது. நூற்பா நிலையில் இதை அவ்வாறே பின்பற்றியுள்ளார். ஆயின் சுவடியில் 'மதிபாய் சடைமுடி' என்ற சிவனைப்பற்றிய வெண்பாவும், ''தாமரைபுரையும் காமர் சேவடி'' என்ற குறுந்தொகை கடவுள் வாழ்த்துப் பாடலும் இன்னும் சில இறைத்துதிகளும் உள்ளன. இராசகோபாலபிள்ளை வைணவராதலால் அவர்பதிப்பில் இவைவிடப் பெற்றுள்ளன எனத் தெரிகிறது.

முதற்பதிப்பாக இருப்பதால் பாடவேறுபாடுகளைத் தெரிந்து கொள்ள மிகத் துணையாக உள்ளது. சான்றாக வினையியல் ''முன்னிலை வியங்கோள் வினையெஞ்சுகிளவி'' என்ற 25-ஆம் நூற்பாவில், 'பிரிவு' என்ற சொல்லை இளம்பூரணர் பாடமாகக் கொண்டுள்ளார். 'பிரிபு' என்பது நச்சர் பாடமாக உள்ளது. சேனாவரையர் முதற்பதிப்புப் பாடங்களாக (1868; 1868-இ) நச்சர் போன்று 'பிரிபு' என்பதே காணப்பெறுகின்றது. ஆயின் 1923-க்குப் பின் வந்த கழகப்பதிப்பிலும், கணேசையர் பதிப்பிலும் 'பிரிபு'—'திரிபு' ஆகின்றது. இத் 'திரிபு' என்பதே பிறபதிப்புகள் அனைத்திலும் உள்ளது. ஏன் ஆயிற்று, எச்சுவடிப் பாடம் போன்ற குறிப்புகள் எங்குமில்லை. பின்பு பதிப்பித்த கு. சுந்தரமூர்த்தி 'திரிபு' என்ற பாடமே பொருந்தும் என்பதற்கு விளக்கமும் தருகின்றார். முதற்பதிப்புகளைத் தெளிவாகப் பின் பற்றியிருந் தால் இத் 'திரிபு' என்ற பாடமே தோன்றியிருக்காது. யாரோ ஒருவர் 'பிரிபு'—ஐத் 'திரிபு' ஆக்கியதால் அதுவே பொருந்தும் என்பதற்குக் காரணங்களும் தோன்றிவிட்டன.

இராசகோபாலபிள்ளை பதிப்பில் வேற்றுமையியலில் ''வண்ணம் வடிவே யளவே சுவையே'' என்ற 17-ஆம் நூற்பாவில் 'தீமை' என்ற சொல்லுக்குத் 'தின்மை' என்ற பாடமுண்டு (பக்-46) என எழுதுகின்றார். இப்பாடம் வேறு எந்தச் சுவடியிலும், அச்சுப்பதிப்பிலும் காணப்படாத பாடம். இதுவே சிந்திக்கத் தூண்டும் பாடமாகவும் அமைந்துள்ளது, நினைக்கத்தக்கது.

சேனாவரையத்தை 1868-இல் இரண்டு மாதங்கள் முன் பின்னாகப் பதிப்பித்ததில் இராசகோபாலபிள்ளை இடைச் சொல்லியல், உரிச்சொல்லியல் என இயல் தலைப்புகள் தருகிறார். சி. வை. தா. இடையியல், உரியியல் எனத்தருகிறார். சி.வை.தா., 1892-இல் சொல்—நச்சினார்க்கினியம் பதிப்பில் இடைச் சொல்லியல், உரிச்சொல்லியல் என்றே தருகின்றார். கல்லாடரும் இடைச்சொல்லியல் என்றே தருகின்றார். இளம், தெய்வச் சிலையார் இருவரும் இடையியல், உரியியல் என்றே தருகின்றனர். ஆயின் 1988-இல் தொல்—சொல்—இளம்பூரணத்தைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வழிப்பதிப்பித்த அடிகளாசிரியர், இடைச் சொல்லியல், உரிச்சொல்லியல் என்றே தருகின்றார்.

சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதற்பதிப்புகளில் இடைச்சொல்லியல், உரிச்சொல்லியலாக இருந்தன, பின்பு வந்த

எல்லா இரு உரையாசிரியர் பதிப்புகளிலும் இடையியல் உரியியல் ஆகிவிட்டன.

பெயர்ச்சொல்லுக்கும், வினைச்சொல்லுக்கும் உள்ள தகுதியும் சிறப்பும் இடைச்சொல்லுக்கும் உரிச்சொல்லுக்கும் இல்லை. அதனால்தான் தொல்காப்பியம்,

சொல்லெனப் படுப பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே—(2—5—4)

எனக்கூறிப் பின்பு,

இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும்
அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப—(2—5—5)

என்று கூறுகின்றார். பெயரியல்—வினையியல் என்றால் பெயர்ச்சொல்லியல்—வினைச்சொல்லியல் என்று விளக்காதே பொருள் விளங்கும். இடையியல் என்றால் இடையில் வந்த இயலா? உரியியல் என்றால் எதற்கு உரிய இயல் போன்ற வினாக்கள் தோன்றுவது இயல்பு. அதனால் முதற்பதிப்புகளில் தெளிவாக இடைச்சொல்லியல், உரிச்சொல்லியல் எனப் பதிப்பித்துள்ளதைப் பின்பற்றினால் தெளிவு கிடைக்கும்; ஐயவுணர்வில்லை. அதோடு சுவடிகள்—நச்சர். 1044; சேனா. 60; இளம். 41A, மூ-73, போன்றவை இடைச்சொல்லியல்—உரிச்சொல்லியல் என்றே தருகின்றன. தெய்வச்சிலையார் உரைச்சுவடி 951இல்—இடைச் சொல், உரிச்சொல் எனக் காணப்பெறுகின்றன.

இதுபோன்ற தெளிவுகளுக்கு முதற் பதிப்புகள் துணை புரிகின்றன.

ஸ்ரீ

ஸ்ரீமத்வகுளாபரணமுனயே நம:

# தொல்காப்பியச்சேனாவரையம்.

———:o:———

கா-பச்சையப்பமுதலியார் தர்மவிசாரணை

சபாத்தியக்ஷராகிய

ம-ா-ா-ஸ்ரீ

மேலைமணம்பேடு

ஸ்ரீநிவாஸசடகோபமுதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

"சென்னை-நார்மல்க்காலேஜென்னும் போதநாசிரிய

வித்தியாசாலைத் தமிழ்த்தலைமைப்புலவர்

கோமளபுரம்

இராசகோபாலபிள்ளையவர்களால்

கையெழுத்துவழுவறப்

பரிசோதிப்பித்து

பு-கந்தசாமிமுதலியா

ரவர்களால்

வர்த்தமானதரங்கிணிசாகை அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

———

சுபவருஷம் கார்த்திகைமீ.

## சோடசாவதானம் சுப்பராய செட்டியார்

**தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—இளம்பூரணம்; நவ. 1868; அத்தினீயம் அண்ட் டேலி நியூஸ்பிரான்ச் அச்சுக்கூடம்; சென்னை பக். 4+112+7=123.**

தொல்காப்பிய எழுத்ததிகார இளம்பூரணர் உரையை முதன் முதலில் வெளிக்கொணர்ந்தவர் சுப்பராய செட்டியார். இவர் திரிசிரபுரம் (திருச்சி) மஹாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை மாணாக்கருள் ஒருவர். இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம்—மீனாட்சி சுந்தரம்பிள்ளையும், அவரின் மற்றொரு மாணாக்கர் தியாகராச செட்டியாரும், திரிசிரபுரம் பெரியண்ணப்புலவரும் கொடுத்துள்ளனர். இச்சிறப்புப் பாயிரங்களின் வழிச் சுப்பராய செட்டியார் பற்றியும், அச்சிட்ட கன்னியப்ப முதலியார் பற்றியும் தெரிந்து கொள்கிறோம். முகவுரையோ, முன்னுரையோ, பதிப்புரையோ எதுவும் இல்லை. நூலின் முதல் பக்கமும் சிறப்புப் பாயிரங்களும் நூல்பற்றிய செய்திகளைத் தருகின்றன.

நூற்பாக்களும், உரையும் தனித்தனியே தெரியுமளவு கொடுக்கப்பெற்றுள்ளன. நூற்பாக்கள் நூற்பா வடிவில் தரப் பெறவில்லை. உரைநடை அமைப்பில் உள்ளன. பின்னிணைப்பில் தொல்காப்பிய வெழுத்ததிகாரச் சூத்திரவகராதி—இயலகராதி—(1848-ஆம் ஆண்டுப் பதிப்பைப்போல்)—பிழைதிருத்தல்—பிரசித்த பத்திரிகை என—இதுவரை அச்சிற்பதிப்பித்த புத்தகங்கள்—இப்போது அச்சிற்பதிப்பிக்கிற புத்தகங்கள்—இனி அச்சிற் பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்—இவை தரப்பெற்றுள்ளன.

இந்நூல் டாக்டர். உ.வே. சாமிநாதையர் நூலகத்திலுள்ளது.

---

* இவர்தாம் சிலப்பதிகாரம்—புகார்க்காண்டம் மட்டும் உரையுடன் 1872-இல் வெளியிட்டவர்.

சிவமயம்.

[illegible]

# தொல்காப்பியம்.

திரணதூமாக்கினியென்னு மியற்பெயருடைய

தொல்காப்பியமுனிவர்

அருளிச்செய்தது.

இதனுள்

## எழுத்ததிகாரம்

உரையாசிரியரென்னுஞ் சிறப்புப்பெயருடைய

இளம்பூரணவடிகள் [illegible]

திரிசிரபுரம் மஹாவித்துவான்

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

மாணாக்கருளொருவராகிய

சென்னைக்கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத்

தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

சோடசாவதானம்

சுப்பராயசெட்டியாரால்

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டு,

பூவிருந்தவல்லி,

சுப்பராயமுதலியார் குமாரராகிய

கன்னியப்பமுதலியாரால்

சென்னை:

சி. டிக்குருஸது,

மல்லச்சாலையிலிருக்கும் அத்தீனியம் அண்ட் டேலிநியூஸ் பிரஸ்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1868 [illegible] கார்த்திகைமீ

## சிவஞான முனிவர்

**தொல்காப்பியச் சூத்திர விருத்தி; 1868; ஆறுமுக நாவலர்; யாழ்ப்பாணம்; பக். (1968 பதி)** கசு+174=190

சிவஞான முனிவர் இயற்றிய 'தொல்காப்பியச் சூத்திர விருத்தி' என்ற நூல் 1868-இல் ஆறுமுகநாவலர் வெளியிட்டுள்ள தாகத் தெரிகிறது. பின்பு 1946இல் சைவசித்தாந்தக் கழகம், கா.ர. கோவிந்தராச முதலியார் எழுதிய விளக்கத்துடன் வெளியிட்டுள்ளது. அடுத்து 1968இல் திருவாவடுதுறை ஆதீனம் ஆதீன மகா வித்துவான் தண்டபாணி தேசிகர் எழுதிய விளக்கக் குறிப்புகளுடன் வெளியிட்டுள்ளது. இதற்குச் சுவடிகளும் பயன் கொள்ளப் பெற்றுள்ளன என்பது பதிப்பாசிரியர் முகவுரையிலிருந்து தெளிவாகிறது. தொல்—பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம், நூன்மரபு முதல் நூற்பாவிற்கும் சிவஞான முனிவர் விருத்தியுரை இயற்றியுள்ளார். தர்க்கமுறை நடை, தெளிவான விளக்கங்கள் உள்ளன. நூற்பா பாடவேறுபாடுகள் பற்றிய செய்திகள் தனியாகக் குறிக்கப்பெற வில்லை.

## அரசஞ் சண்முகனார்

**தொல்காப்பியச் சண்முக விருத்தியின் முதலாவதாகிய பாயிர விருத்தி; 1905, வித்தியா விநோதினி முத்திராசாலை; தஞ்சாவூர்; பக்.** 246+23=269.

1905இல் அரசஞ் சண்முகனார் என்னும் பெரும்புலவர் தொல் காப்பியச் சண்முகவிருத்தியின் முதலாவதாகிய பாயிரவிருத்தி என்ற நூலை வெளியிட்டுள்ளார். தொல்காப்பியத்திற்கு விருத்தியுரை எழுத எண்ணியிருந்தார்போலும். ஆயின் இந்நூலில் பொதுப் பாயிரம், சிறப்புப் பாயிரம் இரண்டிற்கும் விருத்தியுரை எழுதி யுள்ளார். தொல்காப்பியத்திலிருந்து 65 நூற்பாக்களை மேற் கோளாகக் காட்டியுள்ளார். பக். 2- பின் இணைப்பு. அவற்றுள்ளும் சில பாடவேறுபாடுகள் கிடைக்கின்றன. சிறிது கடினமான நடை, தர்க்க ரீதியாகக் காரணகாரியங்களைக் காட்டி விளக்கங் கூறும் முறையில் எழுதப்பெற்ற நூல். தாம் கற்ற நூல்களில் 52-இலிருந்து மேற்கோள்கள் காட்டியுள்ளார். திருக்குறள் மேற்கோள் 160.

## பவானந்தம் பிள்ளை

1. **தொல்காப்பியம்—பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத் திணையியல்): நச்சினார்க்கினியம்;** 1916, **மினர்வா அச்சுக் கூடம்; சென்னை.**

2. தொல்காப்பியம் — பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்); நச்சினார்க்கினியம்; 1916, லாங்க்மென்ஸ் கிரீன் அண்டு கம்பெனி; சென்னை; பக். 862 (முதல் நூலும் இணைந்தது.)

3. தொல்காப்பியம்—பொருளதிகாரம் பேராசிரியம்; லாங்க்மென்ஸ் கிரீன் அண்டு கம்பெனி; சென்னை; பக். 666.

இவர் பதிப்பில் பொருளதிகாரம் முழுவதும் மூன்று தொகுதிகளாக வந்துள்ளன. 1916இல் அகத்திணையியல், புறத்திணையியல் ஒரு தொகுதியாகவும் களவியல், கற்பியல், பொருளியல் மற்றொரு தொகுதியாகவும் நச்சினார்க்கினியர் உரையுடன் வெளிவந்தன. 1917இல் பின் நான்கு இயல்களுக்குரிய பேராசிரியர் உரையுடன் வெளியிடப்பெற்றுள்ளது.

முன்னுரை, பதிப்புரை எதுவும் மூன்று தொகுதிகளிலும் இல்லை. மூன்றாம் தொகுதி இறுதியில் சூத்திரமுதற் குறிப்பகராதி உள்ளது.

1885இல் சி.வை.தா. பொருளதிகாரத்தை வெளியிட்ட பின்பு வந்த பதிப்பு இதுவே பல வளர்ச்சிகள் காணப்பெறுகின்றன.

இதில் நூற்பா பாட வேறுபாடுகள் தரப்பெற்றுள்ளன. நூற்பா எண்கள்— 40, 41, 66, 76, 79, 146, 203, 210, 218, 251, 324, 362, 394, 404, 416, 426, 440, 444, 449, 471, 472, 474, 475, 511, 518, 523, 536, 665.

அடிக்குறிப்புகள் பல நிலைகளில் சிறப்பாக அமைந்துள்ளன. உரைப்பாட வேறுபாடுகள் பல இடங்களில் தரப்பெற்றுள்ளன. மேற்கோள் பாடல்கள் அனைத்திற்கும் மிகுதியான பாடவேறுபாடுகள் தந்துள்ளார். சங்க இலக்கியச் செம்பதிப்புக்கு இப்பதிப்பு மிகுதியாகத் துணைபுரியும்.

முதல் இருதொகுதிகளுக்குப் பக்க எண்கள் தொடர்ச்சியாகத் தந்துள்ளார் (1-862 பக்கங்கள்). மூன்றாம் தொகுதிக்குத் தனிப்பக்க எண்கள் (1-666 பக்கங்கள்), தருகின்றார், நூற்பா எண்கள், 1-665 எனத் தொடர்ச்சியாக அமைந்துள்ளன.

## பவானந்தர் கழகம்

தொல்காப்பியம்—சொல்லதிகாரம்-நச்சினார்க்கினியம்; 1941; (பதி) மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பக். xx + 568 = 578.

பவானந்தர் கழகப் பதிப்பாக 1941இல் மே. வீ. வேணு கோபாலப்பிள்ளை பதிப்பாசிரியராகத் தொல்—சொல்-நச்சினார்க் கினியம் வெளிவந்துள்ளது; சுவடிகள் பார்த்துப் பதிப்பித்துள்ளார்; நூற்பா, உரைப்பாட வேறுபாடுகளை அடிக்குறிப்பில் தந்துள்ளார்; இலக்கியக் காட்டுகள் அனைத்திற்கும், இலக்கியமும் இடமும் தெளிவாக அடிக்குறிப்பில் சுட்டியுள்ளார்; நூற்பா நுவலும் பொருளை நூற்பாவின் மேல் தந்துள்ளார். நூற்பா 14 புள்ளி பெரிய எழுத்திலும் உரை 12 புள்ளி எழுத்திலும் அடிக்குறிப்புகள் 10புள்ளி எழுத்திலும் நன்கு தெளிவாக அச்சிடப்பெற்றுள்ளன. நூற்பா எண்கள் இடப்பக்கத்தில் ஆங்கில அரபிய எண்களும், வலப்பக்கத்தில் இயல் நூற்பா எண்கள் தமிழிலும் தரப்பெற் றுள்ளன.

முற்பகுதியில், உரிமையுரை, பதிப்புரை, பவானந்தம் பிள்ளை வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம், இப்பதிப்பில் எடுத்தாண்ட நூல் களின் முதற்குறிப்பகராதி, பிழைதிருத்தம் ஆகியன உள்ளன.

பின்பகுதியில் சூத்திர முதற் குறிப்பகராதி, அரும்பத முதலிய வற்றின் அகராதி, விஷய அகராதி, மேற்கோள் அகராதி முதலியவை உள. கடுமையான உழைப்பு இவ்வகராதிகளை நோக்கும்போது தெரிகிறது. சுவடிவேறுபாடு சுட்டும் நூற்பா எண்கள்— 1, 7, 24, 73, 83, 91, 153, 175, 225, 274, 298, 315, 337, 365, 368, 428.

விளக்கம் தேவைப்படும்போது பலர் உரையையும் இணைத்துக் கொடுத்துள்ளார் (நூற்பா—127-க்கு உரை பக்-135).

பொருளியல் நூற்பாவை எடுத்தாளும் போதும் பாடவேறுபாடு குறித்துள்ளார் (பக்-161).

சான்றிலக்கியப் பாடல்களின் பாடவேறுபாடு கொடுத் துள்ளார்.

இடையியல்—இடைச்சொல்லியல்—பி. ம்.

உரியியல் —உரிச்சொல்லியல் — பி. ம்.

நல்ல தெளிவான செம்மையான பதிப்பு.

## ரா. ராகவையங்கார்

**தொல்காப்பியம் – பொருளதிகாரம் (செய்யுளியல்)—நச்சினார்க்கினியம்; 1917; மதுரைத் தமிழ்ச்சங்கம்; மதுரை,** பக். 4+3+உ௫0 = 257

தொல்காப்பியம் – பொருளதிகாரம்—செய்யுளியல் - நச்சினார்க்கினியர் உரை—முதன் முதலில் வெளிக்கொணர்ந்தவர், ரா. ராகவையங்கார். 1917இல் மதுரைத்தமிழ்ச் சங்கத்து 10ஆவது பிரசுரமாக இது வெளிவந்துள்ளது.

இப்பதிப்புக்கு ஆழ்வார்திருநகரி—கவிராஜ கேசரி திருமேனி இரத்தின கவிராயர் வழித்தோன்றிய தாய வலந் தீர்த்தான் கவிராயர் வீட்டில் இரண்டு ஏட்டுப் படிகளும், திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளை யிடமிருந்த தொல்காப்பியப் படியில் செய்யுளியலுக்கு நச்சினார்க்கினியர் உரைப்பகுதியும் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இதோடு ஆழ்வார் திருநகரி—தேவர்பிரான்கவிராயர் உதவிய செய்யுளியல் உரையாசிரியர் உரைப்படியும் இப்பதிப்பிற்குப் பயன்பட்டுள்ளது. அதனால் முகப்புப்பக்கத்தில் "செய்யுளியல்—நச்சினார்க்கினியருரை உரையாசிரியர் உரையுடன்" என்ற குறிப்புக்காணப்படுகிறது.

1917 வரை செய்யுளியலுக்கு நச்சர் உரையோ பொருளதிகாரத்திற்கு இளம்பூரணர் உரையோ அச்சில் வரவில்லை. பேராசிரியர் உரை மட்டும் செய்யுளியலுக்கு வந்துள்ளது. அதனால் இப்பதிப்பில் நச்சர் உரையை முதன்மை நிலையாகக்கொண்டு அடிக்குறிப்பாகச் சில இடங்களில் உரையாசிரியர் உரையையும் கொடுத்துள்ளார்; அடிக்குறிப்பில் பேராசிரியர் உரையை ஒப்புமைக்காக எடுத்தாளுகிறார்; கிடைத்த சுவடிகளில் நச்சர் உரை இல்லாத பகுதிகளுக்குப் பேராசிரியர் உரையையோ, இளம்பூரணர் உரையையோ தருகின்றார்; 91-ஆம் நூற்பாவிற்கு (பக்-79) உரை தரும்போது "இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியருரை பிரதிகளிற் காணப்படவில்லை; பேராசிரியருரையே ஈண்டு பதிப்பிக்கப் பட்டது" என எழுதுகின்றார்; 180-ஆம் நூற்பாவிற்கு உரையெழுதும்போது (பக்-212) 'இது முதலிய ஐந்து சூத்திரங்கட்கு நச்சினார்க்கினியருரை கிடைத்த ஏடுகளில்லை" என எழுதுகின்றார்; அதற்குப் பதில் உரையாசிரியர் உரையைத் தருகின்றார்; இதே போன்று 155-ஆம் நூற்பாவிற்கு உரையெழுதும்போது. "இதற்கு உரையாசிரியருரை யேட்டிலில்லை" என எழுதுகின்றார்.

இவ்வாறு மிகநுணுகி நோக்கி நன்முறையில் பதிப்பித்துள்ளார். அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் தந்துள்ளார். பொதுநிலையில் தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்திற்குத்தான் பாடவேறு பாடுகள் அதிகம். அதிலும் செய்யுளியலுக்குப் பாடவேறுபாடுகள் மிகுதி. இதிலிருந்து செய்யுளியல் மிகுதியான பயற்சியிலிருந்தது என்பது தெரிகிறது. காரணம் அக்காலத்து இலக்கிய வெளியீட் டிற்குச் செய்யுள் வடிவமே மிகுதியாகப் பயிலப்பட்டு வந்தது என்று தோன்றுகிறது.

அடிக்குறிப்பில் மேற்கோள் விளக்கப் பாடல்களுக்குத் தேவை யான இடங்களில் விளக்கந்தந்துள்ளார். உரைப் பாடவேறுபாடு களையும் கொடுத்துள்ளார். இந்நிலையில் அடிக்குறிப்புகள் மிகப் பயனுடையவையாக அமைந்துள்ளன. நூற்பா முதற்குறிப்பகராதி முதலிலும் பிழைதிருத்தம் பின்பகுதியிலும் தந்துள்ளார். தொடக்க காலப்பதிப்புகளில் நூற்பா முதற் குறிப்பகராதி நூலுக்கு முன்பகுதி யில் தருவது மரபாக இருந்தது.

## கா. நமச்சிவாய முதலியார்

1. **தொல்காப்பியம்—பொருள் (அகத்திணையியல், புறத்திணை யியல்)—இளம்பூரணம்:** 1920; **காக்ஸ்டன் பிரஸ்; சென்னை; பக்.** 228.

2. **தொல்காப்பியம்—எழுத்து; சொல் –(மூலம்); மார்ச்** 1922; **காக்ஸ்டன்பிரஸ்; சென்னை; பக்.** vii+147=154.

3. **தொல்காப்பியம்—பொருள்—(மூலம்);நவம்பர்** 1924; **காக்ஸ்டன் பிரஸ்; சென்னை; பக்.** vi+127=133.

இவரின் தொல்காப்பியப் பதிப்புப் பணி நாம் நினைத்தற் குரியது. 1922, மார்ச் மாதம் தொல்—எழுத்து—சொல் இரண்டை யும் இணைத்து மூலம் மட்டும் பலபடிகளை ஒப்பு நோக்கி வெளி யிட்டுள்ளார். இதற்கு முன்பே 1920இல் தொல்—பொருள்—அகத் திணையியல், புறத்திணையியல் இளம்பூரணர் உரையுடன் வெளி யிட்டுள்ளார். தொல்—பொருள்—இளம்பூரணம் அச்சில் வருவது இதுதான் முதன் முறை. நவம்பர் 1924இல் தொல்—பொருள்— மூலம் மட்டும் வெளியிட்டுள்ளார். எழுத்துக்கும் சொல்லுக்கும் நூற்பா எண்ணிக்கை தனியாகவும் (948) பொருளுக்கு நூற்பா எண்ணிக்கை தனியாகவும் (652) தந்துள்ளார். இவர் கணக்கின்படி 1600 நூற்பாக்கள் உள்ளன.

முன்னுரை, பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம், நூல், இயல், நூற்பா எண்ணிக்கை பாடல்கள், நூற்பா முதற்குறிப்பு ஆகிய வற்றை எழுத்ததிகாரத்துக்கும், சொல்லதிகாரத்துக்கும் பொருளதி காரத்துக்கும் தனித்தனியாகத் தந்துள்ளார். இதற்கு முன்பு அச்சுப் பதிப்புகள் வந்துள்ளமையால் அவற்றையும் பார்த்திருக்கலாம். நூற்பா நுவலும் பொருளை நூற்பாவின் மேற் பகுதியில் சிறு எழுத்தில் தந்துள்ளார். நூற்பா பெரிய எழுத்தில் உள்ளது. அடிக் குறிப்பில் பாடவேறுபாடுகள் தந்துள்ளார். பாடவேறுபாடுள்ள நூற்பா எண்கள்— 48, 84, 88, 102, 515, 516, 529, 531, 556, 560, 566, 567, 719, 720, 757, 767, 781.

தொல்-பொருளுக்குத் தனிஎண்கள்— 4, 9, 14, 16, 17, 20, 22, 24, 25, 29, 34, 42, 43, 44, 47, 51, 56, 63, 66, 68, 69, 72, 77, 88, 92, 97, 98, 101, 105, 112, 121, 125, 128, 131, 144. 145, 148, 149, 167, 169, 174, 175, 193, 194, 199, 214, 222, 226, 229, 230, 235, 240, 241, 254, 257, 263, 269, 271, 293, 323, 330, 333, 340, 346, 349, 358, 379, 386, 388, 391, 392, 402, 404, 408, 415, 417, 420, 426, 431, 432, 438, 439, 441, 442, 450, 457, 462, 463, 465, 469, 470, 476, 477, 483, 487, 489, 490, 492, 497, 500, 501, 504, 505, 506, 508, 509, 512, 513, 515, 518, 524, 526, 537, 540, 541, 543, 545, 547, 557, 605, 614.

ஏறத்தாழ 139 பாடவேறுபாடுகள் குறித்துள்ளார். சுவை, ஓசை, போன்றவை கருதிப் புதிய பாடங்கள் தோன்றியிருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. (இப்பதிப்பு ம. தி. தா. இந்துக் கல்லூரி, பேட்டையிலிருந்து கிடைத்தது. வேங்கடராசுலு ரெட்டியார் தம் நூல்களை இக்கல்லூரிக்குக் கொடுத்துள்ளார். அவர் பயன் கொண்ட புத்தகம். குறிப்புகள். தெலுங்கு வடிவ எழுத்துகள் பல இடங்களில் காணப்படுகின்றன).

1920இல் முதன் முதலாக தொல்-பொருள்-அகத்திணையியல், புறத்திணையியல் — இளம்பூரணர் உரையை, கா. நமச்சிவாய முதலியார் வெளியிட்டுள்ளார். பல சுவடிகளை நோக்கி வெளியிட் டுள்ளார் என்பது நூலிலிருந்து தெரிகிறது. பதிப்புரை, சூத்திர முதற்குறிப்பு, நூல்மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பு, மேற்கோள் நூல் முதற்குறிப்பு, பிழைதிருத்தம் இவை முறையே அமைந் துள்ளன. முதற்பதிப்பு என்ற நிலையில் பாராட்டத் தக்க ஒன்று. அடிக்குறிப்பில் நூற்பாவில் காணப்பெறும் பாடவேறுபாடுகள், உரையில் காணப்படும் பாடவேறுபாடு, இறையனார் களவியல்

ஒப்பு நூற்பா எண்கள், விளக்கம் இவை போன்றன தரப்பெற்றுள்ளன. நூற்பாவில் காணப்படும் பாடவேறுபாட்டிற்கு ஏற்ப உரையில் பாடமுள்ளதா என்பதையும் நுணுகி நோக்கித் தந்துள்ளமை பாராட்டற்குரியது. (இந்நூலின் மிகவும் பழையபடி திருவனந்தபுரம் பல்கலைக்கழகக் கல்லூரி - நூல்நிலையத்தினின்று கிடைத்தது.)

**4. தொல்காப்பியம்—சொல்—இளம்பூரணம்**; 1927; **காக்ஸ்டன் பிரஸ்; சென்னை**; பக். iv + 24 + vii + 261 + 45 + 2 = 343

தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—இளம்பூரணருரை -முதன் முதலாக அச்சிற்கொணர்ந்தவர் கா. நமச்சிவாய முதலியார் தொல்காப்பியப் பதிப்பில் மிகுந்த ஈடுபாட்டுடன் இருந்தவர்களுள் இவரும் ஒருவர். 1927இல் இதைப் பதிப்பித்தார். 1920இல் இளம்பூரணம் அகம்புறம் பதிப்பித்து; 1922இல் எழுத்து சொல்—மூலம் பதிப்பித்து, 1924இல் பொருள் மூலத்தைப் பதிப்பித்துப் பின்பு சொல்லதிகாரம் - இளம்பூரணம் பதிப்பித்தார். பொருள், அகம் புறமும், சொல்லும் இளம்பூரணப் பதிப்புகளுள் இவர் பதிப்பே முதல் பதிப்புகள்.

ஏற்கனவே சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையம் 1868இல் இருபதிப்புகளும், 1923இல் கழகப்பதிப்பும் வந்துள்ளன. சொல்லுக்கு நச்சினார்க்கினியம் 1892இல் சி. வை. தா.வால் வெளியிடப் பெற்றது. அதனால் நமச்சிவாய முதலியார் பதிப்பில் முதலில் இளம்பூரண அடிகள் உரைத்திறம் எழுதி, அடுத்துச் சேனாவரையர் உரையாசிரியரை மேற்கொண்டும் மறுத்தும் கூறும் இடங்கள் என 21 பக்கங்கள் எழுதுகிறார். அடுத்து நச்சினார்க்கினியர் உரையாசிரியரை மேற்கொண்டும் மறுத்தும் கூறுமிடங்கள் என 3 பக்கங்கள் தந்துள்ளார், இதிலிருந்து சேனாவரையர்தாம் உரையாசிரியரை மிகுதியாக மறுத்துள்ளார் என்பது தெளிவாகிறது.

வழக்கம்போல் பதிப்புக்கூறுகள் அனைத்தும் இப்பதிப்பில் உள்ளன. முன்னுரை, உரையாசிரியர்-சேனாவரையர் நச்சினார்க்கினியர் இணைப்புகள், சூத்திரமுதற்குறிப்பு இவை முன்பகுதியில் அமைந்துள்ளன, நூல்: சூத்திரம் நுதலிய பொருள், உரையிற் காணும் அரும்பொருள், வரலாற்றுக் கட்டுரைச் சொற்றொடர், வரலாற்றுச் செய்யுள் மேற்கோள், பிழைதிருத்தம் அவை பின் பகுதியில் உள்ளன. 1920களில் இதுபோன்ற விளக்கமான முதல் பதிப்பு வந்ததில்லை, எல்லா சி.வை.தா. முதல் பதிப்புகளில்

பதிப்புரை, நூல், சூத்திரமுதற்குறிப்பகாதி இம்மூன்றுமே பெரும் பாலும் இடம்பெறும். இதுபோன்று ஏனை உரையாசிரியரோடு ஒப்பிட்டு நோக்கல், பின் பகுதிச் சேர்க்கைகள் இவரிடம் மட்டுமே முதற் பதிப்பில் காணப் பெறுகின்றன.

அடிக்குறிப்புகளில் நூற்பாப் பாடவேறுபாடுகள், உரைப் பாடவேறுபாடுகள், மேற்கோள்கள், விளக்கங்கள் போன்றவற்றைத் தந்துள்ளார். மூலத்திற்குத்தக உரையிலும் பாடவேறுபாடுகள் அமைந்திருக்க வேண்டும். அதையும் நுணுகி நோக்கித்தந்துள்ளார். நூற்பா 222இன் உரையில் (பக்-141-இல்) ''இப்பகுதிகள் சில ஏடு களில் காணப்படவில்லை'' என எழுதுகின்றார். இதிலிருந்து பல ஏடுகளைப் பார்த்துள்ளார் என்பது புலப்படுகிறது. தொல்— மூலத்தை ஏற்கனவே தெளிவான பாடவேறுபாடுகளுடன் வெளி யிட்டு விட்டதால் இவ்வுரைப்பதிப்புகளில் எல்லாப் பாடவேறு பாடுகளையும் குறிக்கவில்லை.

உரைப்பதிப்புகளை வெளியிடும்போது, மூலப் பதிப்பில் நூற்பா நுவல்பொருளைத் தருவது போன்று தருவதில்லை. மூலப் பதிப்பாக இருப்பதால் நூற்பா நுவல் பொருள் தேவைப்படு கின்றது. உரைப்பதிப்பாக இருந்தால் உரையைப் படித்துத் தெளி வாகப் புரிந்து கொள்ள முடியுமே என நினைத்தனர் போலும்.

இப்பதிப்பில் இளம்பூரணர் இரண்டிடங்களில் விளக்கத்திற் காகப் புறச்சூத்திரம் என எடுத்தாளுகின்றார். அவை பரிமாணச் சூத்திரம் எனவும் பாடவேறுபாடு பெறுகின்றன.

> 'அடைசினை முதலென முறை மூன்று மயங்காமை
> நடைபெற்றியலும் வண்ணச் சினைச்சொல்'-(2-1-26)

இதை விளக்கும்போது உரையில்,

> 'முதலொடு குணமிரண்டடுக்குதல் வழக்கியல்
> சினையொ டடுக்கல் செய்யுளாறே'

என்பது புறச்சூத்திரம் எனக் குறிக்கின்றார் (பக்-21).

> 'இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென்
> றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே'-(2-9-1)

என்ற நூற்பாவில் திரிசொல்லை விளக்கும்போது

> ''சேரிச்சொல்லின் முட்டுற லஞ்சிச்
> செய்யுட்குப் புலவர் செய்து கொண் டன்றே''

என்பது புறச்சூத்திரம் எனக் குறிக்கின்றார். விளக்கத்திற்காகத் தரும் இந்நூற்பாக்களைப் பிற்காலத்தில் இதைப் பற்றிய தெளிவான கருத்தில்லாதவர் இடைச் செருகல்கள் என அமைத்து தொல்-நூற்பாக்கள் ஆக்கியிருக்கலாமோ என்ற எண்ணமும் தோன்றுகிறது.

இப்பதிப்பு திருவனந்தபுரம் பல்கலைக் கழகக் கல்லூரி-தமிழ்த் துறை நூலகத்தில் கிடைத்தது.

## வ.உ. சிதம்பரம் பிள்ளை

### 1) தொல்காப்பியம்—பொருள் (அகத்திணையியல், புறத்திணையியல்) இளம்பூரணம்,1921

இவர் 1921-இல் பொருள்-அகத்திணையியல், புறத்திணையியல் இரண்டிற்கும் இளம்பூரணர் உரையை வெளியிட்டுள்ளார். இப்பதிப்பிற்குப் பதிப்புரை இல்லை எனத் தோன்றுகிறது.

அடிக்குறிப்பு இல்லை. நூல் மட்டுமே உள்ளது. முன் பகுதியோ, பின் பகுதியோ எதுவும் இல்லை.

ஆயின் முதல் பகுதி க-௱௩௬-136 பக்கங்கள் உள்ளன.

இரண்டாம் பகுதி 137-ஆம் பக்கத்தில் தொடங்குகிறது.

அதனால் பிற்பகுதி இல்லை என்பது தெளிவு. நூல் முழுவதும் முடிந்த பின்பு, 1935-இல் சூத்திர முதற்குறிப்பகராதியை முன் பகுதியில் வைத்துள்ளார்.

### 2. தொல்காப்பியம்—எழுத்து—இளம்பூரணம்; 1928; வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ்; தூத்துக்குடி; பக். 2+௬+௱௬௰=168.

1928-இல் வ. உ. சி தொல்—எழுத்து—இளம்பூரணத்தை வெளியிட்டுள்ளார். பதிப்புரை, தொல்காப்பிய எழுத்ததிகாரச் சூத்திர அகராதி, இயலகராதி, நூல் என இந்நிலையில் இப்பதிப்பு அமைந்துள்ளது. பின்னிணைப்புகள் இல்லை. அடிக்குறிப்புகள் இல்லை. 1868-இல் வந்த தொல்—எழுத்து இளம்பூரணத்தையும், இன்னும் சில ஏட்டுப் பிரதிகளை ஒப்பிட்டுப் பார்த்தும் திருத்தி வெளியிட்டுள்ளதாகப் பதிப்புரையில் குறிப்பிடுகிறார். ‘பாடவேறுபாடும், உரைவேறுபாடும் சேர்த்துள்ளேன்’ என எழுதுகிறார். தனியாகக் குறிப்பிடாமல் மூலத்திலேயே சேர்த்திருப்பார் எனத் தெரிகிறது.

**3. தொல்காப்பியம்—பொருள் (களவியல், கற்பியல், பொருளியல்). இளம்பூரணம் 1933; வாவிள்ள இராமஸ்வாமி சாஸ்திருலு அண்ட் சன்ஸ்; சென்னை; பக். 174**

வ. உ. சிதம்பரம்பிள்ளை 1933-இல் தொல்—பொருள்—இளம் பூரணம்—களவியல், கற்பியல், பொருளியல் என்ற மூன்றியல் களையும், 1935-இல் மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல். மரபியல் இவற்றையும் வெளியிட்டுள்ளார்.

1933-இல் வெளியிட்டுள்ள பகுதிகளுக்கு, த. மு. சொர்ணம் பிள்ளை கடிதப் பிரதியும், தி. நா. சுப்பிரமணிய ஐயரிடமிருந்து கிடைத்த கடிதப் பிரதியும், எஸ். வையாபுரிப்பிள்ளை 1912-இல் தி. த. கனகசுந்தரம்பிள்ளை ஏட்டுப் பிரதியைப் பார்த்து எழுதிய கைப்பிரதியும் பயன்பட்டன என எழுதுகிறார்; சொர்ணம்பிள்ளை பிரதியில் மிகுதியான பிழைகளும் இடைச்செருகல்களும் இருந்தன எனக்குறிப்பிடுகிறார்; மூன்றாம் கைப்பிரதிதான் உள்ளதில் நல்ல பிரதி எனக் குறிப்பிட்டுள்ளார்.

அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள் சிலவும், உரை வேறுபாடுகள், மேற்கோள் பாடல்களில் காணப்பெறும் பாடவேறு பாடுகள், தேவையான இடங்களில் சிறு விளக்கங்கள் போன்ற வற்றைத் தந்துள்ளார். பக்க எண்கள் நூற்பா எண்கள் தமிழ் வடிவில் தரப்பெற்றுள்ளன.

நூ. பா. வே—112, 129, 144, 151, 165, 193, 194, 207,

**4. தொல்காப்பியம்—பொருளதிகாரம் (இறுதி நான்கு இயல்கள்) இளம்பூரணம்; 1935; வாவிள்ள இராமஸ்வாமி சாஸ்திருலு அண்ட் சன்ஸ்; சென்னை; பக். 215**

1935-இல் வெளியிட்டுள்ள தொல்—பொருள்—இறுதி நான்கு இயல்களின் பதிப்புரையில் வ. உ. சி. 1910-ஆம் வருடம் தொல் காப்பியத்தைப் படிக்கும் பாக்கியம் தமக்குக் கிடைத்ததாகவும், தாமே உரையெழுதி வெளியிட முயன்றபோதுதான் இளம்பூரணர் உரை கிடைத்ததாகவும், அதுவே மிக எளிமையாக இருந்ததால் தாம் உரை எழுதி வெளியிடுவதை நிறுத்திவிட்டு இளம்பூரணர் உரையைப் பதிப்பிக்க முயன்றதாகவும் கூறுகிறார். அகத்திணை யியல், புறத்திணையியல் தவிர "இவ்வேழு இயல்களுக்கும் பெயரளவில் பதிப்பாசிரியன் யான்; உண்மைப் பதிப்பாசிரியர் திரு. வையாபுரிப்பிள்ளையவர்களே. அவர்கள் செய்த நன்றி என்னால் என்றும் உன்னற்பாலது" என எழுதுகிறார்.

"தமிழ்நாடு முழுவதிலும் பொருளதிகார இளம்பூரணருரை முற்றுமடங்கிய பிரதி ஒன்றேயுள்ளது. இப்போது அங்கங்கே ஒரு சிலரிடத்துள்ள பிரதிகளனைத்தும் இவ்வேட்டுப் பிரதியைப் பார்த்தெழுதிக்கொண்ட கடிதப்பிரதிகளேயாகும். இக்கடிதப்பிரதிகள் சிலவற்றில் ஒரு சிலவிடங்களில் ஏட்டுப் பிரதியிற் காணப்பெறாத விஷயங்கள் ஆதாரமின்றி நுழைத்தெழுதப்பட்டன. அவ்வாறு நுழைத்தெழுதியவற்றையெல்லாம் களைந்து ஏட்டுப்பிரதியிலுள்ள வாறே இப்பதிப்பு எனது நண்பர் வையாபுரிப்பிள்ளையவர்களாற் சித்தஞ் செய்யப்பெற்றுள்ளது"—எனவும் குறிப்பிடுகிறார்.

அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகளும் மேற்கோள் இலக்கியப்பாடவேறுபாடுகளும், சில தேவையான குறிப்புகளும் தந்துள்ளார்.

நூ. பா. வே. 256, 257, 270, 328, 332, 334, 335, 347, 357, 358, 361, 362, 366, 367, 368, 372, 378, 381, 384, 387, 390, 391, 395, 406, 410, 416, 417, 419, 437, 438, 440, 442, 459, 460, 467, 468, 469, 471, 480, 486, 487, 488, 491, 498, 499, 500, 501, 502, 509, 510, 512, 520, 523, 528, 532, 534, 535, 536, 539, 540, 541, 545, 546, 553, 557, 561, 562, 564, 576, 601, 603, 620, 625, 626, 634, 635, 640, 645, 654, 655.

சூத்திர முதற்குறிப்பகராதி முன்பகுதியில் உள்ளது. மேற்கோள் அகராதி (என்னென்ன பாடல்கள் எவ்வெவ்விலக்கியத்திலுள்ளன) என்பதுடன் பாடபேதம் ஒரு பக்கத்தில் தரப்பெற்றுள்ளது. இவை அடிக்குறிப்பில் இல்லாத உரைப்பாடபேதங்கள். பிழைதிருத்தம், இரண்டுபக்கங்கள். அநுபந்தம் (5 பக்கங்கள்), சிலவிடுபாடுகள் பிறழ்ந்துள்ள பகுதிகள் ஆகியன தரப்பெற்றுள்ளன.

பொதுநிலையில் பொருள் — அகத்திணையியல், புறத்திணையியல் 1921-இல் வெளியிடப்பெற்றாலும் பக்கங்களும் நூற்பா எண்களும் தொடர்ச்சியாகத் தரப்பெற்றுள்ளன.

௩௱௰௪—௪௱௮௮ + 40 = 215 பக்கங்கள்

1921-இல்—பொருள்—அகத்திணையியல் புறத்திணையியல்;

1933-இல்— ,, —களவியல், கற்பியல், பொருளியல்;

1935-இல்— ,, —மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல்.

1935-இல் வெளியிட்டபோது பொருளதிகாரம் ஒன்பது இயல்களும்—பதிப்பாசிரியர்—வ. உ. சிதம்பரம்பிள்ளை-எஸ். வையாபுரிப் பிள்ளை—என்றே உள்ளது.

வ. உ. சி. தம் விடா முயற்சியால் 1910-இல் தொல்காப்பியத்தைப் படிக்கத் தொடங்கி, 1921-இல் பொருள்—அகத்திணையியல், புறத்திணையியலை வெளியிட்டு, 1928-இல் எழுத்தை வெளியிட்டு, 1933-இல் பொருள்—களவு, கற்பு, பொருள் இயல்களை வெளிப்படுத்தி, 1935-இல் பொருள் இறுதி நான்கு இயல்களையும் வெளியிட்டுள்ளார். இவற்றை எண்ணிப்பார்க்கும் போது ஏறத்தாழ 1910 முதல் 1935 வரை இருபத்தைந்து ஆண்டுகள் தொல்காப்பியம் பற்றி நினைத்துக் கொண்டிருந்தார் என்பது தெளிவாகிறது. இளம்பூரணர் உரைதவிர ஏனைய உரைகளை வெளியிட வேண்டுமென்ற உணர்வு அவருக்கு இருந்ததாகத் தெரியவில்லை.

## சிதம்பர புன்னைவனநாத முதலியார்

**தொல்காப்பிய மூலம்**; 1922; **பி. நா. சிதம்பர முதலியார் அண்ட் கோ**; **சென்னை**; xxxx+306+32=378.

தொல்காப்பிய மூலத்தை மட்டும் முதன்முதலாக 1922-இல் பதிப்பித்தவர் திரு. பி. சிதம்பர புன்னைவனநாத முதலியார். இவர் பல சுவடிகளை ஒத்து நோக்கி, ஏற்கனவே இதற்கு முன்பு வந்துள்ள அச்சுப் பதிப்புகளையும் நோக்கித் தெளிவாகப் பதிப்பித்துள்ளார்.

தொல்காப்பிய நூற்பா எண்ணிக்கை 1595 முதல் 1611 வரை அமையும். அவற்றை 1610 என அறுதியிட்டுப் பெரும்பான்மையும் நச்சினார்க்கினியர் பாடத்தை ஏற்றுக்கொண்டு மூலத்தைக் கொடுத்துள்ளார். ஆங்கிலத்தில், மதுரைத் தமிழ்ச் சங்கச் செயலர் சீனிவாசஐயங்கார் முகவுரையும், நாராயணையங்கார் சிறப்புரையும், சுந்தரபாண்டி ஓதுவார் சிறப்புப் பாயிரமும் பெற்றுள்ளது. 22 பக்கத்தில் பதிப்புரை தந்துள்ளார். ஆசிரியர் தொல்காப்பியனார் வரலாறு, காப்புச் செய்யுள்கள் (பெரும்பாலும் சுவடியில் உள்ளவை), சிறப்புப்பாயிரம், பொதுப்பாயிரம், எழுத்ததிகாரச் சூத்திரத்தொகை வகை—வெண்பாக்கள், நூல், சூத்திர முதற் குறிப்பகராதி இவ்வாறு பதிப்பு அமைந்துள்ளது.

நூற்பா நுவல்பொருளை நூற்பாவின் மேல் பகுதியில் தந்துள்ளார்.

அடிக்குறிப்பில் கீழ்க்கண்ட நூற்பாக்களுக்குப் பாடவேறு பாடுகள் குறித்துள்ளார். நூற்பா எண்கள்—408; 484, 507, 537 549, 580, 591, 599. 657, 756, 765, 784, 787, 795, 797, 804, 850, 863, 868, 872, 905, 909, 910, 922, 953, 1263, 1267, 1269, 1271, 1278, 1288, 1294, 1307, 1330, 1339, 1343, 1355, 1361, 1366, 1368, 1371, 1382, 1383, 1389, 1391, 1394, 1403, 1416, 1417, 1419, 1431, 1444, 1445, 1448, 1452, 1456, 1457, 1459, 1460, 1461, 1463, 1464, 1465, 1466, 1467, 1468, 1479, 1481, 1492, 1498, 1500.

ஏறத்தாழ 71 பாடவேறுபாடுகளில் செய்யுளியலில்தான் மிகுதியான பாடவேறுபாடுகள் உள்ளன.

சொல், பொருள் இவற்றிற்கும் சூத்திரத் தொகை வகைப் பாடல்கள் தந்துள்ளார்.

இப்பதிப்பு டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகத்திலிருந்து கிடைத்தது.

## திருநெல்வேலி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

1. **தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்**; 1923; (பதி) தி. த. கனகசுந்தரம்பிள்ளை; பக். XLVII+கஅச+8=439

முதன் முதலில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் உருத்ரோத்காரி ஆண்டு (1923) சித்திரை மீ 20ம் தேதி (மே 5ம் தேதி) தொல்—எழுத்து—நச்சினார்க்கினியத்தை வெளியிட்டுள்ளனர். பதிப்புரையில் "முன் வெளிவந்த பதிப்பில் விடுபட்டவற்றையும் மேற்கோள் விளக்கத்தையும் எமக்கு எழுதித் தந்துதவிய காலஞ்சென்ற திருவாளர் நி. த. கனகசுந்தரம்பிள்ளை B. A. அவர்கட்கு மிகக் கடமைப்பட்டுள்ளோம்" என்ற குறிப்புள்ளது. அதனால் இப்பதிப்பிற்குத் துணை புரிந்தவர் கனகசுந்தரம்பிள்ளை என்பது தெளிவு. 1891-இல் சி. வை. தா. வெளியிட்ட எழுத்து—நச்சினார்க்கினியத்தைப் பெரும்பாலும் பின்பற்றியுள்ளனர். முதற் பதிப்பில் (1848) 'அளபு' என்ற மாத்திரையைக் குறிக்கும் சொல் 1891-இலிருந்து சில இடங்களில் 'அளவு' ஆகிறது- நூற்பாக்கள் 11, 13, 103; 1923—கழகப்பதிப்பும் பின்பு 1937-இல் வந்த கணேசையர் பதிப்பும் இதையே பின்பற்றுகின்றன. எச்சுவடியிலிருந்து இவ்வடிவமாற்றம் கிடைத்தது என்பது விளக்கப்படவில்லை. அதேபோன்று 140, 160, 470-ஆம் நூற்பாக்களிலுள்ள 'உருபு' என்ற சொல் 'உருவு' என்ற வடிவைக் கொள்கின்றது. இதுவே பிற்பதிப்புகளிலும் பின்பற்றப்படுகின்றது.

இப்பதிப்பிற்குக் கா. சுப்பிரமணியபிள்ளை 15 பக்கங்களில் ஆங்கில முன்னுரையும் 23 பக்கங்களில் தமிழ் முகவுரையும் எழுதியுள்ளார். இப்பதிப்புச் செம்மையாக அமைந்துள்ளது; 14 புள்ளி எழுத்துகளில் நூற்பாக்களும், 10 புள்ளி எழுத்துகளில் உரை விளக்கங்களும் பத்தி பிரித்துத் தெளிவாக அச்சிடப்பெற்றுள்ளன. அடிக்குறிப்புகள் உள. ஒன்றிரண்டிடங்களில் பாடவேறுபாடுகள் குறிக்கப்பெற்றுள்ளன. அதுவும் முதற்பதிப்பின்படி, பாடவேறுபாடுகள் இல்லாதவை. இறுதியில் நூற்பா அகராதி, பிழை திருத்தம் உள்ளன.

இதன் மறுபதிப்பு 1933-இல் கா. சுப்பிரமணியபிள்ளையின் ஆங்கில முன்னுரை இன்றிப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இப்பதிப்பில் பிழைகள் நீக்கப்பெற்றுள்ளன. அதனால் பிழை திருத்தம் இல்லை.

**2. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்**; 1944; **(பதி) ஞா. தேவநேயப்பாவாணர்**: அ+16+உகூஅ+27=319.

1944-இல் கழகத்தினர் தொல்—எழுத்து—நச்சினார்க்கினியத்தை ஞா. தேவநேயப்பாவாணர் அடிக்குறிப்புடன் வெளியிட்டுள்ளனர். இப்பதிப்பு முற்பதிப்புகளைக் காட்டிலும் வளர்ச்சி நிலையைக் காட்டுகிறது. அடிக்குறிப்புகள் மிகுந்த பயனுடையன; சிந்திக்கத்தூண்டுவன. பாவாணர் பல விளக்கங்களைத் தெளிவாகத் தந்துள்ளார், ஆயினும் நூற்பா 62, 445 அடிக்குறிப்புகளில் தம் கருத்துகளை நிலைநாட்ட முயல்கிறார்; மயிலைநாதருரையைச் சில இடங்களில் எடுத்தாளுகிறார். நூற்பா நுவலும் பொருள் தரப்பெற்றுள்ளது. இறுதியில் நூற்பா முதற்குறிப்பகர வரிசை போக, அருஞ்சொற்பொருள் விளக்கம், 'குற்றியலுகரம் உயிரீறே' என்ற தன் கட்டுரை, 'நச்சினார்க்கினியர் இளம்பூரணரொடு மாறுபடும் இடங்கள்' இவற்றைப் பின்னிணைப்பாகத் தந்துள்ளார். பாராட்டத்தகும் பதிப்பு.

**3. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—சேனாவரையம்; மே.** 1923; **(பதி) கந்தசாமி பக்.** xii+ௗௗஅ+அ=358

தொல்—சொல்—சேனாவரையத்தைக் கழகம் உருத்ரோத்காரி ஆண்டு (1923) சித்திரை மாதம் 25-ஆம் தேதி (மே 9-ம் தேதி) வெளியிட்டுள்ளது. ஏற்கனவே சேனாவரையத்திற்கு 1868-இல் இருபதிப்புகள் வந்துள்ளன. இது மூன்றாம் பதிப்பாக அமை

கின்றது. சோழவந்தான் கந்தசாமியார் உதவியுடன் வெளியிட்டுள்ளனர். பதிப்புரையில் தி. த. கனகசுந்தரம்பிள்ளையும் உதவியதாகக் கழகத்தினர் குறித்துள்ளனர்.

கந்தசாமியார் இப்பதிப்பைப் பாண்டித்துரைச்சாமி அவர்களுக்கு உரிமையாக்கி உரிமையுரை எழுதியுள்ளார்; அவ்வுரிமையுரையில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பயின்றபோது ஏட்டுச்சுவடியை உடன் வைத்துப் பயின்றதாகக் குறிப்பிட்டுள்ளார்; பின்பு திருவாவடுதுறை யாதீன மடத்திற் கல்வி பயிலுங் காலத்தும் பிறிதொரு ஏட்டுச் சுவடியிற் கிடைத்த பாடங்களையும் திருத்தங்களையும் தந்துள்ளதாகக் குறிக்கின்றார்; வேறுபாடமென 112, 269-ஆம் நூற்பாக்களின் அடிக்குறிப்பில் குறித்துள்ளார்; உரைப் பகுதிகளிலும் சில பாடவேறுபாடுகளைத் தந்துள்ளார். "அச்சிட்ட பின்னர் இடம் விளங்கிய மேற்கோள்" என ஒருபக்கம் உள்ளது. இதிலிருந்து அச்சிடக்கொடுத்த பின்பும் விளங்காத பகுதிகளை விளங்கிக்கொள்ள வேண்டுமென்ற ஆர்வமும், விளக்கமான பகுதிகளைப் பிறர்க்கு உணர்த்த வேண்டுமென்ற எண்ணமும் பாராட்டுக்குரியதாகிறது. நூற்பா அகராதி, ஒருபக்கப் பிழைதிருத்தத்தோடு நூல் நிறைவாகிறது.

**4. தொல்காப்பிய மூலம்**; 1943; பக். 14 + சருகூ = 470

தொல்காப்பிய மூலம் மட்டும் வெளிவந்த பதிப்புகளில் மைல்கல்லாக அமைவது சைவசித்தாந்தக் கழகம் வெளியிட்டுள்ள கையடக்கத் தொல்காப்பிய மூலப்பதிப்பு. இது 1943-இல் வெளிவந்துள்ளது. தெளிவான பதிப்புரை, நூல், தொல்காப்பியச் சூத்திர முதற் குறிப்பகராதி என நூல் இயன்றுள்ளது. நூற்பா நுவல் பொருளைத் தனியெழுத்தாகவும் நூற்பாக்களை மற்றொரு வகை எழுத்திலும், அடிக்குறிப்புகள் ஒவ்வொரு பக்கத்திலும், பிறிதொருவகைச் சிறிய எழுத்திலும் வேறுபடுத்தி அச்சிட்டுள்ளது பாராட்டுதற்குரியது. அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், சொற்பொருள் விளக்கங்கள், இலக்கணக்குறிப்புகள் போன்றன இடம்பெற்றுள்ளன.

1922-இல் வெளிவந்துள்ள புன்னைவனநாத முதலியார் பதிப்பிலும் இப்பதிப்பிலும் மட்டுமே நூற்பாக்களுக்கு 1 முதல் 1610 வரை தொடர் எண்கள் தந்து தொல்காப்பிய முழுமையை உணர்த்தியுள்ளனர். பொது நிலையில் அந்தந்த அதிகாரங்களுக்கு மட்டுமே தொடர் எண்கள் பிறர் பதிப்பில் அமைந்துள்ளன.

இருபதிப்புகளிலும் அந்தந்த இயல் எண்களும் வலப்பக்கத்தில் தரப் பெற்றிருக்கின்றன.

பாடவேறுபாடுகள் குறித்துள்ள நூற்பா எண்கள்-48, 51, 54, 55, 56, 62, 65, 102, 537, 820, 969, 1022, 1061, 1092, 1115, 1216, 1244, 1258, 1299, 1491, 1497, 1516, 1531.

பக்கம் 14-இல் 54-ஆம் நூற்பாவுக்குப் பாடவேறுபாடு தரும் போது 'அகர இகரம் ஐகாரமாகும்'—என்பது நூற்பா. அகர இகரம் எகரமாகும்—என்று தருகின்றார்.

அடுத்த நூற்பா,

'அகர உகரம் ஔகார மாகும்' என்பது; அதற்கு

'அகர உகரம் ஒகர மாகும்' எனப் பாடவேறுபாடு தருகின்றார்.

அடுத்த நூற்பா,

'அகரத் திம்பர் யகரப் புள்ளியும்

ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்'—என்பது.

'அகரத் திம்பர் வகரப் புள்ளியும்

ஔவென் நெடுஞ்சினை மெய்பெறத்தோன்றும்'

என்றொரு நூற்பாவும் கொள்ப என அடிக்குறிப்பில் எழுது கின்றார்.

'அகர இகரம் எகர மாகும்'—என்பதற்கும்,

'அகர உகரம் ஒகரமாகும்'—என்பதற்கும், எந்தச் சுவடியிலும் எந்த அச்சுப்பதிப்பிலும் இன்று தெரிந்துள்ள வரையில் சான்றுகள் இல்லை. எவ்வடிப்படையைக் கொண்டு இந்நூற்பாக்களை உருவாக்கினார் என்பதும் தெரியவில்லை. ஐயர்—அய்யர் ஆகும் போது—ஔவை—அவ்வை ஆகும்போது—அதற்கும் ஒரு நூற்பா இருக்கட்டுமே எனப் புதிதாக "அகரத் திம்பர் வகரப்புள்ளியும் ஔவென் நெடுஞ்சினை மெய்பெறத்தோன்றும்" என்ற நூற்பா உருவாக்கியுள்ளார். தொல் காப்பியர் காலத்தில் அகர யகரம் ஐ என ஏற்றுக் கொண்டிருக்கலாம். ஆனால் அகர வகரம் ஔ என்பது தோன்றாமலிருந்திருக்கலாம். ஔவை—அவ்வை என ஒலிக்கும்போது ஒலியுறுப்புகள் வேறுபடுகின்றன. இதனால் இதை தொல். ஏற்றுக்கொள்ளாதிருந்திருக்கலாம்.

ஐயர்—அய்யர் என ஒலிக்கும்போது மிகுதியான ஒலியுறுப்பு வேறுபாடில்லை. அதனால் தொல் ஏற்றுக் கொண்டிருக்கலாம். இவர் புதிதாக நூற்பாக்களை உருவாக்கிப் பாடபேதங்களாகக் கூறுகிறார். இவ்வாறுதான் தொல்காப்பியத்தில் உரையாசிரியர் காலத்திற்கு முன்பே சில புதிய நூற்பாக்கள் தோன்றியிருக்க வேண்டும். அவற்றை இடைச்செருகல்கள் எனக் கூறுகின்றனர்.

அடுத்து,

'சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔ எனும் மூன்றலங் கடையே' (1-2-62)

என்பதில், இரண்டாவது வரிக்கு,

'அவை ஔவெனும் ஒன்றலங் கடையே'—என்ற பாடவேறு பாடு கூறுகிறார்—இது தேவநேயப்பாவணர் இந்நூற்பாவிற்கு விளக்கம் எழுதியபோது தோன்றிய எண்ணம்; அதையே நூற்பா வாக்கிவிட்டார் இப்பதிப்பாசிரியர். சங்க இலக்கியத்தில் 'ச' கரப் பயிற்சி மிகுதியாக வருவதால் இவ்வாறு ஒரு எண்ணம் தேவநேயப் பாவாணருக்குத் தோன்றியது. ஆயின் தொல்காப்பியர் காலத்தில் ச, சை, சௌ—மொழிக்கு முதலாக வராதிருந்திருக்கலாமே. இப்பாடவேறுபாட்டிற்குப் பதிப்புச் சான்றோ, சுவடிச் சான்றோ தரப்பெறவில்லை.

இதேபோன்று,

'ஆவோ டல்லது யகரமுதலாது என்ப.'—(1-2-65)

இதற்கும் சங்க இலக்கியப் பயிற்சியைக்கொண்டு,

'அ ஆ உ ஊ ஓ ஔ
ஆறோ டல்லது யகர முதலாது'

எனப் பாடவேறுபாட்டு நூற்பா காட்டுகிறார். இதற்கும் எந்தவிதமான சுவடிச்சான்றோ, பதிப்புச்சான்றோ பிற சான்று களோ இல்லை. இதுபோன்று பாடவேறுபாடுகளை ஏற்படுத்தி னால் இதையே பிற்காலத்தோர் தொல்காப்பிய நூற்பாவாகக் கொள்ளும் நிலை ஏற்படலாம். இதுபோன்று சான்றுகள் காட்டாத பதிப்புக் குறைபாடுகள் இப்பதிப்பில் உள்ளன. மறுபதிப்புகள்—1954, 1967.

**5. தொல்காப்பியம்—சொல்லதிகாரம் — சேனாவரையம்; 1946; (பதி) தேவநேயப்பாவாணர்; பக். 4+244=248**

1946-இல் கழகம் தொல்—சொல்—சேனாவரையத்தைத் தேவநேயப்பாவாணர் திருத்திய திருத்தங்களுடனும் குறிப்புரையுடனும் வெளியிட்டது. 1923-ஆம் ஆண்டுப் பதிப்பைப் பின்பற்றியதோடு, அடிக்குறிப்பில் பாவாணர் பல சொற்களுக்குத் தெளிவான விளக்கங்களைத் தந்துள்ளார். சூத்திரம் நுவலும் பொருள் நூற்பாவின் மேல் கொடுக்கப்பெற்றுள்ளது. முற்பதிப்பில் 'உதாரணம்' என்றிருந்ததை இப்பதிப்பில் 'எடுத்துக் காட்டு' என மாற்றியுள்ளார். அடிக்குறிப்புகள் பயனுடையனவாக அமைகின்றன. இறுதியில் வழக்கம்போல் நூற்பா முதற் குறிப்பகராதி யுள்ளது.

1923-ஆம் ஆண்டுப்பதிப்பு 358 பக்கங்கள்; 1946-ஆம் ஆண்டுப் பதிப்பில் செய்திகள் மிகுதி; சிறிய எழுத்தில் அச்சேற்றியுள்ளதால் 110 பக்கங்கள் குறைவு.

**6. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—சேனாவரையம்; (உரை) ஆ. பூவராகம்பிள்ளை, 1954; பக்** 4+254+165=423

தொல் — சொல் — சேனாவரையம்—வித்துவான், எம், ஏ.. மாணாக்கர்க்குப் பாடமாக இருந்ததால் பல பதிப்புகளும் மறு பதிப்புகளும் வந்தன. சேனாவரையத்தைத் தெளிவாக விளங்கிக் கொள்வது கடினமாக இருந்ததால் விளக்கவுரைகள் தோன்றின. இந்நிலையில் கழகமே கந்தசாமியார், தேவநேயப்பாவாணர் குறிப்புகளுடன் அண்ணாமலைப் பல்கலைக் கழக விரிவுரையாளர் ஆ. பூவராகம்பிள்ளை விளக்கவுரையுடன் வெளியிட்டது. இவ் விளக்கவுரை, நூலின் பின்பு 165 பக்கங்களில் அச்சிடப்பெற்று தனியாக இணைக்கப்பட்டுள்ளது. இவ்விளக்க உரை மிகுந்த பயனுடையது.

**7. தொல்காப்பியம்—பொருள் (அகத்திணையியல், புறத்திணையியல்); நச்சினார்க்கினியம்: மார்ச் 1947; பக்.**ix+உகூஎ+2=308

தொல்—பொருள் அகம், புறம்—நச்சினார்க்கினியத்தைக் கழகம் 1937 மார்ச்சில் வெளியிட்டது. முன்னுரை, நூல், சூத்திர முதற்குறிப்பகராதி என்ற நிலையில் பதிப்பு அமைந்துள்ளது. நூற்பா 14 புள்ளியிலும் உரை 12 புள்ளியிலும், மேற்கோள் பாடல்கள் 10 புள்ளி அச்சிலும் அமைந்துள்ளன. அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள் சிலவும், உரைப் பாடவேறுபாடுகள், மேற்கோள் பாடல்களின் பாடவேறுபாடுகளும் தரப்பெற்றுள்ளன.

1916, 1917களில் வெளிவந்துள்ள பவானந்தர் கழகப் பதிப்புகளிலுள்ள மேற்கோள் பாடல்களிலுள்ள பாடவேறுபாடுகள் இங்குப் பின்பற்றப் பெற்றுள்ளன.

(இந்நூல் பிரதி திருநெல்வேலி சிவஞான முனிவர் நூலகத்தில் உள்ளது.)

**8. தொல்காப்பியம்—பொருள் (களவு, கற்பு, பொருளியல்)—நச்சினார்க்கினியம்; செப் 1950;** பக். 4+342=346

களவு, கற்பு, பொருள், நச்சினார்க்கினியத்தைக் கழகம் செப்டம்பர் 1950-இல் வெளியிட்டுள்ளது. வழக்கம்போல் பதிப்புரை, நூல், சூத்திர முதற் குறிப்பகராதி என்ற நிலையில் நூல் அமைந்துள்ளது. அடிக்குறிப்பில் சில நூற்பாப் பாடவேறுபாடுகள், உரைப் பாடவேறுபாடுகள், மேற்கோள் பாடல்களின் பாடவேறுபாடுகள், இறையனார் களவியல் உரைப்பகுதிகள், சிறு விளக்கங்கள் போன்றன தரப்பெற்றுள்ளன.

இந்நூலும் திருநெல்வேலி சிவஞான முனிவர் நூலகத்தில் உள்ளது.

**9. தொல்காப்பியம்—பொருளதிகாரம்—பேராசிரியம்;** 1951; பக். 4+544=548

கழகம் ஆகஸ்டு 1951-இல் தொல்—பொருள்—பேராசிரியம் மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் இவற்றை வெளியிட்டது. வழக்கம்போல் நூற்பா ஒருவகை அச்சிலும், உரை பிறிதொன்றிலும், மேற்கோள் பாடல்கள் மற்றொன்றிலும் அச்சிடப்பெற்றுள்ளன. பதிப்புரை, நூல், சூத்திர முதற் குறிப்பகராதி என்ற உட்பிரிவுகளுடன் நூல் அமைந்துள்ளது. அடிக்குறிப்பில் சில நூற்பா பாடவேறுபாடுகள், உரைப் பாட வேறுபாடுகள், மேற்கோள் பாடல்களின் பாடவேறுபாடுகள், தரப் பெற்றுள்ளன. அதோடு செய்யுளியல் பகுதியில், இளம், நச்சர் உரைப்பகுதிகள் தேவையான இடங்களில் கொடுக்கப்பெற்றுள்ளன. செய்யுளியல் தொடர்பான யாப்பருங்கல விருத்தி, காக்கைப் பாடினியம், இவற்றின் செய்திகள் குறிக்கப்பெற்றுள்ளன. நூற்பா—426-க்குப் பாடவேறுபாடு தரும்போது "நவிலுதல்" என்பது முன் அச்சுப்படிப் பாடம். 'அவிதல்' என்பதே ஏட்டுப் பாடம். பிற உரையாசிரியர்கள் கொண்ட பாடமும் இதுவே. இரு பிறைக்குட்பட்ட இப்பகுதி ஏட்டுச்சுவடிகளிலில்லை" (பக்—292) என்று எழுதுவதால் இப்பதிப்பிற்குச் சில ஏடுகளையும் பார்த்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

நெல்லை சிவஞான முனிவர் நூலகத்தில் இந்நூல் உளளது. மறுபதிப்புகள் - சூன் 1959, செப்டம்பர் 1966, செப்டம்பர் 1972, செப்டம்பர் 1975.

**10. தொல்காப்பியம்—பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்)—இளம்பூரணம்**; 1952; பக். ௧ருச (154)

கழகம் அக்டோபர் 1952-இல் தொல்—பொருள்—அகத்திணையியல், புறத்திணையியல்—இளம்பூரணத்தை வெளியிட்டுள்ளது. பொருளடக்கம் மற்றும் பிழைதிருத்தங்களுடன் நூல்வந்துள்ளது. பொருளதிகாரம் முழுவதும் ஒரே தொகுதியாக வெளிவரும் எனப் பதிப்புரையில் குறிப்புள்ளது. அதன்படி 1953-இல் வெளிவந்துள்ளது.

நெல்லை, சிவஞான முனிவர் நூலகத்தில் இந்நூல் கிடைத்தது.

**11. தொல்காப்பியம்—பொருளதிகாரம்—இளம்பூரணம்**; 1953; பக். 16+௬௧அ=734

கழகம் 1953-இல் தொல்—பொருள்—இளம்பூரணத்தைப் பதிப்பித்தது. பதிப்புரையில் "இவ்வுரை வித்துவான் பாடத்துக்குரியதாக இருத்தலானும், பொருளதிகாரத்திற்கு முழுதுமுள்ள உரையாக இருத்தலானும் எமக்குக் கிடைத்த பதிப்புப்படிகளைக் கொண்டு செப்பனிட்டு வெளியிட்டுள்ளோம்" எனக் குறித்துள்ளனர். பதிப்பாசிரியராக யார் பெயரும் குறிக்கப்பெறவில்லை. 12 பக்கங்களில் கழகப் புலவர் செல்லூர்க்கிழார் செ. ரா. இராமசாமிப்பிள்ளை ஒரு முன்னுரை எழுதியுள்ளார். நூல்—நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை, மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை இவை உள்ளன. அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் தந்துள்ளனர்.

நூற்பா—11, 13, 17, 24, 29, 34, 42, 43. 51, 56, 61, 62, 63, 66, 68, 69, 72, 74, 75, 76, 77, 80, 87, 88, 91, 92, 96, 97, 98, 101, 105, 106, 112, 113, 115, 116, 121, 122, 125, 126, 128, 129, 134, 144, 145, 148, 149, 156, 159, 161, 166, 167, 168, 169, 170, 174, 175, 191, 193, 194, 199, 200, 204, 207, 214, 216, 225, 227, 229, 234, 239, 240, 243, 247, 253, 254. 255, 256, 268, 272, 278, 279, 282. 283, 292, 294, 296. 308. 310, 311, 314, 315, 319, 332, 334, 335, 339, 346, 347, 353, 357, 358, 362, 366, 367, 372, 375, 378, 381, 384, 385, 387, 390, 391, 395, 401, 407, 425, 431, 433, 438, 440, 456, 457, 460, 461, 462, 464, 468, 475, 478, 479, 480,

482, 486, 487, 491. 499, 500, 501, 503, 504, 505, 510, 514, 517, 528, 534, 536 538, 539, 540, 541, 542, 543, 544, 545, 546, 561, 576, 588, 595, 601, 606, 613, 618, 630, 645, 653, 656.

பிற உரையாசிரியர் உரைப்பகுதியையும் அடிக்குறிப்பில் கொடுத்துள்ளார்—பக். 5, 8, 9, 10, 11, 12, 13, 16, 17, 24. சான்றாகச் சிலவே தரப்பெற்றுள்ளன.

உரைப்பாட வேறுபாடுகளும் சுட்டப்பெற்றுள்ளன. உரையில் காட்டப் பெற்றுள்ள மேற்கோள் பாடல்களுக்கும் பாடவேறுபாடுகள் தந்துள்ளனர்—பக். 10, 14. 15, 21, 22, 23, 25, 28 — சில சான்றுகள்.

மறுபதிப்புகள் அனைத்தும் பக்கத்திற்குப் பக்கம் அவ்வாறே உள்ளன. மாற்றங்கள் எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. இருப்பினும் 1953-இல் வந்துள்ள பதிப்பில் முன் வந்த பதிப்புகளின் செய்திகள் தொகுத்துக் கொடுத்துள்ளமை பாராட்டத் தக்கது.

பல மறுபதிப்புகள் (Reprints) வந்துள்ளன. சூலை 1956, மே 1961, சூலை 1967, அக். 1969, செப். 1974, ஆக. 1977.

**12. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—சேனாவரையம் விளக்கவுரை; அக் 1954 ஆ. பூவராகம்பிள்ளை; பக்.** ௧௬௫ (165)

தொல்—சொல்—சேனாவரையம் விளக்கவுரை—ஆ. பூவராகம் பிள்ளை எழுதியதைத் தனியாகச் சேனாவரையர் உரையின்றிக் கழகம் அக்டோபர் 1954-இல் வெளியிட்டுள்ளது. கழக வெளியீடு 750—விலை ரூ. 3/-

பின்பு சேனாவரையருரையுடன் சேர்த்து வெளியிட்டனர் எனத் தெரிகிறது.

**13. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—நச்சினார்க்கினியம்; 1962; (ப[illegible]) கு. சுந்தரமூர்த்தி பக்.** 16 + ௩௨௩ = 339

கழகம் 1962-இல் தொல்—சொல் — நச்சினார்க்கினியத்தைக் கு. சுந்தரமூர்த்தி எழுதிய விளக்கவுரையுடன் வெளியிட்டுள்ளது. ஏற்கனவே இதற்கு முன் 1892-இலும் 1941-இலும் இருபதிப்புகள் வந்துள்ளமையால் அவற்றை நோக்கியும் ஏனைய சொல்—இளம்பூரணம்— சேனாவரையம் உரைப்பதிப்புகளை நோக்கியும் வளர்ச்சி நிலையில் இப்பதிப்பு அமைந்துள்ளது.

பதிப்புரை, நச்சினார்க்கினியர் உரைத்திறன், நூல், சூத்திர முதற் குறிப்பு அகரவரிசை, நச்சினார்க்கினியம் விளக்கவுரை என்ற நிலைகளில் பதிப்பு அமைந்துள்ளது. விளக்கவுரையில் எல்லா நூற்பா உரைகளுக்கும் விளக்கந்தராமல் தேவையான இடங்களுக்கு மட்டும் விளக்கந் தந்துள்ளார். அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறு பாடுகள், உரைப் பாடவேறுபாடுகள், மேற்கோள் இலக்கிய இடங்கள், சிறு சொல் விளக்கங்கள் போன்றவை தரப் பெற்றுள்ளன.

பாடவேறுபாட்டு நூ. எ. 1, 7, 24, 73, 91, 153, 225, 298, 315, 337, 365, 368, 428.

**14. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—இளம்பூரணம்; 1963; (பதி) கு. சுந்தரமூர்த்தி: பக். 20 + கூ௲ = 366**

1963-இல் கழகம், தொல்—சொல்—இளம்பூரணத்தைக் கு. சுந்தரமூர்த்தி அளித்த அடிக்குறிப்புகளுடனும் விளக்கவுரை யுடனும் வெளியிட்டுள்ளது. இதன் முதல் பதிப்பை 1927–இல் கா. நமச்சிவாய முதலியார் வெளியிட்டார். 36 ஆண்டுகளுக்குப் பின்பு அடுத்த பதிப்பு வந்துள்ளது.

பதிப்புரை, ஆராய்ச்சி முன்னுரை, நூல், நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை, சேனாவரையர் உரையாசிரியர் கூற்றைத் தழுவி அதனை எடுத்துக் கூறுமிடங்கள், சேனாவரையர் உரையாசிரியர் கூற்றை மறுத்துக் கூறுமிடங்கள் நச்சினார்க்கினியர் உரையாசிரியர் கூற்றைத் தழுவி அதனை எடுத்துக் கூறுமிடங்கள், நச்சினார்க் கினியர் உரையாசிரியர் கூற்றை மறுத்துக் கூறுமிடங்கள், விளக்க வுரை (தனியாக 241—346 வரை 105 பக்கங்கள்) என்பன உள்ளன. விளக்கவுரை தவிர ஏனையவை நமச்சிவாய முதலியார் பதிப்பில் உண்டு. அவற்றைச் செப்பனிட்டுள்ளார். அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், உரைப்பாடவேறுபாடுகள், பிறஉரையாசிரி யரின் எண்ணங்கள், சொல் பொருள் விளக்கங்கள் போன்ற வற்றைத் தந்துள்ளார். எது பொருந்தும் பாடம் என்பதையும் அடிக்குறிப்பில் குறித்துள்ளார்.

நூற்பா நுவலும் பொருளை நூற்பாவின் மேல் குறித் துள்ளார்.

பா. வே. நூ. எண்கள்—46, 48, 93, 110, 117, 149, 157, 160, 170, 199, 213, 217, 218, 230, 267, 309, 310, 347, 352, 356, 359, 380, 392, 398, 419, 421, 438, 445.

**15. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—தெய்வச்சிலையார்**; 1963; **(பதி) கு. சுந்தரமூர்த்தி**; 20+உகஉ+கoச=336

1963-இல் கழகம் தொல்—சொல்—தெய்வச்சிலையார் உரையைக் கு. சுந்தரமூர்த்தியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்டுள்ளது.

16 பக்க அளவில் ஓர் ஆராய்ச்சி முன்னுரை எழுதியுள்ளார். தெய்வச்சிலையார், பெயர்க் காரணத்திற்குக் கல்வெட்டுச் சான்றுகள் தந்துள்ளார். அவர் சமயம், காலம், அவர் வடமொழிப் புலமை (பக். 16), உரைச் சிறப்புகள், நூற்பாக்களைச் சுருக்கல், இடமாற்றம் செய்தல் போன்றவற்றைத் தெளிவு படுத்தியுள்ளார்.

அடிக்குறிப்பில் பிற உரையாசிரியரின் கருத்துகள் பாடவேறுபாடுகள், இலக்கிய இடங்கள் போன்றவற்றைக் குறித்துள்ளார். நூற்பாப்பாடங்களைக் கீழ்க்கண்ட நூற்பாக்களில் குறித்துள்ளார்: 7, 24, 44, 45, 46, 47, 52, 61, 69, 70, 71, 73, 75, 77, 79, 81, 85, 106, 111, 112, 117, 119, 148, 150, 154, 156, 159, 169, 170, 182, 184, 189, 207, 211, 214, 216, 217, 229, 232, 235, 240, 243, 246, 255, 267, 268, 275, 277, 278, 292, 295, 296, 300, 302, 310, 313, 314, 319, 333, 349, 354, 358, 394, 400, 404, 411, 421, 433, 437, 439, 441. உரைப்பாட வேறுபாடுகளையும் முன் பதிப்பின் வழித் தந்துள்ளார். ஒரு எழுத்து மாற்றத்தால் ஏற்படும் பொருள் வேறுபாட்டினையும் நாம் காண முடிகிறது. மதித்தற்கு, மறுத்தற்கு—பக். 13. "நன்கு மறுத்தற்குக் கூறினாரென்க" என்பது தொடர். நூலின் பின்பகுதியில் தெய்வச்சிலையார் விளக்கவுரை என உகூ௫ முதல் ௩சகூ பக்கங்கள் வரை (108 பக்கங்கள்) தனியாகத் தந்துள்ளார். இவ்வாறு ஒவ்வொரு உரையாசிரியர்க்கும் விளக்கவுரை தருதல் ஒரு பண்பாக அறுபதுகளில் தோன்றியது. இவ்விளக்கவுரையை அந்தந்த நூற்பாக்களுக்குக் கீழேயே கொடுத்திருந்தால் இன்னும் பயனாக இருந்திருக்கும். பிற்காலத்தில் இந்நிலை தோன்றியது. சிலம்பின் முதற் பதிப்பில் (1892) உ. வே. சாமிநாதையர் அரும்பதவுரையாசிரியர் உரையைத்

தனியாக நூலின் பிற்பகுதியில் ஒரேசேரத் தந்துள்ளார். பின்பு தான் அந்தந்த இடங்களில் அந்தந்தப் பக்கங்களில் தரும் நிலை ஏற்பட்டது. தொடக்க காலங்களில் சுவடிகளில் அவ்வாறு ஒட்டு மொத்தமாக ஒரே இடத்தில்தான் இருந்திருக்கவேண்டும். பின்பு பதிப்பாசிரியரால்தான் அவை அந்தந்தப் பக்கங்களில் பிரித்துத் தந்திருத்தல் வேண்டும்.

ஒவ்வொரு இயல் இறுதியிலும் உரையினது அளவு கிரந்தவகை யான் இத்தனை என்று முதற் பதிப்பில் உள்ளது இப்பதிப்பில் இல்லை. இவ்வாறு தம் நோக்கங்களுக்குத்தக்க சிலவற்றை விட்டு விடுவதால் உரையாசிரியரின் உண்மை நிலையை நாம் உணராது போய்விடலாம்.

**16. தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-கல்லாடனார் விருத்தியுரையும் பழைய உரையும்; (பதி) கு சுந்தரமூர்த்தி**; 1964; பக். 22 + கூ அச = 406

தொல்—சொல்—கல்லாடனார் விருத்தியுரையும் பழைய உரையும் என 1964-இல் கழகம் கு. சுந்தரமூர்த்தியைப் பதிப் பாசிரியராகக் கொண்டு வெளியிட்டுள்ளது. கல்லாடர் உரை இடைச் சொல்லியல் 10-ஆம் நூற்பாவோடு நின்றுவிட்டது. பின்பு உரையில்லை; கிடைத்துள்ளது அவ்வளவே. பின்புள்ள பழைய உரையை ‘அரசுஉரை’ எனத் தொல்—சொல்—உரைக் கோவை முதற் பாகத்தில் 1963-இல் வெளியிட்டுள்ளனர். இப் பழைய உரை 117 நூற்பாக்களுக்கு மட்டுமே உள்ளது எனக் கூறி வெளிவந்துள்ளது. ஆயின் உ.வே. சாமிநாதையர் நூலகத்திலுள்ள 48-ஆம் எண் சுவடியோடு இவ்வுரை பொருந்துகின்றது. 48-ஆம் சுவடியில் சொல்லதிகாரம் முழுவதற்கும் உரையுண்டு. அவ்வுரை இதுவரை வெளிவந்ததாகத் தெரியவில்லை.

இப்பதிப்பின் ஆராய்ச்சி முன்னுரையில் (13ஆம் பக்) ‘‘வ. சுப் பையாபிள்ளை அவர்கள் பல பிரதிகள் தந்துதவினார்கள்’’ எனக் குறித்துள்ளார். அச்சுவடிகள் எங்கிருந்து கிடைத்தன எத்தனை சுவடிகள் போன்ற குறிப்பில்லை. இச்சுவடிகள் கீழ்த்திசைச்சுவடி நூலகத்திலிருந்து பெற்றவையாக இருக்கலாம். ஏதோ ஒரு மூலச் சுவடியை வைத்து இவ்வுரையை வெளியிட்டுள்ளனர். கல்லாடர் உரை, சொல்லுக்கு அச்சில் வெளிவருவது முதன் முதலில் இப்பதிப் பின் வழித்தான். பின்பு சில சுவடிகள் கிடைத்திருக்கும் போலும். அச்சுவடிகளிலுள்ள வேறுபாடுகள், திருத்தங்கள் அனைத்தையும் ‘‘பிற் சேர்க்கை’’ யாக (205 -220) 15 பக்கங்களில் தந்துள்ளார்.

இவர் கருத்தின்படி கல்லாடர் மூவர்; சொல்லுக்கு உரையி யற்றிய இக்கல்லாடர் 14-ஆம் நூற்றாண்டினராய் இருக்கலாம் என்பது கருத்து.

கல்லாடரின் உரைநயங்கள் சிலவற்றை எடுத்துக் காட்டி யுள்ளார். பின்பகுதியில் கல்லாடனார் உரைக்கு விளக்கவுரையும் (223-295) 72 பக்கங்களில் கொடுத்துள்ளார். பின்பு பழைய உரை என்பது அச்சிடப் பெற்றுள்ளது. இரண்டு உரைகளுக்கும் நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை கொடுக்கப் பெற்றுள்ளது. நூற்பா நுவல் பொருள் நூற்பாவின் மேல்பகுதியில் தரப்பெற்றுள்ளது.

கல்லாடர் உரையில் நூற்பா பாடவேறுபாடுகள்— 7, 24, 28, 47, 48, 49. 54, 63, 89, 99, 116, 123, 155, 161, 163, 177, 197, 205, 211, 215, 224. 225, 237, 251, 260.

பழைய உரையில்— 1, 7, 24, 47. 48, 91, 110, 115.

**17. தொல்காப்பியம்—பொருள் (செய்யுளியல்)-நச்சினார்க்கினியம்;** 1965 (பதி) கு. **சுந்தரமூர்த்தி**; பக் 20 + ௩௦௨ = 322

1965இல் கழகம், கு. சுந்தரமூர்த்தி தரும் விளக்கவுரையுடனும், அடிக்குறிப்புகளுடனும் தொல்—பொருள்- செய்யுளியல்-நச்சினார்க் கினியத்தை வெளியிட்டனர். 1917இல் வந்த ரா. ராகவையங்கார் பதிப்புக்குப் பின்வரும் பதிப்பு இதுவே.

பதிப்புரை, ஆராய்ச்சி முன்னுரை. நூல், சூத்திர முதற்குறிப்பு அகரவரிசை செய்யுளியல் விளக்கவுரை என நூல் அமைந்துள்ளது.

ஆராய்ச்சி முன்னுரையில் செய்யுளியலில் மட்டும் 112 பாட வேறுபாடுகள் உள்ளதாகக் கூறி, அவற்றுள் இளம்பூரணர். பேராசிரியர் இருவரின்றும் வேறுபட உரைக்கும் பாடங்கள் முப் பதினைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். செய்யுளியலில் இளம்பூரணர் உரைப்படி 235 நூற்பாக்கள். ஏனைய பேராசிரியர், நச்சினார்க்கினியர் இவர்கள் உரையின்படி 243 நூற்பாக்கள் என்ப தையும் சுட்டியுள்ளார். தெளிவான ஆராய்ச்சி முன்னுரை அமைகின்றது.

அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகளைக் குறித்துள்ளார் —1, 2, 4. 6, 7, 11, 12, 14, 20, 24, 26. 27, 31, 38, 40, 42, 46, 50, 51, 56, 60, 61, 62, 66, 69, 72, 73, 79, 80, 82, 85, 86, 90, 96, 102, 103, 111, 114, 120, 126, 128, 131, 132, 133, 134, 135, 153, 154,

156, 158, 160, 162. 166, 167, 173, 174, 176, 177, 178, 179, 180, 184, 185, 186, 187, 188, 189, 190, 191, 198, 199, 200, 202, 203, 204, 209, 210, 211, 212, 213, 215, 216, 227, 233, 234, 235, 237, 238, 239, 240, 241, 242, 243.

அடிக்குறிப்பில்—மேற்கோள் இலக்கிய இடங்களையும், மேற்கோள் இலக்கியப் பாடவேறுபாடுகளையும், மேற்கோள் முதற் குறிப்பாகத் தந்தவற்றின் முழுப் பாடலையும் தந்துள்ளார்.

## வேங்கடாசலம் பிள்ளை

**தொல்காப்பியம்—சொல்லதிகாரம் - தெய்வச்சிலையார்;** 1929, **கரந்தைத்தமிழ்ச் சங்கம்; கரந்தை; பக்.** 12+ உகூஉ +49 = 323

1929-இல் முதன் முதலாகத் தொல்—சொல்—தெய்வச்சிலையார் உரை கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால் ஆ. வேங்கடாசலத்தைப் பதிப்பாசிரியராகக் கொண்டு பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இதற்கு, முதலில் தஞ்சை சரசுவதிமகால் நூல் நிலையச்சுவடியும்; அரித்துவாரமங்கல் இராசாளி சுவடியும் உதவியுள்ளன. இச்சுவடிகளைக் கொண்டு நூலினை அச்சிட்டனர். பின்பு உ. வே. சாமிநாதையரிடம் இவ்வுரைச்சுவடி இருப்பதறிந்து அவரிடமிருந்து பெற்று அச்சிட்டதிலுள்ள வேறுபாடுகளை 41 பக்கங்களில் சேர்க்கை எனச் சேர்த்துள்ளனர். இம்மூன்று சுவடிகளிலும் உ. வே. சாமிநாதையர் தந்த சுவடிதான் சிறந்தது என்பது பதிப்பாசிரியர் கருத்து. சரசுவதிமகால் சுவடியில், 'ஆத்திரேய கோத்திரம்' என்னும் சொற்கள் இருந்தனவென்றும், அதனால் ஆத்திரேயக் கோத்திரத்துப் பேராசிரியர் எனக்கருதிப் பேராசிரியர் உரையெனும் பெயரும் தந்து விளம்பரங்களும் செய்யப்பெற்றன என்று (பக். 10-இல்) பதிப்பாசிரியர் குறிக்கின்றார். சமீபத்தில் (1989) சரசுவதிமகால் வெளியீடாகத் தொல்காப்பியம் சொல்லதிகாரம் (ஆத்திரேயர் உரை) என ஒரு நூல் வெளிவந்துள்ளது. இது தெய்வச்சிலையார் உரைச்சுவடியைப் பார்த்து எழுதியதாக இருக்கலாம். உ. வே. சாமிநாதையர் கொடுத்த ஏட்டிலிருந்து தான் தெய்வச்சிலையார் உரை என்பது தெளிவாகியுள்ளது. பதிப்பாசிரியர் அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகளைக் குறித்துள்ளார். எண்கள்—7, 116, 149, 224, 228, 234, 239. 242. 267, 291. 294, 295, 301, 318, 348, 353, 376, 403, 410, 436, 440. பொது நிலையில் சேனாவரையர், நச்சினார்க்கினியர் இருவருக்கும் சொல்—நூற்பாக்கள்—463; இளம்பூரணருக்கு 456; தெய்வச்சிலை

யாருக்கு 453; (1929ஆம் ஆண்டுப்பதிப்பில் நூற்பா எண் 50, 50A என்று தருகிறார். அதனால் 452 ஆகவுள்ளது). உரியியலிலும் பிற இடங்களிலும் சில நூற்பாக்களைச் சேர்த்துக் கூறுவதால் மொத்தத்தில் 10 நூற்பாக்கள் எண்ணிக்கையில் குறைகின்றன.

எச்சவியலிலுள்ள வினைபற்றிய நூற்பாக்கள் மூன்றைத் தெய்வச்சிலையார் வினையியலுக்கு மாற்றியுள்ளார். இத்துணிவு ஏனையுரையாசிரியருக்கு இல்லை. மூலநூலாசிரியர் எங்கு வைத்துள்ளாரோ அதுவே சரியென்ற உணர்வும், அதற்குக் காரணகாரியங்கள் காட்டுவதும் பிற உரையாசிரியர் பொதுத் தன்மைகள். தெய்வச்சிலையார் தனக்குச் சரியென்று தோன்றியதைத் துணிந்து செய்கின்றார்.

இவர் நூற்பா நுவலும் பொருளை நூற்பாவின் கீழ்த் தந்து பின்னர் உரையெழுதத் தொடங்குகின்றார்.

88ஆம் நூற்பா உரையில் "ஆயினும் இப்பொருள் பாணினியார்க்கும் ஒக்கும்" என எழுதுகின்றார். இதனால் பாணினி இலக்கணம் பற்றி இவர் உணர்ந்துள்ளார் என்பது புலப்படுகிறது.

ஒவ்வொரு இயல் இறுதியிலும் இவ்வோத்தினுள் சூத்திரம் உட்பட உரையினது அளவு கிரந்தவகையான் ஐந்நூற்று நாற்பது பக்-47; முந்நூற்று முப்பது பக்-70; முந்நூறு பக்-93; நூற்றுமுப்பது பக்-106; முந்நூற்று ஒருபது பக்-129; நானூற்றறுபது பக்-163; முந்நூற்று நாற்பது பக்-189; இருநூற்றெண்பது பக்-215; அறுநூற்றிருபது பக்-262 என்று தந்துள்ளார். இவ்வாறு வேறு எந்த உரையாசிரியரும் எழுதவில்லை. இது சமஸ்கிருதச் சார்பாகத் தோன்றுகிறது.

## பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார்

1. **தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு; சூலை** 1930; **பி. எஸ். சுவாமிநாதன்; பக். XXX + 266 = 296.**

தொல்காப்பியச் சொல்லதிகாரக் குறிப்பு என்ற நூலை பி. சா. சுப்பிரமணியசாஸ்திரி ஜூலை 1930இல் வெளியிட்டார். தொல்காப்பியத்திற்கு வெளிவந்துள்ள இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர், தெய்வச்சிலையார் உரைகளையும், வெளிவாராத கல்லாடனார், அரசு உரைகளையும் ஒப்பிட்டுச் சொல்லதிகாரம் பற்றிய கருத்துகளைத் தந்துள்ளார்.

உரைகளைத் தொகுத்துப் பார்க்கும் எண்ணம் 1930-இலேயே தோன்றியுள்ளதை இது உணர்த்துகிறது. அதோடு சமஸ்கிருத (வடமொழி) இலக்கண நூல்களாகிய ருக்வேதப்ராதிசாக்கியம், தைத்திரீயப்ராதி சாக்கியம், சுக்ல யஜுர்வேதப்ராதி சாக்கியம், யாஸ்கநிருக்தம், பாணினி அஷ்டாத்தியாயீ, பாணினி சிக்ஷை, பர்த்திரு ஹரிவாக்கியதீபம், ஹேலா ராஜீயம் (வாக்கிய தீபவுரை) இத்தனை நூல்களோடும் தொடர்புபடுத்தியும் பார்த்துள்ளார். சமஸ்கிருதப் பேராசிரியராக இருந்ததால் ஒப்புமை நோக்கில் இவைகளைக்கொண்டு பார்க்கவேண்டுமென்ற உணர்விருப்பது இயல்பு. ஆயின் வெளிவராத சொல்லதிகார உரைகளாகிய கல்லாடம் அரசு உரைகளையும் இணைத்து ஒத்துப் பார்த்துள்ளது அவருடைய ஆர்வத்தையும், முழுமையாக நோக்க வேண்டுமென்ற உணர்வையும் காட்டுகிறது. இது மிகவும் பாராட்டிப் போற்றத் தக்க ஒன்று. ஸேது ஸமஸ்தான வித்வான் ரா. ராகவையங்கார் இந்நூலுக்குப் பாயிரம் வழங்கியுள்ளார். சாஸ்திரியார் தெளிவான முகவுரை தந்துள்ளார். தமிழ்மொழிக்கும் வடமொழிக்குமுள்ள வேற்றுமை, தமிழ்மொழிக்கும் வடமொழிக்கும் உள்ள ஒற்றுமை, ஆசிரியர் தொல்காப்பியர் சூத்திரஞ்செய்த முறை, சொல்லதிகாரச் சொற்களில் வழங்கப்பட்ட வடமொழிச் சொற்கள், உரைகாரர் களைப் பற்றித் தோன்றிய செய்திகள் போன்றனவற்றைக் கொடுத்துள்ளார். தேவையான நூற்பாக்களுக்கு மட்டுமே குறிப்புத் தந்துள்ளார். ஏறத்தாழ 463 நூற்பாக்களில் 240 நூற்பாக்களுக்குத் தெளிவு விளக்கங்களும் எல்லா உரையாசிரியரையும் ஒப்பிட்டும் எழுதியுள்ளார்.

அடிக்குறிப்புகளில் 1. நூற்பா பாடவேறுபாடுகள் உள்ளன. எண்கள், 1, 97, 202, 217, 235, 269, 296, 322-இவற்றுள் 'எல்லே இலக்கம்,-(269) என்ற நூற்பாவுக்கு எல்லாப் பாடங்களையும் தந்துள்ளமை பாராட்டத்தக்கது; 2. உரைப்பாட வேறுபாடுகளை யும் தருகிறார்; 3. பதிப்பு வேறுபாடுகளைச் சுட்டுகிறார்; சி. வை. தா-சேனாவரையப் பதிப்புக்கும் சைவசித்தாந்தக் கழகச் சேனா வரையப் பதிப்புக்கும் உள்ள வேறுபாடுகளைக் குறித்துள்ளார். பக்-142, 145; 4. உரையாசிரியர் சூத்திரங்களை இரண்டை ஒன்றாக்கியும், ஒன்றை இரண்டாக்கியும் உள்ள செய்திகளைக் குறிப்பிடுகிறார் (பக்-144); 5. வடமொழி இலக்கணங்களோடு பொருத்திக் கூறுகிறார்: பக்-152, 169, 196.

ஆய்வு நெறிமுறைகளுடனும், தெளிவுடனும் கருத்துகளை ஒப்பு நோக்கிக் கூறியுள்ளமை மிகவும் பாராட்டத் தகும் நிலையில் அமைந்துள்ளது.

அவர் கூறும் கருத்துகள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளக் கூடியன என்று கூறுவதற்கில்லை. சொல்லதிகாரத்தில் வழங்கப் படும் வடமொழிச் சொற்களாக 1. அதிகாரம், 2. தெய்வம், 3. அந்தம், 4. பகுதி, 5. காரணம், 6. வண்ணம், 7. இலக்கணம் 8. காலம், 9. உலகம், 10. பூதம், 11. ஏது, 12. கருமம், 13. பிண்டம், 14. உருபு, 15. ஆனம், 16. உறு, 17. பையுள், 18. ஆணை, 19. திசை, 20. உவமம், 21. குணம், 23. அவை, 24. மந்திரம் என்ப எனக் குறிக்கின்றார்.

இவற்றுள் பெரும்பான்மை தமிழ்ச் சொற்களே. இவ்வெண் ணத்தை நச்சினார்க்கினியரும் நினைத்துக் 'காலம் உலகம்' என்னும் நூற்பாவிற்கு (57) உரையெழுதும்போது 'காலம் உலகம் என்பன வடசொல் அன்று. ஆசிரியர் வடசொற்களை எடுத்தோதி இலக்கணம் கூறாராகலின்' என்று எழுதுகின்றார்.

2. Tolkappiyam, the earliest extant Tamil Grammar With a Short Commentary in English Vol. I Eluttati Karam; 1930, Journal of Oriental Research Madras P. X+150=115.

செப்டம்பர் 1930-இல் தொல்காப்பியம் எழுத்ததிகாரம்- ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு (Transliteration) கருத்து, குறிப்புகள் என்ற நிலையில் பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் ஆங்கிலத்தில் வெளியிட்டார். பிறமொழியினர், பிறநாட்டினர் தொல்காப்பி யத்தை அறிந்து கொள்ள வேண்டுமென்பதே அவர் நோக்கம். ஆய்வுப்பட்டம் பெற்றவராகையால் முறைப்படிச் செய்துள்ளார். இறுதியில் நூற்பா முதற்குறிப்பு (index of Sutras), சொல் லகராதி (index of words) ஆகியன கொடுத்துள்ளார். குறைந்த பிழைகளோடு நன்முறையில் அச்சிடப் பெற்றுள்ளது.

பயனுடைய பதிப்பு.

**3. தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-குறிப்புரை, டிசம்பர் 1937; பி. எஸ். ஸ்வாமிநாதன்; பக் xxx+400+ii=432**

1937-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் பி. சா. சு. சாஸ்திரியார் தொல் காப்பியம்—எழுத்ததிகாரம்—குறிப்புரையுடன்—திருப்பனந்

தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர், காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் பொருளுதவியைக் கொண்டு வெளியிட்டுள்ளார்.

தொல்-எழுத்து-இளம், நச்சர் இருவர் உரைப் பதிப்புகளையும் தெளிவாகப் பார்த்துள்ளார் என்பதை அவர் நூல் உணர்த்துகிறது. அதோடு தொல்காப்பியம் தொடர்பான சொல்-பொருள் பதிப்பு களையும் தேவையான இடங்களில் சுட்டியுள்ளார்.

வடமொழி நூல்களாகிய ருக்வேத ஸம்ஹிதை, தைத்ரீய ஸம்ஹிதை, நிருக்தம், பாணினி சிக்ஷை, பக்வத்கீதை, ருக்வேத ப்ராதிசாக்கியம், சுக்ல யஜுர்வேதப்ராதிசாக்கியம், அதர்வவேத ப்ராதிசாக்கியம், மஹாபாஷ்யம், காமஸூத்திரம், மனுஸ்மிருதி, யாக்ஞவல்க்யஸ்மிருதி, நாட்டிய சாஸ்திரம், வாமநாகாவ்யாலங் காரம், உத்தரராமசரிதம், வாசஸ்பத்தியம்-இவற்றையும் தேவை யான இடங்களில் சுட்டியுள்ளார்.

எல்லா நூற்பாக்களுக்கும் குறிப்புரை தந்துள்ளார். பாட வேறுபாடுகள் பற்றிய குறிப்பு இல்லை. 10 பக்கங்களில் முகவுரை உள்ளது. ‘‘இவ்வுரை எழுதியதற்குக் காரணம் எளிதில் எல்லோரும் தொல்காப்பியத்தைப் படிக்க வேண்டுமென்பதும், மாணாக்கர் அறிவை வளர்க்க வேண்டுமென்பதும், நூலாசிரியர் அழகாக முற்கூறியதைப் பிற்கூறாது சாஸ்திரீய முறையிற் சூத்திரங்கள் இயற்றியதைக் காட்ட வேண்டுமென்பதும் அவரது அறிவு முதிர்ச்சியைப் பிறர்க்கு உணர்த்த வேண்டுமென்பதுவும் போன் றனவாம்’’ என எழுதுகிறார். நோக்கம் எதுவாயினும் எடுத்துக் கொண்ட பொருளை முறைப்படி அணுகியுள்ளார் என்பதில் ஐயமில்லை. எனினும் அவர் முடிவுகள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளக் கூடியனவும் அல்ல-

பின் பகுதியில் சூத்திர முதற்குறிப்பகராதி, சூத்திரச் சொல் லகராதி, உரைச் சிறப்புச் சொல்லகராதி போன்றவற்றைத் தந்துள்ளமை பாராட்டிற்குரியது. இதுவரை தொல்காப்பியம் முழுவதற்கும் பதிப்பாசிரியர் யாரும் சொல்லகராதி தரவில்லை என்பது இங்கு நினைத்துச் சுட்டற்குரியது.

நெல்லை, சிவஞான முனிவர் நூலகப் படி இங்குப் பயன் படுத்தப்பட்டுள்ளது.

**4. தொல்காப்பியம்-சொல்லதிகாரம் (முதல் மூன்று இயல்கள்)-ஆங்கில எழுத்துப் பெயர்ப்புடன் 1937; பக். 124.**

1937-இல் பி. சா. சு. சாஸ்திரியார் தொல்காப்பியம்-சொல்லதிகாரம்–கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல்-மூன்றற்கும் நூற்பா, எழுத்துப் பெயர்ப்பு, கருத்து, குறிப்புகள் என்ற நிலையில் வெளியிட்டார். நூற்பா தவிர அனைத்தும் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன. எல்லா உரையாசிரியரின் கருத்து களையும் தேவையான இடங்களில் சுருக்கமாகத்தந்துள்ளார். அடிக் குறிப்பில் சிறு விளக்கங்கள் தருகிறார். ஏற்கனவே சொல்லதிகாரக் குறிப்பில் பாடவேறுபாடுகளைக் குறிப்பிட்டு விட்டதால் இங்குப் பாடவேறுபாடுகள் பற்றிய செய்திகள் இல்லை. "Preface and index will appear in Vol II, Part II" என்ற குறிப்புள்ளதால் அவை தரப்பெறவில்லை.

இந்நூலின் படியும் நெல்லை, சிவஞான முனிவர் நூலகத்தில் கிடைத்தது.

**5.** Tolkappiyam Collatikaram with an English Commentary; Nov. 1945; Annamalai University; Annamalai Nagar; P. XI 11 + 316 = 358.

நவம்பர் 1945-இல் தொல்காப்பியம்-சொல்லதிகாரம் முழுமைக்கும் பி. சா. சு. சாஸ்திரியாரின்-நூற்பாஎழுத்துப் பெயர்ப்பு, சிறுவிளக்கம், குறிப்புகள் என்ற நிலையில் அண்ணா மலைப்பல்கலைக்கழகம்-வெளியிட்டுள்ளது.

சமஸ்கிருதப் பேராசிரியராக இருந்ததால் சமஸ்கிருத இலக்கண நூல்கள் பலவற்றோடு ஒப்புமைப்படுத்திக் காட்டியுள்ளார். தொல் காப்பியர் சமஸ்கிருதம் நன்கு தெரிந்தவர் என்பது இவ்வாசிரியர் கருத்து. சமஸ்கிருதத்திலிருந்து கடன் வாங்கியுள்ளது போன்று பல இடங்களில் எழுதுகிறார். அதைப் பேராசிரியர் தெ. பொ. மீ. இந்நூலின் முகவுரையில் சில சான்றுகள் தந்து மறுத்துள்ளார். நோக்கம் எதுவாயினும் முறைப்படித் தம் கருத்துகளைத் தந்துள் ளார். மொழிபெயர்ப்பும் பல இடங்களில் சரியில்லை என்பது தெ. பொ. மீ. கருத்து. 30 பக்கங்களுக்கு மேல் முன்னுரை எழுதி யுள்ளார். பின்பகுதியில் 'Index of Words in the Collatikaram என்ற பகுதியும் 'Index of important Words in the Commentary' என்ற பகுதியும் உள்ளன.

அயல்மொழியினரும் அயல்நாட்டினரும் தொல்காப்பியத்தைத் தெரிந்து கொள்ளத் துணையாக அமையும். ஆனால் சமஸ் கிருதத்தின் பெருமையை ஆசிரியர் இந்நூலிலும் காட்டியுள்ளமை பொருந்துமெனத் தோன்றவில்லை.

**6. தொல்காப்பியம்-பொருளதிகாரம் (முதலிரு இயல்கள் ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு விளக்கத்துடன்);1949; குப்புசாமி சாஸ்திரி ரிசர்ச் இன்ஸ்டிடியூட்; சென்னை; பக். 62.**

பி. சா. சு. சாஸ்திரியார் 1949-இல் தொல்-பொருள் அகத்திணையியல், புறத்திணையியல் இரண்டையும் எழுத்துப் பெயர்ப்புடனும் (Transliteration) குறிப்புகளுடனும் ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார். 1930-இல் எழுத்ததிகாரத்தை வெளியிடும் போது தமிழில் நூற்பாக்களைத் தந்து, பின்பு ஏனையவற்றைத் தருகிறார். முகவுரை, அகராதிகள், இவை இறுதிப் பகுதியில் தரப்பெறும் என ஒரு குறிப்புள்ளது. இறுதிப் பகுதியிலும் அவை இல்லை.

அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் குறித்துள்ளார். நூ. எ. 60, 62, 67, 68, 71, 74, 76. 86. 87. சமஸ்கிருத இலக்கணத்திலுள்ள தொடர்புடைய செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார்-35, 51. நூற்பா-62, 68-இரண்டிலும் 'அன்றியும்' என்ற சொல்லை நூற்பா முதற் பகுதியில் 'அவைதாம்' போன்ற நிலையில் தந்து, "it seems 'anṟiyum' has been left out by the scribe" என எழுதுகிறார். இவ்வாறு ஒரு பாடவேறுபாட்டு அமைப்பு எந்த அச்சுப்பதிப்பிலும் சுவடியிலும் இல்லை. இதுபோன்று 'அன்றியும்' என்ற புதிய வடிவத்தை நூற்பா முதற் பகுதியில் சாஸ்திரியார் தோற்றுவிக்கிறார். அன்றியும் என்ற வடிவம் தொல்காப்பிய பொருளதிகாரத்தில் நான்கு இடங்களில் பயிலுகின்றது. ஆயின் நூற்பாவின் இடைப்பகுதிகளில் வருகின்றனவே தவிர முதற் பகுதியில் இல்லை.

**7. தொல்காப்பியம்—பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்—ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு விளக்கத்துடன்) 1952; குப்புசாமி சாஸ்திரி ரிசர்ச் இன்ஸ்டிடியூட்; சென்னை; பக். 63—134=71.**

1952-இல், பி. சா. சு. சாஸ்திரியார் தொல்-பொருள்-களவியல், கற்பியல், பொருளியல் இவற்றின் எழுத்துப் பெயர்ப்பு, நூற்பா சுருக்கம், குறிப்புகள் முதலான இவற்றைத் தமிழில் நூற்பாக்கள் தந்து பின்பு விளக்கியுள்ளார்.

அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் குறித்துள்ளார் நூ. எ. 92, 96, 97, 98, 150, 108, 112,113, 125, 126, 128, 129, 144, 145. 148, 149, 151, 157, 159, 161, 166, 167, 168, 169, 170, 173, 174, 75, 194. 199, 200, 207, 209, 214, 215, 218, 219, 222, 226, 235, 240, 241.

சமஸ்கிருதத்தில் காமசூத்திரத்தின் தொடர்புடைய செய் களையும் குறிக்கின்றார் பக். 73, 74, 91, 92, 115.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரைகளைத் தேவையா இடங்களில் இணைத்தும் காட்டுகிறார்.

ஆங்கிலக் குறிப்புகள் பிறநாட்டினருக்குத் தொல்காப் யத்தைத் தெளிவாகப் புரிய வைக்கும்.

**8. தொல்காப்பியம்-பொருளதிகாரம் (பின்னான்கு இயல்கள் ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு விளக்கத்துடன்); 1956; பக்.** 102.

பொருளதிகாரத்தின் பிற்பகுதியாகிய மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல், மரபியல் இவற்றைச் சாஸ்திரியார் 1956-இல் வெளியிட்டுள்ளார். முந்தைய பகுதி போலவே நூற்பா, எழுத்துப் பெயர்ப்பு, பொருட் சுருக்கம், குறிப்புகள் என்ற நிலையில் நூல் அமைந்துள்ளது.

அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகளும், சமஸ்கிருத மொழியிலுள்ள தொடர்புடைய கருத்துகளும் கொடுத்துள்ளார்

நூ. எ. 247, 249, 253, 254, 255, 256, 258, 266, 268, 272, 276, 278, 279, 282, 283, 286, 294, 302, 309, 310, 311, 315, 320, 322, 332, 334, 335, 339, 352, 359, 367, 369, 376, 379, 385. 386, 388, 392, 408, 409, 429, 432, 434, 438, 439, 441, 457, 458, 461, 462, 463, 465, 469, 476, 481, 483, 487, 488, 500, 503, 505, 506, 507, 510, 516, 538, 540, 541, 542, 543, 544, 545, 546, 548, 559. 563, 566, 578, 613, 616, 621, 623, 631. 633, 634, 635, 636, 648, 652, 654, 657, 658, 659.

தொடர்புடைய சமஸ்கிருதச் செய்திகளைத் தரும்போது அவருடைய நோக்கம் அவற்றிலிருந்து இவை வந்திருக்க வேண்டு மென்பதாயிருக்கலாம். அவ்வாறு கூறுவது பொருத்தமுடைத் தன்று என்பது தெ. பொ. மீ.[1] உட்படப் பலருடைய கருத்து.

## ஆறுமுகநாவலர்

**தொல்காப்பியம் — சொல்லதிகாரம்—சேனாவரையம்; 1934; வித்தியாநுபாலன யந்தரசாலை; சென்னை;**

1934இல் தொல்—சொல்—சேனாவரையம் ஆறுமுகநாவலரால் பல சுவடிகளைக் கொண்டு ஆராயப்பட்டு, சிதம்பர சைவப்பிரகாச

1. Tolkāppiyam-Collatikāram-P. S. Subramania Sastry-Annamalai University; 1979; p. XIV-XV.

வித்தியாசாலைத் தருமபரிபாலகர் பொ. பாவனியம்மையால் வித்தியாநுபாலன யந்திரசாலையில் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இந்நூல் பற்றிய குறிப்பை, மு. சண்முகம்பிள்ளை, தொல்காப்பிய ஆய்வின் வரலாறு கோ. கிருட்டிணமூர்த்தி* ஆகிய இருவரும் குறிக்க வில்லை. இப்பதிப்பு இரண்டாம் பதிப்பு என்றுள்ளது. முதல் பதிப்பாக, 1868இல் சி.வை.தா. பதிப்பு ஆறுமுகநாவலர் பார்வை யிட்டு வெளிவந்துள்ளமையால், இதனை இரண்டாவது பதிப்பாகக் குறித்துள்ளாரோ எனத் தோன்றுகிறது.

1868ஆம் ஆண்டின் சி.வை.தா. பதிப்பிலிருந்து சிறிது மாற்றங் களுடன் வெளியிடப்பெற்றுள்ளது. பக். ௬ - தொல்காப்பியச் சூத்திர விருத்தி ௧௬ ஆம் பக்கத்திற் காண்க. இது 1868; தொல் காப்பியச் சூத்திரவிருத்தியிற் காண்க—1934; இவ்வாறு மூன்று இடங்களில் 'இன்ன பக்கத்திற் காண்க' என்பது விடப்பட்டுச் சூத்திர விருத்தியிற்காண்க என உள்ளது. பக். அ௬; ௧00; முதற் பதிப்பில் இன்ன பக்கத்தில் காண்க என்பது தெளிவு. பின்பதிப்பில் அப்பக்க எண் இன்மையால் சூத்திர விருத்தி முழுவதும் தேட வேண்டும். அது தெளிவுக் குறைவு. நூற்பாவகராதியில் எழுத்துகள் தனித்தனியே கொடுக்கப்பெற்றுள்ளது பிற்பதிப்பில் (1934).

## திரிசிரபுரம் எஸ். கனக சபாபதிப்பிள்ளை

1. **தொல்காப்பியம் பொருள் (முன்னைந்து இயல்கள்)—நச்சினார்க் கினியம் முதல் பகுதி; 1934; சாது அச்சுக்கூடம்; சென்னை.**

2. **தொல்காப்பியம்— பொருள் (பின்னான்கு இயல்கள்) பேராசிரியம்; இரண்டாம் பகுதி; 1935; சாது அச்சுக்கூடம்; சென்னை; பக். xvi + 1420 = 1436**

திருவையாறு அரசர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் ஆர். வேங்கடாசலம் பிள்ளை தூண்டுதலால் இவர் தொல்— பொருள்—நச்சினார்க்கினியம் முதல் ஐந்து இயல்களை 1934இலும் பின் நான்கு இயல்களின் பேராசிரியத்தை 1935இலும் வெளி யிட்டார். தொல்—பொருள்—முழுவதும் 1885இல் சி. வை. தா. வெளியிட்டபின்பு 1916, 1917இல் பவானந்தர் கழகம் வெளி யிட்டது. இவை கிடைப்பதருமையானதால் 34, 35இல் இவர் வெளியிட்டுள்ளதாகப் பதிப்பாளர் முன்னுரையில் கூறுகிறார்.

* தொல்காப்பிய ஆய்வின் வரலாறு — கோ. கிருட்டிண மூர்த்தி. சென்னைப் பல்கலைக்கழகம்—1990.

முதல் பாகத்தை எஸ். வையாபுரிப்பிள்ளையின் ஓலைச் சுவடியைக் கொண்டு ஆராய்ந்து, மன்னார்குடி இயற்றமிழாசிரியர் ம. நா. சோமசுந்தரம்பிள்ளையின் அரிய ஆராய்ச்சிக் குறிப்பு களுடனும் திருத்தங்களுடனும் வெளியிட்டுள்ளார்.

இரண்டாம் பாகத்தை வே. துரைசாமி ஐயர் ஏட்டுச் சுவடி யோடு ஒப்பிட்டு ஆராய்ந்து திருத்தம் செய்து மன்னார்குடி ம.நா. சோமசுந்தரம்பிள்ளை எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் வெளியிட்டுள்ளார்.

இரண்டு பாகங்களும் சாது அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றுள்ளதால் நன்முறையில் அச்சிடப் பெற்றுள்ளன.

நூற்பா 14 புள்ளி தடித்த எழுத்திலும் (thick letters)—உரை 12 புள்ளியிலும், மேற்கோள் பாடல்கள், அடிக்குறிப்புகள் 10 புள்ளியுமாக மிகச் சிறப்பாக வேறுபாடு தெரியும்படி அச்சேற்றி யுள்ளார்.

பதிப்பாளர் முன்னுரை, நூற் சுருக்க விளக்கம், நூற்பா முதற் குறிப்பகராதி—நூல்—பிழை திருத்தம் என இவ்வாறு முதல் பாகமும், இவற்றோடு பேராசிரியர் வரலாறு இணைக்கப்பெற்று இரண்டாம் பாகமும் வந்துள்ளன.

மிகவும் கவனமாகச் செய்யப்பெற்றுள்ள பதிப்பாக அமை கின்றது.

அடிக்குறிப்பில் 1. நூற்பா பாடவேறுபாடுகள்—சான்றுக்குச் சில—நூ. எ. 15, 48, 60, 67, 172, 266, 300, 354, 362, 372, 2. உரைப்பாடவேறுபாடுகள்— 3. இளம்பூரணர்—பக்-374, 379, 423, 537, 542 பேராசிரியர்—பக்-381, 386, 478, 568, 688. 4. உரைச் செய்திகள்— இறையனார் களவியல் உரைப்பகுதிகள் பக்-369. 560, 5. இலக்கிய மேற்கோள் இடங்கள்—அவற்றின் பாடவேறு பாடுகள். 6. இளம்பூரணர் ஒரு சூத்திரமாகக் கொள்வதை நச்சர் இரண்டாகக் கொள்வது 61, 62; 69, 70; 73, 74; நச்சர் ஒரு நூற்பா வாகக்கொள்வதை இளம்பூரணர் இரண்டாகக் கொள்வது—6, 8, 33 7. பத்துப் பாட்டு, கலித்தொகை, சிந்தாமணி இவற்றுக்கு நச்சர் எழுதிய உரைப் பகுதிகளைத் தேவையான இடங்களில் சுட்டுவது பக்-452, 472, 686, 687, 691, 696, 736, 862, 864, 914— போன்றவை அமைந்துள்ளன.

பெரிய (நீண்ட) நூற்பாக்களுக்கு வரி எண்ணிக்கை கொடுத் துள்ளார் நூ.எ. 146, 147, 150, 151.

பல நிலைகளிலும் மிகுந்த பயனுடைய பதிப்பாக அமைந்துள்ளது.

உரையாசிரியர் காலத்தில் பார்ப்பனர் செல்வாக்கு மிகுதியாக இருந்ததால் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் உரைகள் அமையவில்லை என்பது பொது எண்ணம். "வேளாண் மாந்தர்க் குரிய ஆறு மரபாவன: உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடுபுறந்தருதல், வழிபாடு, வேதமொழிந்த கல்வி என்னும் இவை என்பர் இளம்பூரணர் (இதனுட் சில பொருத்த மின்மை உய்த்துணர்ந்து கொள்க)"—அடிக்குறிப்பு—பக்-276.

இரண்டு பாகங்களுக்கும் சேர்த்து நூற்பா எண்கள் 665 எனச் சேர்த்தும், பக்கங்கள் தொடர்ச்சி எண்ணிலும் அமைந்துள்ளன.

## ம. ஆ. நாகமணி

**தொல்காப்பிய மேற்கோள் விளக்க அகராதி**; 1935; **சாது அச்சுக்கூடம்; சென்னை; பக்.** 4+316=320

1935இல் தொல்காப்பியப் பொருளதிகார மேற்கோள் விளக்க அகராதி முதலியன என்ற நூலை ம. ஆ. நாகமணி என்பவர் வெளியிட்டுள்ளார்.

மேற்கோள் விளக்க அகராதியைச் .வை.தா. செய்த 1885 ஆம் ஆண்டுப் பதிப்பையும் புதுப்பதிப்பையும் வைத்துச் செய்துள்ளார். புதுப்பதிப்பென்பது 1934, 1935இல் வந்துள்ளவை.

தொல்காப்பியப் பொருளதிகாரப் பொருளடக்க முதலிய வற்றின் அகராதி, தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திர முதற் குறிப்பகராதி, யுக்தி முப்பத்திரண்டு, பிழை திருத்தம், பேராசிரியர் வரலாறு, நச்சினார்க்கினியர் வரலாறு போன்றவை உள்ளன. இது தொல்காப்பியப் பதிப்பாகாது. பதிப்புத் தொடர்புடைய நூல். இன்று 1885, 1934, 1935 பதிப்புகள் கிடைப்பதில்லை. அதனால் இம்மேற்கோளகராதியைப் பயன்படுத்துவது கடினம். இதைக் காட்டிலும் பொருளதிகார நூற்பா எண்கள் தந்து அதன் மேற் கோள் என்று குறிப்பிட்டிருந்தால் இன்னும் பொருத்தமாக இருக்கும். பயனுள்ள நூல்.

## சி. கணேசையர்

1. **தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்;** 1937; **திருமகள் அழுத்தகம்; சுன்னாகம் பக்.** xxi+௩௬௩+68+xiv= 466.

தொல்காப்பியத்திற்கு, யாழ்ப்பாணம் தமிழ்வித்துவான் புன்னாலைக்கட்டுவன், சி. கணேசையர் பதிப்புகள் பாராட்டத் தகும் நிலையில் அமைந்துள்ளன. தொல்காப்பியத்தைப் படித்தும், படிப்பித்தும் வந்தமையால் கணேசையருக்கு நல்ல திறன் உள்ளதை அவருடைய உரை விளக்கக்குறிப்புகள் தெளிவுபடுத்துகின்றன. அவருடைய பதிப்புகள் அனைத்தும் பதிப்பு முறைகளோடு பதிப்பிக்கப் பெற்றுள்ளன. அவர் முதன் முதலில் தொல்—எழுத்து—நச்சினார்க்கினியர் உரையை 1937இல் பதிப்பித்துள்ளார். ஏற்கனவே இவ்வுரைப்பதிப்பு 1847,1891,1923இல் வந்துவிட்டன. அதனால் தெளிவாகப் பதிப்பிக்கும் நிலை கணேசையருக்கு வாய்த்தது.

ஏனைய பதிப்புகளில் இல்லாத பல செய்திகள் இப்பதிப்பில் உள்ளன. அடிக்குறிப்பில் நச்சினார்க்கினியர் உரைக்கு விளக்கம் எழுதியுள்ளார். பதிப்புரை, சி. வை. தா. வரலாற்றுச் சுருக்கம், உரைவிளக்கக் குறிப்பின் முகவுரை, தொல்காப்பியர் வரலாறு, நச்சினார்க்கினியர் வரலாறு போன்றவை முன் பகுதியில் உள்ளன. பின்பகுதியில் சூத்திர அகராதி, உதாரண அகராதி, அரும்பத விளக்கம் முதலியன, முற்பதிப்புகளில் விளக்கப்படாத மேற்கோள் விளக்கம், விஷய அகராதி, பிழை திருத்தம் போன்றவை உள்ளன. இவற்றுள் சூத்திர அகராதி மட்டுமே ஏனைய முந்தைய பதிப்புகளில் காணப்படுவது. ஏனையவை இவர் இணைத்துள்ளவை. இவைபோக இவர் 'செந்தமிழ்' இதழில் எழுதியுள்ள 'அளபெடை', 'போலி எழுத்து' ஆகிய இரண்டு கட்டுரைகளும் அநுபந்தமாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.

பொது நிலையில் இவர் பதிப்புகள் அனைத்தும் நல்ல தாளில், தெளிவான அச்சில் அச்சிடப்பெற்றுள்ளன. எல்லாப் பதிப்புகளும் நல்ல கட்டடத்துடன் உள்ளன (well bound). அதோடு நூற்பாவுக்கு ஒருவகை எழுத்தும், உரைக்கு மற்றொரு வகை எழுத்தும், பொருளதிகாரத்தில் எடுத்துக் காட்டுச் செய்யுட்களுக்குப் பிறிதொரு வகை எழுத்தும் கையாளப்பெற்றுள்ளன. அடிக்குறிப்புகள் சின்ன எழுத்தில் உள. இவ்வாறு பதிப்பு நிலை பாராட்டத் தகும் வகையில் அமைந்துள்ளது.

2. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—சேனாவரையம்**; மே. 1938 **திருமகள் அழுத்தகம்; சுன்னாகம்**; xxxi+சஉஅ (428)+66+; lvi=576

தொல்—சொல்—சேனாவரையம்—உரைவிளக்கக் குறிப்புகளுடன் 1938இல் வெளிவந்துள்ளது. 1868இல் இரு சேனாவரையர் உரைப்பதிப்புகளும் 1923இல் கழகப் பதிப்பு மூன்றும் இதற்கு முன் வந்துள்ளமையால் தெளிவாகப்பதிப்பிக்கும் வாய்ப்புள்ளது. சி. வை. தா. 1868இல் வெளியிட்டுள்ள பதிப்பைத் தழுவியே இப்பதிப்பு அமைந்துள்ளதென முகவுரையில் குறிப்பிடுகிறார். 'எல்லே இலக்கம்' என்ற இடைச்சொல்லியல் 21ஆம் நூற்பாவிற்கு மட்டும் நூற்பா பாடவேறுபாடு குறித்துள்ளார். உரைப்பாட வேறுபாடுகள் சிலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். உரை விளக்கக் குறிப்பின் முகவுரை, சிறப்புப் பாயிரம், தொல்காப்பியத்தின் றொன்மை, பிழை திருத்தம் இவை முன் பகுதியில் உள்ளன• சூத்திர அகராதி, உதாரண அகராதி, விஷய அகராதி, அரும்பத விளக்க முதலியன, விளங்காமேற்கோளில் விளங்கியன இவை பின் பகுதியில் தரப்பெற்றுள்ளன. அநுபந்தமாக இவர் தொல்—சொல் பற்றிச் செந்தமிழில் எழுதி வெளிவந்த 1. தொல்காப்பியச் சூத்திரப் பொருளாராய்ச்சி, 2. பிறிது பிறிதேற்றல் 3. ஆறனுருபு பிறிதுரு பேற்றல் 4. இரு பெயரொட்டாகு பெயரும் அன்மொழித் தொகையும் 5. தொகைநிலை ஆகிய ஐந்து கட்டுரைகளும் இணைக்கப் பெற்றுள்ளன. இவ்வெளியீட்டிற்குப் பொருளுதவிய தமிழபிமானிகள் பெயர்ப் பட்டியல் பண விவரத்துடன் இறுதியில் தரப்பெற்றுள்ளது.

3. **தொல்காப்பியம்—பொருள் (பின்னான்கு இயல்கள்) பேராசிரியம்**; 1943; **திருமகள் அழுத்தகம்; சுன்னாகம்; பக்.** xxvi+15+எகூo (760)+32=831

தொல்—பொருள்—பேராசிரியம்—மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கு இயல்களையும் உரை விளக்கக் குறிப்புகளோடு 1943இல் வெளியிட்டுள்ளார். இதற்கு உ. வே. சாமிநாதையர், பேராசிரியர் உரைச் செய்யுளியல் சுவடியையும், ஏனைய இயல்களுக்குரிய கையெழுந்துப் படியையும் உதவியுள்ளார் (பக்-viii-முகவுரை). மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு வந்து அங்குள்ள படிகளையும் பார்த்துள்ளார். இலங்கையின் க. பொ. இரத்தினம் சுவடியையும் பயன் கொண்டுள்ளார். இப்பதிப்பிற்குப் பல சுவடிகளைப் பார்த்துள்ளமை அவர் முகவுரையிலிருந்து தெளி

வாகத் தெரிகிறது. உரையாசிரியர் வரலாற்றில் பேராசிரியர் பெயரில் தமிழகத்தில் நால்வர் இருந்திருக்க வேண்டுமென உரைக் கின்றார். மெய்ப்பாட்டியலுக்கும், உவமவியலுக்கும் சுருக்கம் தருகின்றார். இயல் உரைப் பின்பகுதியில் மெய்ப்பாட்டியலுக்கும், உவமவியலுக்கும் உதாரணச் செய்யுளுரை தருகின்றார். விரிவு கருதிச் செய்யுளியலுக்கும் மரபியலுக்கும் இப்பகுதிகள் தரப்பெற வில்லை என முகவுரையில் குறிக்கின்றார்.

நூற்பா, பாடவேறுபாடுகளை 269, 312; 421; 426; 444; 445; 474; 489; 553; 587; மேற்படி நூற்பாக்களில் குறிக்கின்றார்.

உரைப்பாட வேறுபாடுகளைப்பல இடங்களில் சுட்டுகின்றார்— பக். 109; 159;

அடிக்குறிப்பில் உரைவிளக்கக் குறிப்பு மிகவும் விரிவாகவும், விளக்கமாகவும் தந்துள்ளார். செய்யுளியலுக்கு இப்பகுதி மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

பேராசிரியர் உரையைப் பதிப்பித்தாலும் அப்பகுதிகளுக்கு இளம்பூரணர் உரை சிறப்பாகவும், பொருத்தமாகவும் இருந்தால் அதைக் குறிப்பிடுகின்றார்—பக். 608, 610, 705;

''நண்டுந் தும்பியு நான்கறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே—3-9-31 இதில் 'நண்டு' என்பதை இளம்பூரணரும் பேராசிரியரும் பாடமாகக் கொண் டுள்ளனர். ''வண்டுந்தும்பியும் என்று பாடமிருந்திருக்கலாம் போலும். நன்னூலார் அவ்வாறு கொள்வர். நச்சினார்க்கினியரும் அவ்வாறு கொண்டனரென்பது பெரும்பாண். 183ஆம் அடியுரை யாலறியலாம்'' என எழுதுகிறார். இவருடைய தொல்காப்பியப் பயிற்சி மிகத் தெளிவாக இதன் மூலம் தெரிகிறது. இதற்குத் துணையாகத் தொல்காப்பிய மூலச்சுவடி எண் 73இல் 'வண்டு' என்பதே பாடமாக உள்ளது குறிப்பிடத்தக்கது.

''ஊரும் பெயரு முடைத் தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தி யவையவை பெறுமே''—3-9-74

என்ற நூற்பாவில், ''பெறும் என்பது உரையிற் கண்டபடி 'பெறுப' என்றிருத்தல் வேண்டும். இளம்பூரணரும் 'பெறும்' என்றே பாடங் கோடலின் இது ஆராயத்தக்கது'' என எழுதுகிறார். இவர் எண்ணத்திற்குத்தக மூலச்சுவடி எண் 115இல் 'பெறுப' என்பதே பாடமாக உள்ளது.

இவரது ஊகங்கள் சரியானவை என்பதைச் சுவடிகள் மெய்ப் பிக்கின்றன.

வழக்கம்போல் முகவுரை, உரையாசிரியர் வரலாறு, சிறப்புப் பாயிரம், பிழை திருத்தம் முன்பகுதியிலும், சூத்திர முதற் குறிப்ப கராதி, உதாரண அகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி பின் பகுதியிலும் தந்துள்ளார்.

இப்பதிப்பு மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

**4. தொல்காப்பியம்—பொருள் (முதலைந்து இயல்கள்) நச்சினார்க் கினியம்;** 1948; **திருமகள் அழுத்தகம்; சுன்னாகம்; பக்.** xxviii+எ௫௯ (759)+106=893

தொல்—பொருள்—முதல் ஐந்தியல்களாகிய அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் இவற்றுக்கு உரைவிளக்கக் குறிப்புகளோடு இவர் பதிப்பு 1948இல் வெளிவந் துள்ளது. இதற்கும் மதுரைத் தமிழ்ச்சங்க ஏட்டுச்சுவடிகளையும் இன்னும் கிடைத்த சுவடிகளையும் பார்த்துள்ளார் என்பது அவர் முகவுரையிலிருந்து தெரிகின்றது. இதில் இரண்டு பாடவேறுபாடு களைக் குறித்துள்ளார். நூற்பா எண்கள்—23; 87.

உரையாசிரியர் பாடவேறுபாடுகளைக் குறிப்பதும் உண்டு— நச்சர் 'வைகுறு'—நூற்பா—8 எனப்பாடங்கொண்டு" வைகறை எனவுங் கூறுப. அதுவும் பாடம்" என எழுதுகிறார்.

இப்பதிப்பிலும் நச்சினார்க்கினியர் உரையைப் பதிப்பித்தாலும் இளம்பூரணர் உரை சிறப்பானது; பொருத்தமானது என்பதைப் பக். 83; 126; 288; 340; 544; ஆகிய இடங்களில் சுட்டுகின்றார்.

வழக்கம்போல் அடிக்குறிப்பில் தெளிவான விளக்கங்களைத் தந்துள்ளார்.

அணிந்துரை, முகவுரை, சிறப்புப்பாயிரம், பிழைதிருத்தம் ஆகி யன முன் பகுதியிலும்; அகத்திணையியலுக்கு உதாரணச் செய்யுட் குறிப்புரை, உதாரணச் செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி, சூத்திர முதற்குறிப்பகராதி, இவற்றோடு அநுபந்தமாகச் செந்தமிழில் வந்துள்ள, அக்காலத்தில் பலவிவாதங் களுக்குரியதாயிருந்த 'சிறுபொழுதாராய்ச்சி' என்ற கட்டுரையையும் பின் பகுதியில் தந்துள்ளார்.

நூல் அச்சாகிக் கொண்டிருக்கும்போதும் தெளிவுபடாத இடங்களைத் தெளிவுபடுத்த முயன்றிருக்கிறார் என்பதை "இன்ன

நூல் என்று இடங்குறிக்காது விடப்பட்ட சில உதாரணச் செய்யுள் களின் இடம் என இறுதிப் பக்கத்தில் தந்துள்ளமை தெரிவிக் கின்றது.

பொது நிலையில் இவர் பதிப்புகள் அனைத்தும் நன்முயற்சி யோடும், கடின உழைப்போடும் செய்யப்பட்டுள்ளன என்பது தெரிகின்றது. பொருளதிகாரப் பதிப்புகள் உலக இரண்டாம் போர் நிகழ்ந்த காலத்தில் வெளியிடப்பட்டதால் தாள் கிடைப்ப தன் அருமையையும் முன்னுரையில் சுட்டியுள்ளார்.

இவை அனைத்தையும் வெளியிட்டுதவிய ஈழகேசரி அதிபர் நா. பொன்னையா பாராட்டுக்குரியவர்.

எல்லாப் பதிப்புகளுக்கும் பெரும்புலவர் சி. கணபதிப்பிள்ளை துணை செய்தது குறிப்பிட்டுக் கவனித்தற்குரியது.

எல்லா முகவுரைகளிலும் தம் நேர்மையையும், உண்மையையும் குறிப்பிட்டுள்ளது பாராட்டுக்குரியது.

''யாமெழுதிய இக்குறிப்புக்களெல்லாந் திருத்தமுடையன வென்று எம்மாற் சொல்லுதல் கூடாது; ஏனெனில் முற்கணத்து எமக்குச் சரியாகத் தோன்றியதே பிற்கணத்துப் பிழையாகத் தோன்றுகின்றதாகலின். ஆதலால் இவற்றுள் வரும் பிழையைப் பேரறிஞர் திருத்திக் கொள்வார்களாக. அன்றியும் இவற்றுள் தாங்கண்ட பிழைகளை நேரே எமக்கு அறிவிப்பின் அவற்றை நோக்கி உண்மையென்று கண்டவற்றை அவர்கள் பெயருடனே இரண்டாவது பதிப்பில் வெளியிடுவோம். அதற்கு ஒருபோதும் நாண மாட்டேம். ஏனெனில் சிற்றறிவையே இயற்கையாக வுடைய மக்களுள் யாமும் ஒருவேமாதலின்''. (பக் xiv—முகவுரை தொல்—எழுத்து—நச்சினார்க்கினியம்—1937)

## தி. சு. பாலசுந்தரம்பிள்ளை (இளவழகனார்)

**இன்ப ஒழுக்கம் அல்லது அகத்திணையியல் விளக்கம்; ஏப். 1938; தமிழ் நெறி விளக்கப் பதிப்பகம்; செவ்வாய்ப்பேட்டை. பக். 26+238=264**

ஏப்ரல் 1938-இல் இன்பவொழுக்கம் அல்லது தொல்காப்பியம்-அகத்திணையியல் விளக்கம் என்ற கையடக்கப்பதிப்பு இளவழ கனார் பதிப்பாசிரியராக வெளிவந்துள்ளது.

கா. சுப்பிரமணியபிள்ளை அணிந்துரை தந்துள்ளார். பொரு ளதிகாரம் ஒவ்வொரு இயலுக்கு ஒரு நூலாகவும் பொதுவாக ஒரு

நூலும் ஆகப் பத்து நூல்கள் எழுத வேண்டுமென்பது நோக்கமாக இருந்ததை ஏற்புரையில் (பக்-21-இல்) இளவழகனார் குறித்துள்ளார்.

அகத்திணையியல் நூற்பாக்கள், அகத்திணையியல் உரை, அகத்திணையியல் கருத்துகள், உயர்ந்த இன்ப வாழ்க்கை, அகத்திணையியலால் அறியப்படுகின்ற தமிழ்நாட்டுக் குறிப்புகளிற் சில, அகத்திணையியல் அகராதி-இந்நிலையில் நூல் அமைந்துள்ளது. அகத்திணையியலுக்குச் சொல்லகராதி தந்துள்ளது பாராட்டத் தக்கது. இவர்தான் 1943-இல் கழகத்தின் வழி, தொல்காப்பியம்-மூலம்-அடிக்குறிப்புகளுடன் வெளியிட்டவர். நூற்பாக்களின் பாட வேறுபாடுகள் தந்துள்ளார். அழகான, தகுதி வாய்ந்த கையடக்கப் பதிப்பு.

## ச. சோமசுந்தரபாரதியார்

**1. தொல்காப்பியர்—பொருட்படலம்—அகத்திணையியல் புத்துரையுடன்; 1942, பசுமலை; பக். viii+218+v=231.**

தொல்—பொருள்—அகத்திணையியலுக்குப் புதிய உரையை 1942-இல் பேராசிரியர், இளசைகிழார் ச. சோ. பாரதியார் வெளியிட்டார். முந்தைய பழைய உரையாசிரியராகிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர், தமிழ் மரபு நிலையில் சில இடங்களுக்கு உரையெழுதவில்லை என்பது இவர் கருத்து. அதனால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்த காலத்தில் முதுகலை மாணாக்கர்க்குப் பொருட்படலம் அகத்திணையியல் பாடம் சொன்னபோது தாம் கூறிய புதுக்கருத்துகளை அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சி சஞ்சிகையில் வெளியிட்டார். பின்பு நூல் வடிவில் 1942-இல் வெளிவந்தது.

நூற்பாக்கள்-இளம்-58-; நச்-55-; பாரதி-54;

இளம் 6, 7—ஐ—6 ஆகவும்
,, 9, 10—ஐ—8 ஆகவும்
,, 35, 36—ஐ—33 ஆகவும் நச்சர் அமைத்ததால் மூன்று. நூற்பாக்கள் குறைவு.

நச்சர் 30, 31—ஐ—30 ஆக அமைந்துள்ளார் பாரதியார் அதனால் பாரதியாருக்கு 54 நூற்பாக்கள்.

பாரதியார் நூற்பா அமைப்பிலும், பாடவேறுபாடுகளிலும் பெரும்பான்மையும் நச்சரைப் பின்பற்றுகின்றார்.

'மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே'

என்ற 29-ஆம் சூத்திரத்தில் 'மேலோர்' என்பதற்கு

மேலோராகிய **தேவர்**—என்பது இளம்;
மேல் அதிகாரப்பட்டுநின்ற **வணிகர்**—என்பது நச்சர்;
மேலே வேந்தனென்றும் வேந்தனொடு சிவணிய
ஏனோரென்றும் மேவிய சிறப்பினேனோரென்றும்
குறிக்கப்பட்ட மேலோர்—பாரதியார்.

இங்குத் தமிழகத்தில் வாழ்ந்த நிலத்திற்குரிய அரசரும் அரசரைச் சார்ந்த மேன்மக்களையும் '**மேலோர்**' எனப் பாரதியார் குறிக்கின்றார்.

'நால்வர்' என்பது **நான்கு வருணத்தார்** என்பர் இளம்பூரணர்;

அரசர், அந்தணர், வணிகர், வேளாளர்—இவரைக் குறிக்கும்.

அரசர், அந்தணர் இருவகை வேளாளர் என்பர் நச்சர். ஈண்டு நால்வரென்பது முல்லை முதலாகக் கூறிய **நானில மக்களையே** குறிக்கும் என்பர் பாரதியார். அந்நானிலத்தும் அடியோர் முதலாய கீழோரும், வேந்தர், வேந்தரொடு சிவணிய ஏனாதி முதலிய மேலோரும் என்பது பாரதியார் கருத்து. இது பொருத்த முடைத்தாகத் தோன்றுகிறது. தொல்-1090-இல் குறிப்பிடப் பெறு கின்ற மேலோர், கீழோர் என்பது தமிழ் மக்களைக் குறிக்குமே தவிரப்பிறரைக் குறிக்க வாய்ப்பில்லை. அதனால் பாரதியார் விளக்கம் பொருந்துமெனத் தோன்றுகிறது.

இவ்வாறு பாரதியார் தம் புதிய உரையில் பல புதிய எண்ணங் களைத் தந்துள்ளார்.

பாரதியாரின் கருத்துப்படி 'தொல்காப்பியர்' என்பதே நூற் பெயர். 'தொல்காப்பியர்' எனும் அவர் தமிழ் நூற்பெயரையும் தொல்காப்பியமென வடநூற் றத்திதாந்த விதிப்படித் திரித்து வழங்கலாயினர்' என எழுதுகிறார். அதனால் அவர் புதிய உரை நூலுக்குத் தொல்காப்பியர் — பொருட்படலம் — அகத்திணை யியலும் புதிய உரையும் எனத் தருகின்றார்.

பொதுநிலையில் பாரதியார் கருத்து, பொருள், குறிப்பு என மூன்றாக வகுத்துக் கொண்டு விளக்கந் தருகிறார்.

" மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்—"

என்ற அகத்திணையியல் 53-ஆம் சூத்திரத்திற்கு விளக்கந்தரும் போது தம் எண்ணங்களுக்குத் தகச் சிலம்பிலிருந்து சான்றுகள் காட்டி விளக்குகின்றார். பல நிலைகளில் பாரதியார் உரை புதிய உரையாகவே அமைந்துள்ளது.

தமிழ் மரபின் அடிப்படையில் தொல்காப்பியரை நோக்க வேண்டும் என்ற எண்ணம் இது போன்ற புதிய உரைகளால் நமக்கும் தோன்றும் என்பது தெளிவு.

தொல்காப்பியர் ‘மேலோர்’ என்ற சொல்லை இரண்டிடங்களில்தான் பயன் கொள்கின்றார் (975, 1090). இவ்விரண்டிடங்களிலும் அவர் கருதுவது தமிழ் மேலோரைத்தான் என்று சிந்திக்க வைக்கின்றது பாரதியார் உரை. நூற்பா முதற் குறிப்பகராதி, சொல்லகராதி போன்ற எந்தப் பின்னிணைப்புமில்லை. பிழை திருத்தம் ஐந்து பக்கங்கள். தனக்கு மதுரையில் அச்சுப்பிழை சரியாகத் திருத்துவோர் கிடைக்காததால் ‘மலர் கனிகள் மணவாமல் இலை மலிந்த சருக்கமயமாயினது’ எனத் தம் உரைப் பாயிரத்தில் குறிப்பிடுகின்றார்.

**2. தொல்காப்பியம்—பொருட்படலம்—புறத்திணையியல், புத்துரையுடன்; 1942; பசுமலை; பக்.** vii+239=246.

ச. சோ. பாரதியார் புறத்திணையியலுக்கான புத்துரையை முதற்கண் நவம்பர் 1942-இல் வெளியிட்டார். அதன்பின் இரண்டாம் பதிப்பு சூன் 1965-இலும் திருத்திய மூன்றாம் பதிப்பு மே 1972-இலும் வெளிவந்துள்ளன. நாவலரின் மறைவின் பின் இரண்டாம் மூன்றாம் பதிப்புகள் வந்துள்ளன. நாவலர் சோமசுந்தர பாரதியார் அறப்பணிக் குழுவினர் வெளியிட்டுள்ளனர். மூன்றாம் பதிப்பு திருத்தம் பெற்றது யாரால் என்பது குறிப்பிடப்படவில்லை. புறத்திணையியலில் இளம்பூரணர் 30 நூற்பாக்கள் தர, நச்சர் 36 தந்துள்ளார், இவர் தருபவை 35.

மூன்றாம் பதிப்பில் ச. சாம்பசிவன் ‘நாவலர் பாரதியார்’ என அவரின் சுருக்கமான வரலாற்றை எழுதியுள்ளார். நா. இராமையா பிள்ளை, புறத்திணையியற் புத்துரையை அறிமுகம் செய்துள்ளார். புறத்திணையியலுக்கு நீண்டதொரு முன்னுரை வழங்கி நூற்பாக்களுக்கு உரை விளக்கம் செய்துள்ளார்.

முன்னுரையில் புறத்திணைகள் பன்னிரண்டாக விரியாது ஏழே என்று வலியுறுத்தியுள்ளார் (பக். 29-34). அகப்பொருள், புறப்

பொருளை மேலும் விரித்து அகப்புறம் புறப்புறம் எனப் பகுத்துள்ள பிற்கால நெறிமுறையையும் (பக். 35-38) கண்டித்து அவை பொருந்தாமையைப் புலப்படுத்துகிறார்.

நூற்பா 4இல் மறங்கடைக் காட்டிய துடிநிலை என்பதில் துடிநிலை என்பது 'கொடிநிலை' என்றிருக்க வேண்டுமெனக் கருதுகிறார். "அக்கொடி நிலைப் பாடம் நாளடைவில் ஏடெழுதுவோரால் குடிநிலையாக மாறி இளம்பூரணர் கண்டிருத்தல் வேண்டும். அப்பாடம் சிறவாமையால் அதனைப் பொருள் பொருந்தப் போர்க்குரிய துடிநிலையாக்கி நச்சினார்க்கினியர் பாடங் கொண்டதாகக் கருதற்கு இடனுளது. அன்றியும் 'துடி' சூறை சுட்டும் பாலை நிலப் பறையே யாதலானும், எல்லா நிலத்துக்கும் பொதுவான போர்ப் பெருமுரசுக்குப் பெயரன்றாதலானும், இங்குத் துடிநிலைப் பாடத்திலும் கொடிநிலைப் பாடமே சிறப்புடைத்தாதல் மலையிலக்காம். ஆகவே, இளம்பூரணரின் 'குடிநிலை', 'நச்சினார்க்கினியரின் 'துடிநிலை' எனுமிரு பாடங்களையும் கொள்ளாது இதில் 'கொடிநிலையே' பாடமாகக் கொள்ளின், பின் கடவுள் வாழ்த்தொடு கண்ணியவரும் 'எனத் தொகுத்த மூன்றனுள் மற்றவற்றோடு கொடிநிலையைக் கூட்டிக் கூறிய பெற்றி இனிது விளங்கும்.

போர்க்கு முன் கொடியெடுக்கும் மரபுண்மையை,

'புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரை கருதிப்
போகுங்காலைக்
கொள்ளுங் கொடியெடுத்து கொற்றவையும் கொடு
மரமுன் செல்லும் போலும்'

என்னும் சிலப்பதிகார வேட்டுவவரி அடிகளாலும் அறிக (பக். 35-36) என, கொண்டு கூட்டிப் பொருளுரைத்துச் சான்று காட்டி நிறுவும் திறம் நினைக்கத்தக்கது. பிற நூல்களைப் போன்றே இதிலும் தம் தமிழ்ப்பற்றை ஆழமாக உணர்த்தியுள்ளார்.

சூத்திரமுதற் குறிப்பகராதியும், மேற்கோள் நூல்களின் அகராதியும் இறுதியில் உள்ளன. பிற்சேர்க்கையில் 1942இல் இப்புத்துரையை டாக்டர் இராசா சர்அண்ணாமலைச் செட்டியாருக்குக் கையுறையாய் உரித்தாக்கிய பாராட்டு வாழ்த்துப்பா அமைந்துள்ளது.

**3. தொல்காப்பியர்—பொருட்படலம்—மெய்ப்பாட்டியலும் புத்துரையும்**; 1942; **பக். 8**+(219—324) 105+iv+xxi=138.

தொல்காப்பியர்—பொருட்படலம்—மெய்ப்பாட்டியலும் புதிய உரையும்—நூலை 1942-இல் ச. சோ. பாரதியார் வெளியிட்டார். அகத்திணையியல், புறத்திணையியல் போல் தாம் காணும் புதிய எண்ணங்களைத் தெளிவுபடுத்துகின்றார். மேற்கோள்பாடல்களாக முந்தைய உரையாசிரியர் கொடுத்தவற்றைத் தராது தாமே சங்க இலக்கியப் பாடல்களைத் தெரிந்தெடுத்துத் தரும் பாங்குப் பாராட்டற்குரியது. சான்று: நூற்பா 24-க்கு எடுத்துத் தரும் மேற்கோள் சான்றுகள், பக்-308 முதல்-316 வரை.

அவருடைய மாணாக்கரின் விருப்பத்திற்கிணங்க பின்பகுதியில் 'தொல்காப்பியர்—பொருட்படலம்—உள்ளுறைகள்'—21 பக்கங்கள் தந்துள்ளார்.

## வே. வேங்கடராஜுலு ரெட்டியார்

**தொல்காப்பியம் எழுத்ததிகார ஆராய்ச்சி; 1944; சென்னைப் பல்கலைக்கழகம்; சென்னை; பக்** VIII + V + 210 = 223.

1944-இல் சென்னைப் பல்கலைக்கழகம்—தொல்காப்பியம் எழுத்ததிகார ஆராய்ச்சி என்ற வே. வேங்கடராஜுலுரெட்டியார் நூலை வெளியிட்டுள்ளது. ரெட்டியாருக்குத் தாய்மொழி தெலுங்கு. திராவிட மொழிகள் சிறிது அளவு தெரியும். அதனால் கன்னட மொழியின்—கர்ணாடக பாஷாபூஷணம், சப்தமணிதர்ப்பணம், சப்தாநுசாஸனம், தெலுங்கு மொழியில்—ஆந்திரசப்தசிந்தாமணி, நன்னயாதர்வணம், பாலவ்யாகரணம், மலையாளத்தில் கேரள பாணினீயம், லீலா திலகம் ஆகிய நூல்களையும் துணைக்கொண்டு, மேற்கண்ட நூல்களோடு ஒப்பிட்டு எழுத்ததிகாரக் கருத்துகள் பலவற்றைக் கூறுகிறார். அவர் நோக்கம் தொல்காப்பிய மூலத்தை உணர வேண்டுமென்பது. அதனால் பாடவேறுபாடுகள் சிலவற்றையும் தம் நூலுள் குறிப்பிடுகின்றார். (பக்-163-164) தொல்காப்பியச் சுவடிகளையும் பார்த்துள்ளார் (பக்-94). தொல்காப்பியத்தில் 'பு'—'வு' இவற்றில் எது முந்திய வடிவமாக இருக்கும் என்பதைப் பலகோணங்களில் கண்டு 'பு' என்பதே முந்தையவடிவம் எனத் தெளிவு படுத்துகின்றார் (பக். 70).

எழுத்ததிகார நூற்பாக்கள் 483-இல்-206க்கே விளக்கங்கள் தந்துள்ளார். முழுவதும் எழுதியிருந்தால் இன்னும் சிறப்பாக இருக்கும்.

''சூத்திரங்களின் நேர் பொருளை அறிவதும், கன்னடம் முதலிய திராவிட மொழியின் இலக்கணங்கட்கும் தொல்காப்பிய

விதிக்கும் உள்ள ஒற்றுமைகளை ஆராய்வதும், சில சொற்களின் தொன்னிலையையும் வரலாற்றையும் கண்டறிவதும் நோக்கமாகக் கொண்டு (முன்னுரை iv) இவ்வெழுத்ததிகார ஆராய்ச்சியை எழுதியதாகக் கூறுகிறார். மிகவும் பயனுடைய நூல்.

## ஈ. எஸ் வரதராஜ ஐயர்

1. Tolkappiyam Porulatikaram Vol. 1, Part 1 (Ahattinai Iyal and Kalaviyal); Ap. 1948; Annamalai University; Annamalai Nagar; p. xiv+206=220.
2. Tolkappiyam—Porulatikaram Vol. I, Part II (Karpiyal and Poruliyal) 1948; Annamalai University; Annamalai nagar; p. 207–584=377.

ஏப்ரல் 1948இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாகத் தொல்காப்பியம்—பொருளதிகாரம்—அகத்திணையியல், களவியல் மொழிபெயர்ப்பும் விளக்கமும்; கற்பியல், பொருளியல் மொழிபெயர்ப்பும் விளக்கமும் என இரு தொகுதிகளாக வெளிவந்துள்ளன. ஈ. எஸ். வரதராஜ அய்யர் இதனைச் செய்துள்ளார். நூற்பா, எழுத்துப்பெயர்ப்பு, தமிழில் சிறுவிளக்கம், ஆங்கிலத்தில் விளக்கங்கள் போன்றன அமைந்துள்ளன. மேற்கோள் பாடல்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். நூற்பா பாடவேறுபாடுகள் போன்றவை எதுவும் குறிப்பிட்டுள்ளதாகத் தோன்றவில்லை. இறுதியில் சூத்திரமுதற் குறிப்பகராதியும், Tolkappiyam porul—words and subject index, என ஆங்கிலத்திலும் தரப் பெற்றுள்ளன.

இரு தொகுதிகளில் அமைந்தாலும் பக்க எண்கள் தொடர்ந்தே கொடுக்கப் பெற்றுள்ளன.

## மர்ரே. எஸ். ராஜம்

**தொல்காப்பியம்** (**மூலம்**); 1960; (**பதி**) **குழுவினர்**; **பக்.** viii+162=170.

1960இல் வெளிவந்த மர்ரே. எஸ். ராஜம் வெளியிட்ட மூலப் பதிப்பு ஒரு குழுவால் செய்யப் பெற்றது. அதனால் செம்மையும் தெளிவும் உண்டு. மர்ரே ராஜம் தமிழ் இலக்கியங்கள், இலக்கணங்கள் அனைத்தையும் பொதுமக்கள் கற்பதற்காகக் குறைந்த விலையில் தெளிவாகச் சந்தி பிரித்து எல்லாப் பழந்தமிழ் நூல்களையும் பதிப்பித்தார். அவ்வாறு பதிப்பிக்கப் பெற்றவற்றுள் தொல்காப்பிய மூலமும் ஒன்று.

அறிஞர் குழுவால் அமைந்த பதிப்பாகையால் ஆய்வுக் கோணங்கள் பல காணப்பெறுகின்றன. (1) நூல் முழுவதும் தெளிவாகச் சந்தி பிரித்துப் பதிப்பித்துள்ளமை. (2) பொருளடைவு எல்லா இயல்களுக்கும் கொடுத்துள்ளமை. (அதை நூலின் பின் பகுதியில் கொடுத்துள்ளனர். முன் பகுதியில் கொடுத்திருக்கலாம்.) (3) பாடவேறுபாடுகளைப் பட்டியலிட்டுத் தந்துள்ளமை. (இம் முயற்சியை யாரும் இதுவரை செய்ததில்லை. இது ஆய்வாளர்க்கு மிகப் பயனாக அமையும்.) (4) பதிப்புரை உள்ளது. (5) சூத்திர முதற் குறிப்பகராதி ஒவ்வொரு அதிகாரத்திற்கும் தனித் தனியாகப் பின்பகுதியில் கொடுக்கப் பெற்றுள்ளது. (6) நூற்பா எண்ணிக்கைப் பாடல்கள் தரப்பெற்றுள்ளன.

நூற்பா எண்ணிக்கை 1–1602 எனக் கொடுத்திருந்தால் தொல்காப்பிய முழுமை உணர்வு கிடைத்திருக்கும். 483+463+656=1602 நூற்பாக்கள் உள. ஒவ்வொரு இயலுக்கும் எண்ணிக்கை தனித்தனியே கொடுத்துள்ளனர். அதிகார முழுமை கூட இல்லை. பாடவேறுபாடுகள் அந்தந்தப் பக்கத்தில் தந்திருந்தால் இன்னும் பயனாக இருக்கும்.

நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் என்ற நிறுவனம் இப்பதிப்பை நகலச்சு முறையில் 1981இல் வெளியிட்டுள்ளது.

## புலியூர்கேசிகன்

**தொல்காப்பியம் (தெளிவுரை); 1961; அருணா பப்ளிகேஷன்ஸ்; சென்னை; பக். 433.**

திருக்குறளுக்கு எளிய முறையில் தெளிவுரை வந்தது போன்று தொல்காப்பியத்திற்கும் தெளிவுரை வரவேண்டுமென்ற உணர்வு ஏற்பட்டதால் புலியூர்கேசிகன் 1961இல் அருணா பப்ளிகேஷன்ஸ் வழித் தம் தெளிவுரையை வெளியிட்டார். பொதுமக்களும், தமிழ் சிறிது கற்றவரும், மாணாக்கரும் எளிதில் கற்றுத் தொல் காப்பியத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமென்பது நோக்கம். மக்கள் பதிப்பு—தமிழ்ச் செல்வம் என்ற முறையில் இப்பதிப்பு வெளியிடப் பெற்றுள்ளது. பதிப்புரை, தொல்காப்பியம் பற்றிய முன்னுரை—நூல்—இறுதியில் ஒவ்வொரு அதிகாரத்திற்கும் நூற்பா முதற்குறிப்பு அகராதி இவை உள்ளன. கற்போர் எளிதாகப் புரிந்து கொள்வதற்காக ஒவ்வொரு இயலும் சில உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது. சான்றாகக் குற்றியலுகரப் புணரியல் என்ற

இயலில் 1. குற்றியலுகரத்தின் இயல்பு—4 நூற்பாக்கள். 2. குற்றியலிகரம்—1 நூற்பா. 3. குற்றுகரப் பொதுப்புணர்ச்சி—9 நூற்பாக்கள். 4. குற்றுகரச் சிறப்புப்புணர்ச்சி—13 நூற்பாக்கள். 5. குற்றுகர எண்ணுப்புணர்ச்சி—47 நூற்பாக்கள் 6. அதிகாரப் புறனடை—3 நூற்பாக்கள் இவ்வாறு அமைத்துள்ளார். இவ்வாறு எழுத்து, சொல், இரண்டு அதிகாரங்களுக்கும் உள்ளன. பொருளதிகாரத்தில் இத்தகைய உட்பகுப்பு இல்லை. எல்லா நூற்பாக்களுக்கும் நுவல்பொருள் தந்துள்ளார். எந்தவிதப் பாட வேறுபாடுகளோ — அடிக்குறிப்புகளோ இல்லை—ஆய்வு நோக்கம் இல்லையாதலால். முதற்பதிப்பில் தொடர் எண்கள் 1—1604 வரை தரப்பெற்றுள்ளன. பின்பதிப்புகளில் இம்முறை கையாளப் படவில்லை போலும். 1961—முதல் 1986 வரை 25 ஆண்டுகளில் ஏழு பதிப்புகள் வந்துள்ளன. ஏழாம்பதிப்பில்—ஒவ்வொரு இயலுக்கும் நூற்பா எண்கள் இடப்பக்கத்திலும்—ஒவ்வொரு அதிகாரத்திற்கும் நூற்பா எண்கள் வலப்பக்கத்திலும் தரப்பெற்றுள்ளன. தொல்காப்பிய முழுமைப் பார்வை குறைந்துள்ளது. ஒவ்வொரு அதிகாரத்திற்கும் அவ்வதிகார இறுதியில் நூற்பா முதற் குறிப்பகராதி உள்ளது. வணிக நோக்கில் ஒவ்வொரு அதிகாரத்தையும் தனித்தனியாகவும் விற்பனை செய்ய முடியும். தெளிவுரை நோக்க அமைப்பில் சிறந்த பதிப்பாக அமைந்துள்ளது. 1986—மறுபதிப்பு—469 பக்கங்கள்.

## வெள்ளைவாரணனார்

**1. தொல்காப்பியம் — நன்னூல் — எழுத்ததிகாரம்; 1962; அண்ணாமலைப் பல்கலைக்கழகம்; அண்ணாமலை நகர்; பக். 344.**

தொல்காப்பியம்—நன்னூல்—எழுத்ததிகாரம் பதிப்பை 1962 இல் க. வெள்ளைவாரணனார் அண்ணாமலைப் பல்கலைக் கழக வழி வெளியிட்டுள்ளார். பொது நிலையில் தொல்காப்பியம் நன்னூலுக்குரிய ஒப்புமை, வேற்றுமைகள் உணர்த்தப் பெற்றுள்ளன. தொல்காப்பியத்திற்கோ, நன்னூலுக்கோ பாட வேறுபாடுகள் எதுவும் குறிக்கப் பெறவில்லை. அடிக்குறிப்புகள் இல்லை. முன்னுரை—சிறப்புப்பாயிரங்கள்—நூல்—சூத்திர முதற் குறிப்பகராதி என்ற நிலையில் நூல் அமைந்துள்ளது.

**2. தொல்காப்பியம்—நன்னூல்—சொல்லதிகாரம்; 1971; வெ. பொற்றடங்கண்ணி, சிதம்பரம்; பக். 4+459=463.**

செப்டம்பர் 1971இல், தொல்காப்பியம் — நன்னூல் — சொல்லதிகாரம் பதிப்பை இவர் தம் பதிப்பாக வெளியிட்டார். மு. வ. அணிந்துரை, ஆசிரியர் பதிப்புரை—நூல்—தொல்—நன்னூல்—சூத்திரமுதற்குறிப்பகராதி இவற்றுடன் நூல் அமைந்துள்ளது. பொதுநிலையில் சொல்லிலக்கண ஒற்றுமை, வேற்றுமைகளைக் குறித்துள்ளார். எல்லே இலக்கம் (பக்-312) என்ற நூற்பாவிற்கு அரசஞ்சண்முகனார் 'எல்லே இரக்கம்' எனப் பாடங் கொண்டுள்ளதைச் சுட்டுகின்றார்.

## சரசுவதி மகால்

1. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—நச்சினார்க்கினியம்**; 1962; **(பதி) இராம. கோவிந்தசாமிப் பிள்ளை; பக். 16+472+267=755.**

தஞ்சை சரசுவதி மகாலில் தமிழ்ச் சுவடிகள் இருக்கின்றன. தொல்காப்பியச் சுவடிகளும் உள. அவற்றை வெளியிட வேண்டுமென்ற எண்ணம் அறுபதுகளில் ஏற்பட்டு, 1962இல் தொல்—சொல்—நச்சினார்க்கினியத்தை வெளியிட்டுள்ளனர். பல சுவடிகளைக் கொண்டு ஆய்ந்துப் பதிப்பித்தவர் இராம. கோவிந்தசாமிப் பிள்ளை என முதற் பக்கத்தில் உள்ளது.

பதிப்புரையிலோ, முகவுரையிலோ, எத்தனை சுவடிகள், என்னென்ன எண் சுவடிகள் போன்ற குறிப்புகள் இல்லை. முன் பகுதியில் முன்னுரை, பதிப்புரை, முகவுரை, நூலாசிரியர் வரலாற்றுக் குறிப்பு போன்றனவும், பின் பகுதியில் சூத்திர முதற்குறிப்பகராதி, பொருளகராதி, அருஞ்சொன் முதலியவற்றினகராதி, மேற்கோளகராதி, நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி, பிழைதிருத்தம் முதலியனவும் உள்ளன.

பாடவேறுபாடு குறிக்கப் பெற்றுள்ள நூற்பாக்கள்—1, 7, 33, 57, 73, 162, 239, 274, 297, 298, 425. நூற்பா நுவலும் செய்தி கொடுத்துள்ளார். நூற்பாவும் எடுத்துக் காட்டுகளும் ஒரே வடிவ அச்சில் முன்பகுதியில் அச்சிடப்பட்டுள்ளன, நூற்பா, 7, 57 இரண்டிலும் 'உளப்பட' என்ற பாடத்தை 'உட்பட' என்றாக்குகிறார். காரணம் தரவில்லை. இவர் பதிப்பில் மட்டும் இவ்வாறுள்ளது. நூற்பா எண்கள், 3 முதல் 36 வரை இடப்பக்கத்தில் தரப்படவில்லை. பின்பு இடப்பக்கத்தில் தருகிறார். ஒருமை இல்லை (Uniformity). பின்பகுதியிலுள்ள அகராதிகள் நன்முறையில் தயாரிக்கப் பெற்றுள்ளன. பிழைதிருத்தம் 58 கொடுத்

துள்ளார். சுமார் 100 பிழைகளுக்கு மேலிருக்கலாம். அரசாங்கச் சார்பு நிறுவன வெளியீடுகள் இதுபோன்ற பிழைகளுடன்தான் வரும் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கிறது.

**2, தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்**; 1967; **(பதி) இராம. கோவிந்தசாமிப்பிள்ளை; பக்.** xvi + 530 = 546

1967இல் தொல்—எழுத்து—நச்சினார்க்கினியத்தைச் சரசுவதி மகால் வெளியிட்டுள்ளது. அதன் பதிப்பாசிரியர் இராம. கோவிந்த சாமிப்பிள்ளை. முன்னுரையில் சுவடி எண் M. 623, 626 (a) (b) ஆகிய இவை பயன்படுத்தப்பெற்றுள்ளதாக உள்ளது. பதிப்புரை யிலும் 623ஆம் எண்சுவடி பழுதில்லாத சுவடியாயிருந்தது என எழுதுகிறார். சுவடிகளைப் பார்த்து வெளியிட்டுள்ளனர் என்பது தெளிவாகிறது. முன்னுரை, பதிப்புரை, முகவுரை, நூலாசிரியர், உரையாசிரியர் வரலாற்றுக் குறிப்பு, நூல், நூற்பா முதற்குறிப்ப கராதி,எடுத்துக்காட்டு அகராதி, அருஞ்சொல் விளக்க அகராதி, நூற்பா நுவலும் பொருளகராதி மொழி முதல் இறுதிநிலை எழுத்துகள். பிழைதிருத்தம் இவை உள்ளன. பின்னிணைப்புகள் நச்சினார்க்கினியர் உரையைத் தெளிவாகப் புரிந்துகொள்வதற்குத் துணையாக அமையும்.

இதற்கு முன்பு எழுத்து—நச்சினார்க்கினியத்திற்கு ஐந்து பதிப்புகள் வந்துள்ளன. அவற்றைப் பார்த்து ஒப்பிட்டு வெளி யிட்டிருந்தால் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும். நூற்பா—4, 408-இரண்டிடங்களில் மட்டுமே பாடவேறுபாடுகள் குறித்துள் ளார். பிழைதிருத்தம் 4½ பக்கங்கள் தந்துள்ளார். அவை போகவும் பிழைகள் உள்ளன.

**3. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—ஆத்திரேயர் உரை**; 1989; **(பதி) வ. வேணுகோபாலன்; பக்.** 29 + xviii + 250 + iv = 301

தஞ்சை சரசுவதி மகால் நூலக வெளியீடாக 1989இல் தொல்— சொல்—ஆத்திரேயர் உரை என ஒன்று வெளிவந்துள்ளது. வ. வேணுகோபாலன் பதிப்பாசிரியராக உள்ளார். இப்பதிப்பாசிரி யருக்குத் தொல்காப்பியம், உரையாசிரியர் பற்றிய போதிய தெளிவு இருப்பதாகத் தோன்றவில்லை. பதிப்பாசிரியர் உரையில் "நச்சினார்க்கினியர் பொருளதிகாரத்திற்கு அகத்திணையியல் முதல் பொருளியல் இறுதியாக ஐந்தியல்களுக்கு உரை எழுதினார்" என 1989இல் எழுதுகிறார். 1917இல் தொல்—பொருள்—செய்யு ளியல்—நச்சினார்க்கினியம் வெளிவந்துள்ளது. 1965இல் கழகமும்

1985இல் தமிழ்ப்பல்கலைக் கழகமும் மறுபதிப்பாகப் பல தெளிவு களுடன் வெளியிட்டுள்ளன. இதனை இப்பதிப்பாசிரியர் அறிந்தா ரில்லை. அடுத்து பக். 16இல் இப்பதிப்புச் சுவடியில் ஆத்திரேய கோத்திரத்து என்றிருப்பது கொண்டும் தெய்வச்சிலையார் உரை (கரந்தைக் கவியரசு பதிப்பு) ஒப்புமைகொண்டும் இருவரும் ஒருவரே எனக் கருதுகின்றேன்'' என்று எழுதுகிறார்.

தெய்வச்சிலையார் உரையைக் கற்ற ஒருவன் சில இடங்களில் தன் எண்ணப்படி சொற்களைத் திருத்தியது போன்றே இவ்வாத்தி ரேயர் உரை என்று தோன்றுகிறது. 90 விழுக்காடு தெய்வச்சிலை யார் உரையே.

மிகவும் மோசமான தாளில், பழுதுபட்ட அச்சில், மிகுந்த பிழைகளையுடைய இது போன்ற தொல்காப்பியப் பதிப்பை அரசு தொடர்புடைய நிறுவனம் வெளியிட வேண்டுமா? என்ற கேள்வியே இப்பதிப்பைப் பார்த்தபோது தோன்றிற்று. 1989இல் இது போன்ற தொல்காப்பியப் பதிப்புகள் வருவது தமிழரின் தலை யெழுத்தாக அமைந்துவிட்டதே என நெஞ்சம் வருந்திற்று.

## வி. ஐ. சுப்பிரமணியன், ஆபிரகாம் அருளப்பன்

**தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—உரைக்கோவை (முதற் பாகம்—முதல் நான்கு இயல்கள்)**; 1963; பக். xvi + ௫ + 586 + 10 = 617

முதலில் தொல்காப்பியம் வெளிவந்தது 1847இல். 116 ஆண்டு களுக்குப்பின் 1963இல்—இவ்வுரையாசிரியரின் உரைகளை ஒரு சேரத் தொகுத்துப் பார்த்தால் ஏற்படும் அறிவிப்புப் பயன் கருதி அம்முயற்சியில் ஈடுபட்டனர் பேராசிரியர் வி. ஐ. சுப்பிரமணியமும், ஆபிரகாம் அருளப்பனும். இவர்கள் இருவரும்தான் உரைவளத் திற்கு வித்திட்டனர். இவ்விதையை விதைத்தவர் பேராசிரியர் வி. ஐ. சுப்பிரமணியம் என முன்னுரை (பக். 11) கூறுகிறது. சொல்லதிகாரத்திற்கு இக்காலம் வரை வெளிவந்துள்ள இளம் பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் உரைகளோடு, வெளிவராத கல்லாடர் உரையையும், பெயர் தெரியாத பழைய உரையையும் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தி லிருந்து பெற்று இணைத்து வெளியிட்டனர். (இதற்குப் பின்பு 1964இல் கு. சுந்தரமூர்த்தியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு தொல்—சொல்—கல்லாடனார் உரையும் பழைய உரையும்

இணைத்துக் கழகம் வெளியிட்டது. பின்பு 1971இல்தான் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, பலசுவடிகளை ஒப்பு நோக்கிச் சிறந்த முகவுரையுடன் கீழ்த்திசைச்சுவடி நூலக வெளியீடாகத் தொல்—சொல்—கல்லாடனார் உரையும் பழைய உரையும் வெளிவந்தன.

தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—உரைக்கோவை — முதற் பாகத்தில் முதல் நான்கு இயல்களாகிய கிளவியாக்கம், வேற்றுமை யியல், வேற்றுமைமயங்கியல், விளிமரபு ஆகிய இவற்றிற்கு உரைகள் தொகுக்கப்பெற்று வெளியிட்டனர். இப்பதிப்பின் நோக்கத்தைக் "கிடைக்கும் தொல்காப்பிய ஏடுகளையும் பதிப்புகளையும் திரட்டித் துணைச் சான்றுகளையும் தொகுத்து, மரபுவழி நிறுவிப் பாட நிச்சயத்துடன் வெளியிடுவது வரை தொல்காப்பியப் படிப்புச் சிக்கல் நிறைந்ததாகவே இருக்கும். அத்தகைய வெளியீட்டை யொருவர் தாமாக மேற்கொள்வது அரிது. விரைவில் நடை பெறுவதும் அன்று. எனவே, கிடைக்கும் பிரதிகளின் அடிப்படை யில் கூடிய மட்டும் பாடத்தைச் சான்றின்றித் திருத்தாமல் அவ்வாறே பதிப்பதேதான் எங்களுடைய நோக்கம்" (முன்னுரை—பக்-iv)

இந்நிலையில் இளம், தெய்வ, சேனா, நச்சர், கல், அரசு, என்ற முறைவைப்பில் உரைகள் தரப்பெற்றுள்ளன. அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், உரைப் பாட வேறுபாடுகள், குறிப்பு கள் தரப்பெற்றுள்ளன. ஒவ்வொரு பக்கத்தின் வலப்பக்கத்திலும் அப்பக்கச் செய்தி சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளது. (சு. பக். 243 — கி. ஆ. சூ. 55 இளம், தெய்வ.).

தெளிவான 16 பக்க முன்னுரையும், சூத்திர அகரவரிசையும் முன் பகுதியில் தரப்பெற்றுள்ளன. பின் பகுதியில் 10 பக்கங்கள் பிழைதிருத்தம் உள்ளது. நல்ல கட்டிட அமைப்புடன் மிகக் குறைந்த விலைக்கே (ரூ 7·20) இந்நூல் கொடுக்கப்பெற்றது பாராட்டத்தக்க ஒன்று.

1980களில் வந்த உலகத்தமிழராய்ச்சி நிறுவனத் தொல்காப்பிய உரைவள நூல்களுக்கு அடிப்படையாக இவ்வுரைக்கோவை அமைந்தது.

மதுரை—காமராசர் பல்கலைக் கழகத்தின் வழி 1975 தொடங்கி இன்றுவரை தொல்—பொருள்—உரைவளப் பதிப்புகள் வந்து கொண்டிருக்கின்றன.

## ஆபிரகாம் அருளப்பன்

**தொல்காப்பிய யாப்பு—பொருளதிகாரம்—உறுப்பியல் உரையுடன்**; 1968; **அருள் அச்சகம்; பாளையங் கோட்டை; பக்.** xiv+57=71

"யாப்பு முறையில் 'தொல்காப்பியம் யாப்பருங்கலத்தினும் வேறுபட்டது. அவ்வேறுபாடு காட்டும் நோக்கமே இச் சிறுநூல் தோன்றுவதற்கு முதற்காரணம்' என்கிறார் (முகவுரை ii) ஆசிரியர் ஆபிரகாம் அருளப்பன். தொல்காப்பியச் செய்யுளியலில் எழுத்து, அசை, சீர், ஓசை, தளை, அடி, தொடை எனும் ஏழு உறுப்புகள் தொடர்பான 60 நூற்பாக்களைத் தொகுத்துப் பொருளுரைத்துள்ளார்.

பொருள் தெளிவு பெறவும், ஒப்புமைக்காகவும் யாப்பருங்கல விருத்தியினை அடியொற்றிப் பல்காயம், நற்றத்தம், சங்க யாப்பு முதலியவற்றிலிருந்தும் காக்கைப் பாடினியம், சிறு காக்கைப் பாடினியம் முதலியவற்றினின்றும் மேற்கோள் காட்டியுள்ளார். இளம்பூரணர், பேராசிரியர் உரைகளைத் தேவைக்கேற்ப பயன் படுத்தியுள்ளார்.

இருப்பினும், தம் நோக்கிற்குத்தக உறுப்பு பற்றிக் கூறும் தொல்காப்பிய நூற்பாக்களில் சிலவற்றை நீக்கி, சிலவிடங்களில் விருப்பம்போல் மாற்றியுங் கூறுவது பொருந்துமா என்ற வினா இங்கெழுகிறது.

உள்ளுறையை அகரவரிசைபடுத்தியிருப்பதும் தொல்காப்பியத்திற்கு மட்டுமின்றி, பிற இலக்கண நூற்பாக்களுக்கும் தனித்து அகரவரிசை தந்திருப்பதும் சுட்டத்தக்கது.

## ச. வே. சுப்பிரமணியன்

1. **தொல்காப்பியம்—எழுத்ததிகாரம் (இலக்கணத் தொகை); ஜூலை 1967; பாரிநிலையம்; சென்னை; பக்.** xvi+354=370

ஜூலை 1967இல் தொல்காப்பியத்தை முதல் நிலையாக அமைத்து, ஏனைய பிற்கால இலக்கணங்கள் வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், சுவாமிநாதம் இவற்றின் ஒப்புமை நூற்பாக்களையும் தந்து 'இலக்கணத் தொகை' என்ற அமைப்பை உருவாக்கி இலக்கணத் தொகை=எழுத்து என்ற நூலைச் ச. வே. சுப்பிரமணியன் கொணர்ந்தார். தொல்—எழுத்ததிகாரம்—நூற்பாக்கள் அனைத்

தும் உள்ளதால் இதனை—மூலம்—என்ற நிலைப் பதிப்பாக மு. சண்முகம்பிள்ளை குறித்துள்ளார்.*

15 பக்—முன்னுரையும்—ஆசியுரை, அணிந்துரை போன்றவையும் உள. தொல் நூற்பாக்களை முதலில் வைத்தும் ஏனைய மரபிலக்கண நூற்பாக்களைக் காலமுறைப்படி வைத்தும் ஒற்றுமை வேற்றுமை காட்டியுள்ளார். எடுத்துக்காட்டுகள் பெரும்பான்மையும் இலக்கியங்களிலிருந்து தந்துள்ளார். இறுதியில் இலக்கணத் தொகை—எழுத்ததிகார நூற்பா அகரவரிசையும் பிழைதிருத்தமும் உள்ளன.

**2. தொல்காப்பியம்—சொல்லதிகாரம் (இலக்கணத் தொகை), பிப். 1971; ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்; நாகர் கோவில்; பக். xx+459=479**

பிப்ருவரி 1971இல் இலக்கணத் தொகை—சொல் வெளிவந்துள்ளது. இதில் தொல்—சொல்—நூற்பாக்கள் அனைத்தும் உள்ளன. சொல்லிலக்கணம் கூறும் மரபிலக்கணங்கள் தொல்—போக, வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, தொன்னூல் விளக்கம், முத்துவீரியம்—இவற்றின் தொடர்புடையனவாக நூற்பாக்கள் முறையாக வைக்கப்பெற்று, இலக்கிய எடுத்துக் காட்டுகளையும் தந்துள்ளார். 19 பக்கங்களில் தெளிவான முகவுரை உள்ளது. தெளிவுக்காகப் பல இடங்களில் அட்டவணைகள் உள. பக். 16, 17, 33, 34, 35, 75, 86, 93, 97, 102, 106, 254, 255; இறுதியில் நூற்பா முதற் குறிப்பு அகராதி உள்ளது.

**3. தொல்காப்பியம் — பொருள் — செய்யுளியல் (இலக்கணத் தொகை); பிப் 1978; தமிழ்ப்பதிப்பகம்; சென்னை; பக். 118+660=778**

இலக்கணத்தொகை—யாப்பு—பாட்டியல் பிப்ருவரி 1978இல் வெளிவந்தது. தொல்—செய்யுளியலை அடித்தளமாக அமைத்து யாப்பு, பாட்டியல் தொடர்பான 27 மரபிலக்கண நூல்களின் நூற்பாக்களையும் தொகுத்து வகைப்படுத்தித் தந்துள்ளார்.

118 பக்கங்களில் அமைந்துள்ள முன்னுரை தமிழ் இலக்கண வரலாற்றில் யாப்பு பாட்டியல்களின் இடத்தைத் தெளிவுபடுத்துகிறது. தேவையான இடங்களில் அட்டவணைகள் தரப்

* தொல்காப்பியப்பதிப்புகள்—1978—சென்னைப் பல்கலைக் கழகம் பக். 47, 48.

பெற்றுள்ளன. இறுதியில் யாப்புக் கலைச்சொற்கள், நூற்பா முதற்குறிப்பு, சொல்லகராதி போன்றவை அமைந்துள்ளன.

இவ்விலக்கணத் தொகைகளில் எழுத்ததிகாரம்—சொல்லதிகாரம்- செய்யுளியல் நூற்பாக்கள் முழுவதும் உள்ளன. அக்காலத்து இவ்வாசிரியனுக்குப் பாடவேறுபாட்டுப் பதிப்புகள் பற்றிய எண்ணங்கள் இன்மையில் அந்நோக்கில் தொல்காப்பிய நூற்பாக்கள் பார்க்கப்பெறவில்லை. இலக்கணத்தொகை என்ற நிலையில் இந் நூல்கள் தகுதியுடையன.

## குழந்தை

**தொல்காப்பியம்—பொருளதிகாரம்—குழந்தையுரை; பிப்.** 1968 **வேலா பதிப்பகம்; ஈரோடு: பக்.** 23+544=567

பிப்ரவரி 1968இல், புலவர் குழந்தை—தொல்காப்பியம்—பொருளதிகாரம்—குழந்தையுரை என்ற புத்துரையினை வெளியிட்டுள்ளார். இது தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் புதிய கோணத்தில் பார்த்துள்ளதாகச் சொல்லலாம். முதற்பகுதியென அகத்திணையியல், பொதுவியல், களவியல், கற்பியல், மெய்ப்பாட்டியல், புறத்திணையியல் என ஆறு இயல்களை அமைத்துள்ளார்—பொருளியலைப் பொதுவியல் என மாற்றியுள்ளார்—அதோடு முறைவைப்பையும் தம் நோக்கத்திற்குத் தக மாற்றியுள்ளார். மரபின்படி அகத்திணையியலில் 55 நூற்பாக்கள்—அவற்றுள் 42 நூற்பாக்களை எடுத்துக்கொண்டு பொருளியல் 17, 42ஆம் நூற்பாக்களை அகம் 39, 40ஆம் நூற்பாக்களாகத் தருகிறார். புறம் 32ஆம் நூற்பாவை அகம் 45ஆம் நூற்பாவாக இவர் கொள்கிறார். தாம் கொண்ட பொருளுக்குத்தக ஒரு இயலிலுள்ள நூற்பாவை மற்றொரு இயலுக்கு மாற்றியுள்ளார். ஒரு நூற்பாவை இரண்டாகப் பிரித்துக் களவியலிலும் கற்பியலிலும் அமைத்துள்ளார். "அகத்திணையியல் 41ஆம் சூத்திரத்தில் உள்ள தலைவன் கூற்றுக்கள் 17இல், 6 களவின் உடன் போக்கிற்கும், அடுத்த 11உம் கற்பின் பிரிவுக்கும் உரியவையாகும். எனவே அச்சூத்திரத்தை இரண்டாக்கி, அந்தந்த இடங்களில் வைக்கப்பட்டுள்ளன" என்பது அவர் முகவுரைக் (பக். 9) கூற்று. விருப்பம் போல் மாற்றியுள்ளார். முதற்பகுதிக்குப்பின் இரண்டாவது பகுதியாகிய உவமம், செய்யுள், மரபு இயல்கள் இதுவரை வெளிவந்ததாகத் தெரியவில்லை.

எந்தவிதச் சுவடியையோ, அச்சு நூல்களையோ ஒப்பிட்டுக் கண்டு தம் பதிப்பை அமைத்ததாகத் தெரியவில்லை. தமிழ்ப்பற்று

என நினைத்துக் கொண்டு சில புதுமைகளைச் செய்துள்ளனர் சிலர். அவருள் இவரும் ஒருவர்!

'வணிகர்' என்ற சொல் தொல்காப்பியத்தில் பயன்பெற வில்லை. 'வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை,—1578 என்பது தொல்காப்பிய மரபியல் நூற்பா இதை 'வணிகன் என்ற சொல்லை வைசிகனுக்குப் பதில் அமைத்துள்ளார். இதனால் தமிழ்ச் சொற் களின் தோற்றம் பற்றிய மொழி வரலாறு மாற்றமடையக் கூடும். உண்மையான தொல்காப்பியரைத் தொல்காப்பியத்தை உணர இவை துணை புரியும் என்று தோன்றவில்லை. இராவணகாவியம் எழுதிப் புதுமை செய்தவரும் இவரே.

## அடிகளாசிரியர்

1. **தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—இளம்பூரணம்;** 1969; **கும்ப கோணம்; காவேரி கலர் அச்சகம்; கும்பகோணம்; பக்.** xxxxiv + 466 = 510

1969-இல் அடிகளாசிரியர் தொல்—எழுத்து—இளம்பூரணர் உரையை இரண்டு சுவடிகள் உதவியுடனும் முன் வந்துள்ள இளம் பூரணர் பதிப்புகளின் (1868, 1928) துணையுடனும் வெளியிட்டுள் ளார். திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள் திருமடத்திலிருந்து இளம்பூரணர் உரையேடுகள் இரண்டு கிடைத்ததாகவும், ஒன்று மிகப் பழமையானதாகவும் பயனுடையதாகவும் அமைந்ததாகக் கூறுகிறார். இரண்டாம் ஏடு அச்சில் வந்துள்ள பதிப்பின்படி இருந்ததாகவும் குறிக்கின்றார்.

தெளிவான பதிப்புரை. இரண்டு பெரியாரின் நினைவு எனக் கரந்தை தமிழ்க் கல்லூரியைத் தோற்றுவித்த உமா மகேசுவரம் பிள்ளையையும், மயிலம் தமிழ்க் கல்லூரியைத் தோற்றுவித்த ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகளையும் குறித்து எழுதியுள்ளார். பின் தொல்காப்பிய/ம்/ர் வரலாறு—இளம்பூரணர் வரலாறு—எழுத்திகாரப் பொருள் இவை கூறி நூலுள் நுழைகின்றார்.

அடிக்குறிப்பில் சுவடி வேறுபாடுகள், பாடவேறுபாடுகள் தந்துள்ளார். ஒவ்வொரு நூற்பாவிற்கும் விளக்கக் குறிப்பும் கொடுத்துள்ளார். ஏனைய உரையாசிரியரின் கருத்துகளையும் அங்கங்கே சுட்டுகின்றார். பின் இணைப்பாக நூற்பா அகரவரிசை, எடுத்துக் காட்டுகளின் அகராதி, உரைப் பொருள் அகரவரிசை என மூன்றினைத்தந்துள்ளார். நல்ல தெளிவான பதிப்பு, கீழ்க்கண்ட நூற்பாக்களுக்குச் சுவடி வேறுபாடும், பாடவேறுபாடும் குறித்துள்ளார்.

நூற்பா எண்கள்- 1, 3, 4, 5, 11, 13, 14, 17, 18, 22, 24, 40, 46, 48, 50, 51, 52, 64, 70, 83, 102, 104, 109, 119, 120, 125, 131, 133, 139, 141, 149, 152, 153, 155, 158, 159, 160, 161, 168, 170, 177, 178, 179, 182, 185, 188, 189, 193, 196, 197, 198, 210, 211, 212, 257, 268, 278, 283, 289, 299, 306, 316, 317, 325, 335, 338, 340, 341, 351, 356, 358, 373, 390, 405, 411, 413, 415, 418, 440, 446, 452, 455, 476, 483.

'என்னிடமுள்ள நச்சினார்க்கினியம் ஓலைச் சுவடியில்' என அடிகளாசிரியர் பக் 43-இல் எழுதுகின்றார். அதனால் அதனையும் பயன்படுத்திப் பாடவேறுபாடுகளைக் குறித்திருக்கலாம். அவ்வாறு செய்துள்ளதாகத் தோன்றவில்லை. அதோடு முதற்பதிப்பாகிய மழவை மகாலிங்கையர் (1847) பதிப்பையும் பார்த்ததாகத் தெரியவில்லை. இவர் சுட்டியுள்ள பாடவேறுபாட்டு நூற்பாக்களுள் 11, 13, 18, 51, 104, 109, 139, 168, 170—இக்குறித்த ஒன்பதிலும் முதற்பதிப்பில் பாடவேறுபாடுகள் இல்லை.

**2. தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — இளம்பூரணம்; 1988; தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை; பக். 510**

1988 செப்டம்பரில் தொல்—சொல்—இளம்பூரணத்தை இரண்டு சுவடிகளின் துணையுடனும் முன்வந்துள்ள பதிப்புகளின் துணை கொண்டும் வெளியிட்டுள்ளார். திருப்பாதிரிப்புலியூர் ஏட்டைப் புலிசை என்றும் திருவாடுதுறை ஏட்டைத் துறைசை என்றும் குறிக்கின்றார். சில இடங்களில் 'ஏடு' எனச் சுட்டுகின்றார். எந்த ஏடு எனத் தெரியவில்லை. பதிப்பாசிரியர் உரை, சுருக்க விளக்கம் முன் பகுதியிலும், நூற்பா—சொல்லகராதி, உரைப் பொருள் அடைவு, மேற்கோள் அகராதி, நூற்பா முதற் குறிப் பகராதி. இவை பின் பகுதியிலும் உள்ளன; அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், சுவடிவேறுபாடுகள், உரைப்பாடவேறுபாடுகள் போன்றவற்றைக் குறித்துள்ளார். தொல்—சொல்லுக்கும், தொல் பொருள்—செய்யுளியலுக்கும் **நூற்பா சொல்லகராதி** தந்துள்ள பதிப்பாசிரியர் இவர் ஒருவரே என்பது சுட்டத் தக்கது.

ஆனால் சில பாடங்களை எவ்விதச் சுவடிச் சான்றுகளோ, அச்சுப்பதிப்புச் சான்றுகளோ இன்றி உருவாக்கியுள்ளார் என்பது இப்பதிப்பிலிருந்து தெரிகிறது.

நூற்பா 149-இல் அளபு—அளவு ஆகியுள்ளது.

இப்பாடம் முந்தைய இளம்பூரணப் பதிப்புகளில் இல்லை.

நூற்பா 185-இல் நீயிர்—நீஇர் என உள்ளது.
" 169-இல் திரிபு—திரிவு ஆகின்றது.

இவை முற்பதிப்புகளில் இல்லை.

இரு இடங்களில் **மேலைக்** கிளவி (211, 216) **மேலக்** கிளவி ஆக்கியுள்ளார். இந்நூற்பா அடிகளில் முன் வரியில் 'கால' என்றிருப்பதால் 'மேல' என மாற்றியிருப்பாரோ எனத் தோன்றுகிறது. தொல்காப்பியத்தில் (மேலை) என்ற சொல்லமைப்பு இவ்விரண்டு நூற்பாக்களில் மாத்திரமே உள்ளது. 'மேல' என்ற சொல்லமைப்புத் தொல்காப்பியத்தில் இல்லை. இப்பாடத்தால் தொல்காப்பியத்தில் புதிய சொல்லமைப்புத் தோன்றுகிறது. மொழிநிலை மாற்றமும் ஏற்படுகிறது. இதற்கும் எவ்விதச் சுவடிச் சான்றோ, பதிப்புச் சான்றோ தரப்பெறவில்லை. நூற்பா 454-இல் 'பன்மைக் காகும்' என்று முதலிரு பதிப்புகளிலும் உள்ளது. இவர் 'பன்மைத் தாகும்' என மாற்றியுள்ளார். எந்தச் சுவடி சான்று என இவர் குறிக்கவில்லை. ஆயின் 1052-ஆம் எண் இளம்பூரணர் உரைச் சுவடியில் 'பன்மைத்தாகும்' என்ற பாடமுள்ளது.

பொது நிலையில் அடிகளாசிரியர் பதிப்புகள் நன்முறையில் அமைந்துள்ளன.

**3. தொல்காப்பியம்—பொருள் (செய்யுளியல்)—இளம்பூரணம்; 1985; தமிழ்ப் பல்கலைக்கழகம்; தஞ்சாவூர்;**

**பக். ௩௧ + 596 = 627**

தொல்—பொருள்—செய்யுளியல்—இளம்பூரணர் உரைப் பதிப்பு—அடிகளாசிரியரைப் பதிப்பாசிரியராக் கொண்டு 1985-இல் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது. செய்யுளியலுக்கு மட்டும் தனிப் பதிப்பாக அமைந்தவை சிலவே.

இப்பதிப்பில் செய்யுளியலுக்குரிய இளம்பூரணர், பேராசிரியர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவர் உரைகளும் ஒப்பிட்டுப் பார்க்கப் பெற்றுப் பதிப்பாசிரியரால் தெளிவுபடுத்தப் பெற்றுள்ளன— இதனால் இப்பதிப்பு உரைவளப் பதிப்பாக அமையாவிடினும் அந்நிலையைப் பெறுகின்றது.

அடுத்து தமிழில் செய்யுளிலக்கணங்களைக்கூறும் யாப்பருங்கல விருத்தியுரை, காரிகையுரை, வீரசோழியவுரை, நேமிநாத உரை, வெண்பாப்பாட்டியலுரை, இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம். சிதம்பரப்பாட்டியலுரை, முத்துவீரியம் போன்ற நூல்களின் துணை கொண்டும் பல செய்திகளைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

---

செய்யுளியல் பகுதியில் எடுத்துக் காட்டப் பெற்றுள்ள சங்க இலக்கியப் பாடல்களில் யாப்பமைப்பு முறை மேலும் தெளிவு பெறு கின்றது. 'சிறியகட்பெறினே' என்ற ஔவையார் புறநானூற்றுப் பாடல் (புறம்-235) செய்யுளியல் இளம்பூரணர் உரையில் **பதினேழு** அடியாகவும், யாப்பருங்கல விருத்தியில் **இருபத்தொரு** அடியாகவும், இலக்கண விளக்கம் சரசுவதிமகால் பதிப்பில் **இருபத்துமூன்று** அடி யாகவும், உ. வே. சா. புறநானூற்றுப் பதிப்பில் **இருபது** அடியாக வும் கொடுக்கப் பெற்றுள்ளது. இதனை இளம்பூரணர் ''இப்பதினே ழடியாசிரியத்துள் ஏழாமடியும் பன்னிரண்டாமடியும் முச்சீரான் வந்தன, மூன்றாமடி முதலாக ஆறாமடி ஈறாக நான்கடியும் பதினாலாமடியும் ஐஞ்சீரான் வந்தன. இரண்டாமடியும் பதினொன்றாமடியும் அறுசீரான் வந்தன. ஏனைய நாற்சீரான் வந்தன. இவ்வாறு வருதலின் அடிமயங்காசிரியமாயிற்று.'' என எழுதுகிறார் (பக்-200). இந்நிலையில் அப்பாடலை அமைத்துக் காட்டுகிறார் அடிகளாசிரியர். அதிலும் தம் கருத்துப் பாடவேறு பாட்டினையும் தருகின்றார். பொது நிலையில் சங்க இலக்கியச் செம்பதிப்புக்கு உரையாசிரியரின் மேற்கோள்கள் மிகுந்த துணை புரியும்.

தொல்காப்பியச் செம்பதிப்புப் பற்றி அடிகளாசிரியரிடம் நேரில் உரையாடிக் கொண்டிருந்தபோது திவாகர நிகண்டினையும் தொல்-பாடவேறுபாட்டுப் பதிப்பிற்குப் பயன்படுத்தலாம் எனக் கூறினார். அவ்வெண்ணத்தைப் பக். 318-இல் தெரிவித்துள்ளார்.

பதிப்பாசிரியர் விளக்கத்தை எல்லா நூற்பாக்களிலும் தெளி வாக எடுத்துக் காட்டுகளுடன் தந்துள்ளார்.

அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள் உரைப் பாடவேறு பாடுகள் அனைத்தையும் குறித்துள்ளார்.

பதிப்புரையும், மேற்கோள் நூல் சுருக்க விளக்கமும் முன்பகுதி யில் உள்ளன. பின்னிணைப்பாக நூற்பாச் சொல்லகராதி, உரைப் பொருளடைவு, மேற்கோளகராதி, நூற்பா முதற்குறிப்பகராதி போன்றவற்றைத் தந்துள்ளார்.

நல்ல தெளிவான, செம்பதிப்பாகச் செய்யுளியல் இளம்பூரணர் உரை அமைந்துள்ளது. ஏற்கனவே 1969-இல்-எழுத்து இளம் பூரணத்தை இதுபோன்று நன்கு பதிப்பித்துள்ளார்.

## மு. இராமலிங்கனார் (வடலூரனார்)

**தொல்காப்பிய வளம்**; 1969; **திருச்சி**; **பக்.** ௩௨ + 400 = 432

1969-இல் தொல்காப்பிய வளம் எனத் தொல்காப்பியம் மூலம் முழுவதும் தரப்பெற்றுள்ளது. மு. இராமலிங்கனார், வடலூரனார் என்ற பெயரில் இப்பதிப்பை வெளியிட்டுள்ளார். முற்றிலும் புதிய நோக்கில் இப்பதிப்பு அமைந்துள்ளது.

இந்நூலை, ''காழியன் வளைபடம் கொண்டும், நுண்கணித வாய்பாடும் நேரியமும்கொண்டும், எண் கணிதம், பூங்கணித அடிப் படையில் நுண் கணிதப் பொருள் நிலை பெற்ற முறைகொண்டும், அறிவியல் வரலாறு கொண்டும் தொல்காப்பிய வளம் என்ற இவ்வாராய்ச்சி நூலில் பலவாறு காட்ட முயன்றிருக்கின்றோம். அறிஞர் உலகம் வரவேற்றாவன செய்யும் என நம்புகிறோம்'' என (பக். xviii) எழுதுகிறார். தெளிவாகப் புரியவில்லை.

எல்லா இயல்களுக்கும் தம் முறைப்படி நூற்பா எண்கள் தந்துள்ளார். கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு நூற்பாக் களைப் பிரித்துள்ளார் எனத் தோன்றுகிறது. எல்லா இயல்களுக்கும் அடிகள் குறிப்பிட்டுள்ளார்—ஒரு சான்று :

**பிறப்பியல்**

| செய்தி | நூல் | அடி |
|---|---|---|
| எழுத்தெழுமுறை | 1 | 8 |
| உயிர் எழுத்தெழு முறை | 1 | 12 |
| மெய் ,, ,, | 1 | 21 |
| சார்பு ,, ,, | 1 | 4 |
| மெய் தெரி இசை | 1 | 7 |
| | 5 | 52 |

இவ்வாறு எல்லா இயல்களுக்கும் தந்துள்ளார். பிறப்பியல் இறுதி இருவரி நூற்பாவைப் புணரியலில் தருகின்றார் (பக்-30).

தமிழிலும் ஆங்கிலத்திலும் முகவுரை கொடுக்கப் பெற்றுள்ளது. Foreword என்பதற்குப்பின் Ogdenese என்ற பகுதி 5 பக்கங்கள் ஆங்கிலத்தில் உள்ளது. தெளிவாகப் புரியவில்லை.

ஒவ்வொரு இயல் இறுதியிலும் அவ்வியல் கருத்தைச் சுருக்கித் தந்துள்ளார்.

ஒவ்வொரு அதிகார இறுதியிலும் ஆங்கிலத்தில் அவ்வதிகாரக் கருத்துகளைத் தந்துள்ளார்.

Tamilology—Phonology—பக். 77-84
Syntax —பக். 150-153
The Themology of Tamilology—பக். 257-269
Thread Tradition — " 269-271
Word Tradition — " 271-274
letters birth — " 274-275

இவ்வாறு நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியலைச் சுருக்கி ஆங்கிலத்தில் தந்துள்ளார்.

Unique secrets (of Kanchi thinai) —பக் 371-378
தத்துவ அடிப்படையில் பல செய்திகளை இப்பகுதியில் தந்துள்ளார்.

Secrets of vakai—378-384

Love link —385-386

Themes and speakers—387-398

இவ்வாறு பல பகுதிகள் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன.

பல பல புதிய கோணங்களில் தாம் படித்துள்ள செய்திகள் அனைத்தையும் கொண்டு தொகுத்தும், வகுத்தும், பெருக்கியும் பார்த்துள்ளார். தமிழ் மரபு தனிமையுடையது. தனித் தன்மையுடையது என்ற எண்ணம் இவருக்குள்ளது எல்லா இடங்களிலும் வெளிப்படுகின்றது. பலமுறை ஆழ்ந்துபடித்தால் இவர் எண்ணங்கள் புரியலாம். தற்போது ஆழ்ந்து படிக்கின்றவர்கள் இன்மையால் இவர் எண்ணங்கள் தமிழறிஞரைச் சென்று சேரவில்லை என்பது தெளிவாகிறது. நூற்பா முதற் குறிப்பகராதி இல்லை. எந்தவிதமான பின் இணைப்புகளும் இல்லை.

ஆழ்ந்து படித்துப் புரிந்து கொள்ள வேண்டிய நூல்.

1974-இல் இவர் பொருளதிகாரம் செய்யுளியலுக்கும் உரையெழுதி, மீனாட்சி புத்தக நிலையத்தார் வெளியிட்டதாகத் தெரிகிறது.* ஆனால் இந்நூல் பார்வைக்குக் கிட்டாமையால் பிற குறிப்புகள் தர இயலவில்லை.

* கோ. கிருட்டிணமூர்த்தி; தொல்காப்பிய ஆய்வின் வரலாறு: ப. 383.

Precise Tamil—Standard Tamil feet 625—This is normal curve




$$(1+4+10+20+35+52+68+80)\ 2+85=625$$

All the 27 Chapters have precisely mathematical portions capable of being expressed in tables graphs and equations. The book as a whole may be summed up in mathematical terms.

இவ்வாறு பக். 149-இல் ஒருவரை படம் தருகிறார். செய்யுளியல் நூற்பா-1293-முதல் 1299 வரையுள்ள நூற்பாக் கருத்துகள் சுருக்கித் தரப்பெற்றுள்ளன. 1307-நூற்பா 625-ஐக் குறிக்கிறது.

## கு. மா. திருநாவுக்கரசு

**தொல்காப்பியம்—சொல்லதிகாரம் சேனாவரையம் (தொல் காப்பிய வழிகாட்டி)**; 1970:**மதுரை; பக்.** 296+2+14=312

தொல்காப்பிய வழிகாட்டி எனும் பெயரில் இவர் சொல்லதி காரம்—சேனாவரையருரை விளக்கத்தைப் பதிப்பித்துள்ளார். இதுவும் மாணாக்கர் பதிப்பே. முன் வினாவிடை நூலாக வெளி யிட்டதை 1970-இல் மூலமும் உரை விளக்கமுமாக மாற்றித் தந்துள்ளார்.

இந்நூலுக்குக் க. ஆறுமுகனாரும், சி. இலக்குவனாரும் முறையே மதிப்புரையும், அணிந்துரையும் நல்கியுள்ளனர். தொடரும் முன் பகுதியில் தொல்காப்பியர், சேனாவரையர் வரலாறு, சேனா வரையரது உரைத்திறன் எனும் 3 கட்டுரைகளை அமைத்துள்ளார். சேனாவரையரது இயற்பெயராகக் கல்வெட்டுச் சான்று கொண்டு 'அழகப்பிரான் இடைக்கரையாழ்வான்' என்று குறிப்பிடுதல் சுட்டத்தக்கது. இவரின் உரைத்திறனாக 26 குறிப்புகளைத் தந்துள்ளார்.

நூல் பகுதிக்கு எந்தப் பதிப்பினை. சுவடியைப் பின்பற்றினார் என்ற குறிப்பில்லை. சேனாவரையர் உரையை மாணாக்கர் தெளிந்து கற்க உதவியாக எளிமைப்படுத்தி, உட்தலைப்புகளிட்டுத் தம் கருத்துகளையும் ஆங்காங்கே இணைத்து விளக்கியுள்ளார். இறுதியில் பிழைதிருத்தமும், பல்கலைக் கழக வினாப்பட்டி யலையும் (விடைகளுக்குரிய பக்கங்கள் சுட்டி) இணைத்துள்ளார். முன்பகுதிகளுக்குப் பக்க எண்கள் இல்லை.

## தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்

**தொல்காப்பியம்—சொல்லதிகாரம் — கல்லாடனார் விருத்தி**; 1971; **அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம்; சென்னை; பக்.** 431

தொல்—சொல்—கல்லாடனார் விருத்தியைத் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் பதிப்பிக்க அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூல் நிலையம் 1971இல் வெளியிட்டுள்ளது.

பதிப்பு நெறி முறைகளுடன் அமைந்த பதிப்பு. ஏறத்தாழ ஒன்பது கல்லாடனார் உரைச்சுவடிகள் பார்க்கப்பெற்றுப் பதிப்பித்த நூல். மூன்று மூலச்சுவடிகளிலிருந்து ஏனைய ஆறு சுவடிகளும் தோன்றியுள்ளன. முன்னுரையில் சுவடிக் குடிவழி;

பற்றிய மிகவும் தெளிவான விளக்கத்தைப் பதிப்பாசிரியர் தந்துள்ளார் (பக். 66). சுவடி வேறுபாடுகள் அனைத்தும் அடிக்குறிப்பில் தரப்பெற்றுள்ளன. ஆங்கிலத்திலும் தமிழிலும் தொல்காப்பியம் பற்றிச் சிறந்த முகவுரை எழுதியுள்ளார். இடைச் செருகல்கள் பற்றிய கருத்தினைக் காரணகாரியங்களோடு குறிப்பிட்டுள்ளார். முகவுரை, முன்னுரை ஆங்கிலத்திலும் தமிழிலும், சூத்திர முதற் குறிப்பகராதி, சூத்திர எண்ணிக்கை, பிற உரையாசிரியரும் கல்லாடரும், சொல்லகராதி, அருஞ்சொல் அகரவரிசை, பிழை திருத்தம் இவை 158 பக்கங்களில் முன் பகுதியில் உள்ளன. பின்பு கல்லாடனார் விருத்தி. அடுத்து வேறு உரை வேற்றுமை மயங்கியல் வரை தரப்பெற்றுள்ளது. தெ. பொ. மீ. கருத்துப்படி கல்லாடர் நால்வர். "நான்காவது கல்லாடரே முன்னைய மூவர் கட்கும் பின்னால் வந்து இந்த உரையை எழுதியவர்" (பக் 67).

கல்லாடனார் பதிப்பில் சுவடிவேறுபாடுகள் குறிக்கப் பெற்ற நூற்பா எண்கள், 1, 2, 8, 9, 12, 14, 25, 29, 30, 37, 50, 59, 63, 67, 74, 76, 78, 81, 83, 86, 92, 101, 102, 105, 107, 108, 110, 113, 114, 122, 124, 127, 130, 135, 136, 140, 143, 147, 160, 169, 171, 176, 177, 185, 191, 196, 197, 200, 201, 202, 204, 205, 206, 209, 224, 231, 236, 239. 246.

வேறு உரையில் குறிக்கப்பெற்றுள்ள சுவடி வேறுபாடுகள்—4, 6, 9, 24, 28, 37, 38, 48, 49, 53, 57, 59, 65, 67, 68, 72, 73, 75, 77, 80, 81, 82, 84, 91, 93, 94, 95. 98, 110, 112, 113.

## ரா. சீனிவாசன்

**தொல்காப்பியமும் நன்னூலும்**; 1972; **அணியகம்: சென்னை; பக்.** 8+280=288

'தொல்காப்பியமும் நன்னூலும்' என்ற ஒப்பியல் நூலை பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர் ரா. சீனிவாசன் தம் அணியகத்தின் வழி 1972இல் வெளியிட்டுள்ளார்.

'தொல்காப்பியமும் நன்னூலும்' முதுகலை மாணாக்கருக்கு ஒப்பியற் பாடமாக அமைந்துள்ளதால் அவர்கட்குத் துணையாகும் பொருட்டு நூற்பாக்களை வரிசைப்படுத்தியுள்ளார். நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல், பதவியல், புணரியல், தொகை மரபு, உருபு புணரியல், உயிர்மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல், கிளவியாக்கம், வேற்றுமையியல், பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல் எனும் தலைப்புகளில்,

உட்தலைப்புகளுடன் செய்திகளை விளக்கம், பெறச் செய்து அடிக் குறிப்பில் அவற்றிற்குரிய தொல்காப்பிய, நன்னூல் நூற்பாக் களைத் தருகிறார்.

பாடபேதம், சுவடி வேறுபாடு போன்ற குறிப்புகளோ, உரை யாசிரியர் எண்ணங்களோ இடம் பெறவில்லை. பாடத்திட்ட நோக்கில் நூல் அமைந்துள்ளது.

சாரியைகளும், எழுத்துப் பேறும், செய்யுள் வழக்குகள், சொல்லும் பொருளும் எனும் மூன்று கட்டுரைகள் இறுதியில் இடம் பெறுகின்றன.

முன்னுரையில் வீரசோழியம் தரும் சிறப்புச் செய்திகளைத் தொகுத்தளித்துள்ளார். தொல்காப்பியம் தொடரியலுக்குச் சிறப்புத் தருகிறது; நன்னூல் சொல்லியலுக்குச் சிறப்புத் தருகிறது; நன்னூல் வீரசோழியத்தை வடநூற் சந்திகள் விளக்குவதற்கும். பதவியல் அமைப்புக்கும் துணையாகக் கொண்டதே தவிர ஏனைய வழிகளில் இது தொல்காப்பியத்தையே முழுவதும் பின்பற்றி யுள்ளது; தொல்காப்பியம் செய்யுள், வழக்கு என்னும் அடிப்படை யிலும், சொன்மை நிலை, பொருண்மை நிலை என்ற பாகுபாட் டோடும் தமிழ் மொழியியலை ஆய்ந்து தருகிறது; தொல் காப்பியத்தை முழுவதும் படித்து அதன் அருமை பெருமைகளை ஆய்வுக் கண்ணோட்டத்தோடு பார்க்கும் பொழுது எவ்வளவு பெரிய அரிய மொழியியல் விளக்க நூல் நம்மிடை வழங்குகிறது என்று நினைக்கச் செய்கிறது என்பன போன்ற செய்திகள் அதில் இடம் பெற்றுள்ளன.

பாடத்திட்டப் பதிப்பாதலின், பதிப்புக் கூறுகள் எதுவும் இடம் பெறவில்லை.

## க. ப. அறவாணன், தாயம்மாள் அறவாணன்

1. **தொல்காப்பியக் களஞ்சியம்**; 1975; **பாரி நிலையம்; சென்னை; பக்.** xvi+376 = 392

சனவரி 1975இல் அறவாணன், தாயம்மாள் அறவாணன், இருவரும் தொல்காப்பியக் களஞ்சியம் என்ற நூலைத் தொல் காப்பிய மூலத்துடன் வெளியிட்டுள்ளனர்.

தொல்காப்பிய மூலம்—அடிக்குறிப்பில் ஏனைய இலக்கண நூல்களின் ஒப்புமைப் பகுதிகள் தரப்பெற்றுள்ளன. தொல் காப்பியத்தில் பாடவேறுபாடுகள் 338 முதல் 351 பக்கம் வரை

தந்துள்ளார். மர்ரே ராஜம் (1960) பதிப்பில் தந்தவற்றை விரிவு படுத்தியுள்ளார். உரையாசிரியர் ஒவ்வொருவரும் கொண்ட நூற்பா எண்ணிக்கையை 352ஆம் பக்கத்தில் தந்துள்ளார். நூற்பா முதற் குறிப்பு அகராதியும் உள்ளது. இதனால் இந்நூலைத் தொல் காப்பியப் பதிப்புகளுள் அடக்கலாம்.

அச்சுப்பிழைகள் உள்ளன. பக்கம் 304க்குப் பின் பக். 149 முதல் 164 வரை தந்து, பின் பக் 321இல் தொடங்குகிறது.

தொல்காப்பியக் களஞ்சியத்தில் தொல்காப்பியப் பொரு ளடைவு, தொல்காப்பியப் பதிப்புகள், தொல்காப்பியம் பற்றிய நூல்கள் (தமிழ் நூல்கள், ஆங்கில நூல்கள்); தொல்காப்பியம் பற்றிய தமிழ்க் கட்டுரைகள் அடைவு, ஆங்கிலக் கட்டுரைகள் அடைவு போன்றவற்றையும் தந்துள்ளார். பொருளடைவு முறை யாக அமைக்கப்பெறவில்லை. பல செய்திகள் இல்லை. சான்றாக நால்வர், மூவர், மேலோர் போன்ற சொற்களும் விளக்கமும் காணப்பெறவில்லை.

தொல்காப்பியப் பதிப்புகள் பற்றிய குறிப்புகள் முறையாகவும் தெளிவாகவும் தரப்பெறவில்லை. இதன் குறைபற்றி மு. சண்முகம் பிள்ளை தம் 'தொல்காப்பியப் பதிப்புகள்' என்ற கட்டுரையில் (37-39) மூன்று பக்கங்கள் எழுதியுள்ளார். தமிழறிஞர் நூல் எழுதும்போது தாம் அனைத்தும் தெளிவாகப் பார்த்து எழுதுவ தில்லை என மேனாட்டினர்‡ சுட்டுகின்றனர். அக்குறையை நாம் நீக்குதல் வேண்டும்.

2. **தொல்காப்பியம்—ஒப்பியல்;** 1975; **ஜைன இளைஞர் மன்றம்; சென்னை; பக்.** 6+236=242

தொல்காப்பியம்—ஒப்பியல் என்ற நூலும் 1975 சனவரியில் அறவாணன் எழுதி ஜைன இளைஞர் மன்றத்தால் வெளியிடப்பெற் றுள்ளது. தொல்காப்பிய நூற்பாக்களும் மரபிலக்கணங்களில் தொடர்புடைய நூற்பாக்களின் எண்களும் குறிக்கப்பெற்றுள்ளன. இது தொல்காப்பியக் களஞ்சியத்தின் பின் பகுதியிலுள்ள மூலப் பகுதியில் உள்ளது. இலக்கணத் தொகை—எழுத்து, சொல்லில்

‡ 'The 1985 bibliography is full of glaring in accurancies of reference and major errors of proof reading'. Tamil Lexicography; Gregory James-Niemeyer-1991 page xiv.

பிற இலக்கணங்களிலுள்ள நூற்பாக்கள் தரப்பெற்றுள்ளன. இவ்வொப்பியலில் எண்கள் மட்டுமே தந்துள்ளார்.

## மதுரை—காமராசர் பல்கலைக் கழகம்

**(உரைவளப் பதிப்புகள்)**

1. **தொல்காப்பியம்—பொருளதிகாரம்—அகத்திணையியல்**; 1975; **(பதி) மு. அருணாசலம் பிள்ளை பக்.** xxxviii+622=660

மு. அருணாசலம்பிள்ளை தம் வாழ்நாளின் இறுதிக்காலத்தில் அகத்திணையியலுக்கு முன் எழுந்த உரைகளாகிய இளம்பூரணம், நச்சினார்க்கினியம், சோமசுந்தர பாரதியார் புத்துரை இவைகளைக் கூறி இவற்றிற்குத் தேவையான இடங்களுக்குச் சொல், பொருள், கருத்து விளக்கங்கள் தந்துள்ளார். அவர் கூறக் கூற எழுதியவர் மு. முத்துசாமிப் பிள்ளை. அவர் எப்போது மதுரைப் பல்கலைக் கழகத்தில் இதனைச் செய்தார் என்ற குறிப்பு பதிப்புரையில் இல்லை. அவர் காலமானது 24-4-1973இல்; இவ்வுரை வளம் வந்தது 1975இல்.

முத்துசண்முகம், தா. வே. வீராசாமி இவர்களைப் பதிப்பாசிரியர்களாகக்கொண்டு இந்நூல் வெளிவந்துள்ளது. முன்னுரை, இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பாரதியார், அருணாசலம் பிள்ளை, தொல்காப்பிய நூற்பா (எண் வரிசை) முதற்குறிப்பு விளக்கம், உரைவளமும் ஆய்வுரையும், உரைமேற்கோள் வரிசை, பிழைதிருத்தம் என அமைந்துள்ளது. பிழைதிருத்தம் ஆறு பக்கங்களில் உள்ளது. ஆயின் பிழைகள் சுட்டாதவை மிகுதியாக உள்ளன.

அருணாசலம்பிள்ளை உரைவிளக்கக் குறிப்புகளும், ஆய்வுரையும் சிறப்பாக உள்ளன. மிகுந்த பயனுடையன. அதைப் பதிப்பித்துள்ள முறை சிறப்பாக இல்லை. முன்னுரையில் பக்கம் iiiஇல் 'பொருளதிகாரத்திற்கு நம் காலத்தில் வாழ்ந்த நாவலர் சோமசுந்தரபாரதியார் அகத்திணையியல், புறத்திணையியல், செய்யுளியல் ஆகியவற்றிற்குப் புத்துரை வகுத்தார்'—என உள்ளது. செய்யுளியல் என்பது 'மெய்ப்பாட்டியல்' என்றிருத்தல் வேண்டும். பக். ivஇலும், xxஇலும் இச்செய்தி மெய்ப்பாட்டியல் எனச் சரியாக உள்ளது. நான் படித்தவுடன் பாரதியாரின் செய்யுளியலையும் தேடத் தொடங்கினேன். பின்புதான் அவர் செய்யுளியலுக்குப் புத்துரை தரவில்லை—மெய்ப்பாட்டியலுக்குத் தந்துள்ளார் என

அறிந்தேன். இதுபோன்ற பிழையான வழிகாட்டுதல் (misleading) பல்கலைக் கழகப்பதிப்புகளில் இருத்தல் நல்லதல்ல. படித்தவர்கள் முன்னுரை எழுதுகிறார்கள் என்று பாமரன் நம்புவான்.

நூற்பா 36ஐத் தேடினேன்—அந்நூற்பாவிற்கு எண் கொடுக்கப் பெறவில்லை. பின்பு நூற்பா எண் வரிசையைத் தேடி பக். 331இல் இருப்பதாகத் தெரிந்தேன். அப்பக்கத்தில் நூற்பா உள்ளது. அதில் 36 என்ற எண்ணில்லை. அச்சிட மறந்து விட்டனர் போலும். ''திணைபெயர்கள், உரிபொருள்''—போன்று ஒற்று வர வேண்டிய இடத்தில் ஒற்றின்றி அச்சிட்டுள்ளனர். இது பல்கலைக் கழகப் பதிப்பு. இவ்வாறுதான் எழுத வேண்டுமோ என மாணாக்கரும் ஐயுறும் நிலை ஏற்படலாம்.

பல்கலைக் கழகப் பதிப்புகளில் ஒற்றுப் பிழைகள், அச்சுப் பிழைகள் போன்றவை இல்லாமலிருப்பது நல்லது.

நூற்பா 17, பக். 186 ''கொண்டுதலைக்கழிதலும் பிரிந்தவண் இரங்கலும்'' என்பது இளம்பூரணர் பாடம். ''கொண்டுதலைக் கழியினும் பிரிந்தவண் இரங்கினும்'' என்பது நச்சர் பாடம். இவ்வேறுபாட்டினை நாம் ஏற்கனவே தெரிந்திருந்ததால் உரை நோக்கித் தெரிந்து கொள்கிறோமேயொழிய மற்றபடி இடர்ப் பாடாகும் இப்பாடவேறு பாட்டைப் பதிப்பாசிரியர் எளிதாக நூற்பாவை, இளம்பூரணர் உரைப்படி, நச்சர் உரைப்படி என அச்சிட்டிருந்தால் எளிதாகத் தெரிந்துகொள்ளலாம்.

சிறந்த கருத்துகளையும் நன்முறையில் கொடுத்தால்தான் அக்கருத்துத் தெளிவுபடும் என்பது இப்பிழையான பதிப்பைப் பார்த்தபோது தோன்றிற்று.

பாடவேறுபாடுகளோ, உரைப்பாடவேறுபாடுகளோ கொடுக் கப்பெறவில்லை. நோக்கம் உரைத்தொகுப்பும், விளக்கமும் மட்டுமே என்றிருப்பதால் ஆகலாம்.

பயனுடைய நூல்.

**2. தொல்காப்பியம்—பொருளதிகாரம்—புறத்திணையியல் உரை வளம்;** 1983; **(பதி) க. வெள்ளைவாரணன்: பக்.** 16 + ௩ருசு (356) + 58 = 430.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பாரதியார் இவர்கள் உரைத் தொகுப்பும் பதிப்பாசிரியரின் ஆய்வுரையும் அமைந் துள்ளன. அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், உரைப்

பாடவேறுபாடுகள், மேற்கோள் பாடல்களின் பாடவேறுபாடுகள், சொற்பொருள், விளக்கங்கள் போன்றன தரப்பெற்றுள்ளன. தெளிவான முகவுரையும் பதிப்புரையும் உள்ளன. பிற்சேர்க்கையாக, 1. தொல்காப்பியத் துறைகளாகப் புறப்பொருள் வெண்பா மாலையிற் காணப்படுவனவும், புதியனவும் பற்றிய விவரம் அட்டவணை அமைப்பில் தரப்பெற்றுள்ளன. 2. தொல்காப்பியம்—புறத்திணையியல் உதாரணப் பாடல்கள் அட்டவணை என இளம்பூரணர்—நச்சினார்க்கினியர்—நாவலர் பாரதியார் எடுத்துக் காட்டியுள்ள பாடல்களின் இலக்கியத்தை அட்டவணையிட்டுக் காட்டியுள்ளார். நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை இறுதிப் பக்கத்திலுள்ளது.

நல்ல தெளிவான, பிழைகளற்ற பதிப்பு.

3. **தொல்காப்பியம்—பொருளதிகாரம்—களவியல் உரைவளம்;** 1983; **(பதி) க. வெள்ளைவாரணன்; பக்.** 6+உஎஎ (277)=283

பதிப்புரை—தொல்காப்பிய நூற்பா எண்வரிசையில் சுருக்க விளக்கம்—நூல்—நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை என்ற நிலையில் அமைந்துள்ளது.

களவியலுக்கு இளம், நச்சர் இருவர் உரைகளும் பதிப்பாசிரியர் ஆய்வுரையும் அமைந்துள்ளன.

வழக்கம்போல் அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், உரைப்பாடவேறுபாடுகள், மேற்கோள் பாடல்கள் பாடவேறுபாடுகள், விளக்கங்கள் அமைந்துள்ளன.

களவியல் 17ஆம் நூற்பாவில் 'கிழவோன்மேன' என்பது இளம். கொண்ட பாடம். 'கிழவோள்மேன' நச்சர் கொண்ட பாடம். இளம்பூரணர் கொண்ட பாடமே பொருந்துமெனவும் நச்சர் கொண்ட பாடம் அத்துணைப் பொருத்தமுடையதன்றென்பதும் இப்பதிப்பாசிரியர் கருத்து (பக். கய அ). இன்னும் சிந்திக்கவேண்டியுள்ளது.

சில பிழைகளே உள்ளன. நல்ல பதிப்பு. தேய்ந்த அச்சுகளால் அச்சேற்றப்பெற்றுள்ளதால் தெளிவின்மை காணப்படுகிறது.

4. **தொல்காப்பியம் — பொருளதிகாரம் — கற்பியல் உரைவளம்;** 1983; (பதி); **க. வெள்ளைவாரணன்; பக்** 8+உஉரு (225) =233

ஏனைய உரைவளங்கள் போல் எல்லாச் செய்திகளும் உள்ளன. பயனுடைய அடிக்குறிப்புகள்; விளக்கங்கள், ஆய்வுரை; பிழைகளற்ற பதிப்பு.

**5. தொல்காப்பியம்—பொருள்—பொருளியல்—உரைவளம்**; 1983; **(பதி) க. வெள்ளைவாரணன்**; பக். 6+௧௭௨ (172) = 178

முன்னைய உரைவளங்கள்போல் அடிக்குறிப்பில் எல்லாச் செய்திகளும் தரப்பெற்றுள்ளன. பொருளியலுக்கு இளம், நச்சர் இருவர் உரையும் ஆய்வுரையும் உள்ளது. நூற்பா 206, பக். 51இல், 'செறிவும் நிறைவும்' என்பது இளம்பூரணர் பாடம்; 'செறிவும் நிறையும்' என்பது நச்சர் கொண்ட பாடம் என எழுதுகிறார். இது எப்பதிப்பிலுள்ளது, எவ்வேட்டிலுள்ளது போன்ற குறிப்புகளில்லை. பொது நிலையில் இவர் உரைவளங்கள் அனைத்திலும் பயன்படுத்தப்பெற்ற நூல்களின் பட்டியல் தருவதில்லை. பொருளியலுக்கு நச்சர்உரைப்பதிப்பு 1885, 1917,1934, 1948, 1950 எனஐந்து பதிப்புகளுக்குமேல் வந்துள்ளன. எப்பதிப்பைப் பின்பற்றியுள்ளார்; எப்பதிப்பில் இப்பாடம் உண்டு என்பன போன்ற செய்திகளுக்கு நாம் எல்லாப்பதிப்பையும் பார்க்கவேண்டும். உரைவளத்திற்குப் பயன்படுத்தப் பெற்ற பதிப்புகள் தருவது நல்லது.

பொருளியல் உரைவளத்தில் குறிப்பு எனக் கீழ்க் கண்டவாறு தருகிறார். ''முதல் பதின்மூன்று நூற்பாக்களுக்கு ௧ முதல் ௧௩ என்ற வரிசை எண்ணும் ௧௪ ஆவது நூற்பா முதல் தொல்காப்பியப் பொருளதிகாரத் தொடர் எண்ணும் (௨௦௧) பின்பற்றப்பட்டுள்ளது என்பதனை நினைவு கூர்க'' என உள்ளது. இம்மாற்றம் ஏன்? முன்னைய உரைவளங்களில் அந்தந்த இயல் எண்களே தரப்பெற்றுள்ளன. அடுத்து வந்துள்ள மெய்ப்பாட்டியல் உரைவளத்திலும் அந்த இயல் எண்ணே தரப்பெற்றுள்ளது. இதனால் ஒருமை நிலை (Uniformity) இல்லாது போகின்றது.

**6. தொல்காப்பியம் — பொருள் — மெய்ப்பாட்டியல்— உரைவளம்**; 1986; **(பதி) க. வெள்ளைவாரணன்**; பக். 6+௨௩௨=238.

மெய்ப்பாட்டியலுக்கு இளம், நச்சர், பாரதியார் மூவர் உரையும், தம் ஆய்வுரையும் தந்துள்ளார். அடிக்குறிப்பில் வழக்கம் போல் பாடவேறுபாடுகளும் விளக்கங்களும் பிற செய்திகளும் தந்துள்ளார். குறைந்த பிழைகளே உள்ளன. பயனுடைய பதிப்பு.

—

7. **தொல்காப்பியம்—பொருள்—உவமையியல்—உரைவளம்**; 1985; (பதி) **க.வெள்ளை வாரணன்**; பக். 6+கஙச (134) = 140

உவமையியலுக்கு இளம், பேரா. இருவர் உரைகளே கிடைக்கின்றன. இவற்றோடு தம் ஆய்வுரையும் இணைத்து கருத்துகளைத் தெளிவுபடுத்தியுள்ளார். அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், சொற்பொருள் விளக்கங்கள், இலக்கணக் குறிப்புகள் போன்றவை தரப்பெற்றுள்ளன.

பதிப்புமுறையில் அச்சுப்பிழைகள், இடமாற்றப் பிழைகள் உள்ளன. நூற்பா 30இன் ஆய்வுரை 32ஆம் நூற்பாவிற்குப்பின் உள்ளது பக்-102; 102ஆம் பக்கமிருக்க வேண்டிய ஆய்வுரை, 113ஆம் பக்கத்திலுள்ளது. பதிப்பாசிரியர் நூல் முழுவதையும் அச்சேறும்போது பார்த்திருப்பாரானால் இதுபோன்ற பிழைகள் ஏற்பட்டிருக்காது.

8. **தொல்காப்பியம்—பொருள்—செய்யுளியல்—உரைவளம்**; 1989; (பதி)**க. வெள்ளைவாரணன்**; பக். கசு(16)+க0ருய(1050)=1066

அணிந்துரை, பதிப்புரை, தொல்காப்பிய நூற்பா (செய்யுளியல் வரிசைப்படி), சுருக்கவிளக்கம், நூல், பிழைதிருத்தம் (6 பக்கங்கள்) நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை ஆகியவை உள்ளன.

செய்யுளியலுக்கு இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் மூவர் உரைகளும் தொகுப்பாசிரியரின் ஆய்வுரையும் உள்ளன. அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடுகள், உரைப் பாட வேறுபாடுகள், விளக்கங்கள் போன்றவை அமைந்துள்ளன. தொல்காப்பியத்தில் செய்யுளியல் மட்டுந்தான் மிகுதியான நூற்பாக்களையும், இளம்—235; பேரா., நச்சர் 243; மிகுதியான பாடவேறு பாடுகளையும் உடையது. நல்ல பயிற்சியில் இருந்திருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. நல்ல திறனும் அனுபவமும் நுண்மையுமுடைய வெள்ளைவாரணனார் இத்தொகுப்பைச் செய்துள்ளது பாராட்டத் தக்கது. அவர்காலமான பின்பு இந்நூலை வெளியிட்டுள்ளதால், மிகுதியான பிழைகள் வந்து விட்டனவோ எனத் தோன்றுகிறது. அவர் முன்னுரை எழுதியிருந்தால் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும்.

நல்லதாள்—சிறந்த அச்சு, மிகவும் பயனுடைய பதிப்பு.

## அ. கு. ஆதித்தனார்

**தொல்காப்பியம்—சொல்லதிகாரம் (ஆதித்யம்)**; 1977; **கிறித்தவ இலக்கியச் சங்கம்; சென்னை**; பக் viii + 250 = 258

தொல்காப்பியத்தை மாணாக்கருக்குப் பயன்படும் நிலையில் மிகவும் விளக்கமாகச் சந்திபிரித்து அதற்குத்தக தற்காலச் சான்றுகளையும் தந்து வெளியிடுவது ஒரு முறை 1977-இல் அ.கு. ஆதித்தர் தொல்—சொல்லதிகாரம்—மட்டும் மாணாக்கர் புரிந்தும் கொள்ளும் வகையில் 'ஆதித்யம்' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். நூற்பாக்களைத் தெளிவாக மாணாக்கர் புரிந்து கொள்ளும் நிலையில் பிரித்து தற்கால நிலையில் எடுத்துக் காட்டுகளைத் தந்து விளக்கியுள்ளார். பாடவேறுபாடுகள் பற்றி எந்தக் குறிப்பும் இல்லை.

## கு. சுந்தரமூர்த்தி

தொல்காப்பியம் முழுமைக்கும் திருப்பனந்தாள் திருமடத்து நிதியிலிருந்து, திருப்பனந்தாள் அறக்கட்டளை வெளியீடாக கு. சுந்தரமூர்த்தியைப் பதிப்பாசிரியராகக்கொண்டு உரை, உரை விளக்கக்குறிப்புரையோடு தொல் - பதிப்புகள் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வழி வந்துள்ளன.

1. **தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—இளம்பூரணம்**; 1979; **பக்.** 10 + xxi + 438 = 469

ஏற்கெனவே பதிப்பாசிரியரால் தம் சொந்தப் பதிப்பாக 1969-இல் வெளியிட்டதை நன்றியுரையில் குறித்துள்ளார். அதனால் இரண்டாம் பதிப்பாக அமைகின்றது. 21 பக்கங்களில் தெளிவான ஆராய்ச்சி முன்னுரை உள்ளது. அதில் இளம்பூரணர்—நச்சர் இருவர் கொள்ளும் பாடவேறு பாடுகளாக 35 குறிப்பிட்டுள்ளார். (பக். 18-19) அவற்றுள் பல முதற்பதிப்புகளில் (1848, 1868) பாட வேறுபாடுகளாக இல்லை என்பது சுட்டத்தக்கது. பொதுவாகப் பிற்காலத்துப்பதிப்பித்தோர் முதற்பதிப்புகளையோ சுவடிகளையோ நோக்காது பதிப்பித்துள்ளதால் இது போன்ற பாட வேறுபாடுகள் பட்டியலிடப் படுகின்றன. இங்கு "அளபு என்ற பாடத்தினும் அளவு என்ற பாடமே சிறப்புடையதாகும்" என எழுதுகிறார். முதற்பதிப்புகளிலும் பெரும்பான்மையான சுவடிகளிலும் 'அளபு' என்பதே பாடமாக உள்ளது. அதோடு 'அளபு' எடுத்தலால் 'அளபெடை' ஆகின்றது, அளவெடை ஆவதில்லை. இதிலிருந்தும் 'அளபு' என்ற பாடமே பொருந்துமெனத் தோன்றுகிறது.

ஒன்பது இயல்களிலும்; ஒவ்வொரு இயலுக்கு முன்பும் பொருளமைப்பு என இயலில் சுருக்கத்தைத் தந்துள்ளார். தேவையான இடங்களில் உரையின் இறுதியில் தம் விளக்கவுரையைக் கொடுத்துள்ளார். அடிக்குறிப்பிலும் பாட வேறுபாடுகளைச் சுட்டுகின்றார். உரைப்பாட வேறுபாடுகளையும் சில இடங்களில் குறித்துள்ளார். இறுதியாக நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை தரப்பெற்றுள்ளது. வேறு பின்னிணைப்புகள் இல்லை.

**2. தொல்காப்பியம் — சொல்லதிகாரம் — சேனாவரையம்**; 1989; பக். 12+632+8=652

இது இவருடைய மூன்றாம் பதிப்பாகும். முதன்முதலில், 1966-இல் சேனாவரையத்தை இவரே தம் பதிப்பாக வெளியிட்டுள்ளார். 1970இல் மறுபதிப்பு வந்துள்ளது. 1989இல் அண்ணாமலைப் பல்கலைக் கழக வழி வந்துள்ளது. 1970இல் எழுதிய இரண்டாம் பதிப்பின் பதிப்புரை உள்ளது. மூன்றாம் பதிப்பிற்குப் பதிப்புரை இல்லை. அப்பதிப்புரையில் சேனாவரையத்திற்கு முதல் பதிப்பு 1868இல் கோமளபுரம் இராசகோபாலபிள்ளையுடையதெனவும்; இரண்டாம் பதிப்பு 1886இல் சி,வை.தா. வெளியிட்டார் என்றும் குறித்துள்ளார். ஆயின் சேனாவரையத்தை முதன் முதலில் பதிப்பித்தவரும் சி. வை. தா. தான். அப்பதிப்புவெளிவந்தது விபவ ஆண்டு புரட்டாசி மாதம் (1868 அக்டோபர்). கோமளபுரம் இராசகோபாலபிள்ளை பதிப்பு விபவ ஆண்டு கார்த்திகை மாதம் (1868 நவம்பர்—டிசம்பரில் இருக்கலாம்). இதை மு. சண்முகம்பிள்ளை தம் 'தொல்காப்பியப்பதிப்புகள்' என்ற கட்டுரையில் தெளிவுபடுத்தியுள்ளார்*. ஆயின் கு. சுந்தரமூர்த்தி 1970இல் எழுதிய பதிப்புரையைப் படித்தவர் சிலர் சி. வை. தா. சேனாவரையப் பதிப்பு 1886இல் தான் வந்தது என நினைத்து அதை எழுதியும் உள்ளனர்- அதே பதிப்புரையில் ''அப்பதிப்புக்கள் அனைத்தையும் ஒப்பிட்டு இப்பதிப்பைத் திருத்தமாக வெளியிட்டுள்ளேன்'' என எழுதியுள்ளார். முதல் பதிப்புகளைப் பார்த்தவர் எவ்வாறு சரியான காலத்தை உணராது போனார் என்பது புலப்படவில்லை.

இராசகோபாலபிள்ளை பதிப்பில் சேனாவரையத்திற்கு நூற்பாக்கள் 429. சி. வை. தா-463. இவ்வேறுபாட்டையும் சண்முகம்பிள்ளை குறித்துள்ளார். இக்குறிப்பும் சுந்தரமூர்த்தி பதிப்பில் இல்லை.

* தொல்காப்பியப்பதிப்புகள்—தமிழாய்வு எட்டாம் தொகுதி' சென்னைப் பல்கலைக் கழகம்-1978 (பக். 6-7).

எப்பதிப்பிலும், சுவடியிலும் காணப்படாத ஒரு பாடம் இராச கோபாலபிள்ளை பதிப்பில் உண்டு. வேற்றுமையியல் 17ஆம் நூற்பாவில் 'தீமை' என்ற சொல்லுக்குத் 'தின்மை'யென்றும் பாடமுண்டு.

ஆயின் இதுபோன்ற செய்திகள் சுந்தரமூர்த்தி பதிப்பில் குறிப்பிடப்பெறவில்லை.

இருப்பினும் ஆராய்ச்சி முன்னுரையாக 35 பக்கங்கள் எழுதியுள்ளார். ஒவ்வொரு இயலுக்கும் பொருளமைப்புத் தந்துள்ளார். ஒவ்வொரு நூற்பா இறுதியிலும் தம் விளக்கவுரை கொடுத்துள்ளார். நூற்பா பாடவேறுபாடுகள்—1, 7, 10, 24, 33, 46, 47, 66, 75, 90, 97, 109, 114, 120, 152, 154, 158, 173, 174, 202, 212, 217, 222, 223, 231, 235, 238, 241, 270, 272, 281, 282, 296, 299, 322, 353, 358, 362, 365, 390, 398, 404, 408, 416, 421, 425, 427, 440, 449, 451. இந்நூற்பாக்களின் அடிக்குறிப்பில் குறித்துள்ளார். உரைப்பாடவேறுபாடுகளையும் சில இடங்களில் தந்துள்ளார். இறுதியில் நூற்பா முதற்குறிப்பகர வரிசை உள்ளது. பொது நிலையில் சொல்லதிகாரத்திற்கு எல்லா உரையாசிரியரின் உரையையும் இவர் வெளியிட்டுள்ளதால் எல்லா உரைகளையும் பார்த்துள்ளார் என்பது தெரிகிறது. முதற்பதிப்புகளைக் கூர்ந்து நோக்கி இருந்தால் இன்னும் பல செய்திகளை நாம் தெரிந்திருக்கலாமெனத் தோன்றுகிறது.

3. **தொல்காப்பியம்—பொருள் (பின்னான்கு இயல்கள்)— பேராசிரியம்**; 1985; **பக்**. xxxii + 740 = 772

பொருளதிகாரத்தின் பிற்பகுதியாகிய நான்கு இயல்களுக்குரிய பேராசிரியர் உரை 1985இல் வெளியிடப்பெற்றுள்ளது. இதிலும் ஆராய்ச்சி முன்னுரை என 32 பக்கங்கள் எழுதியுள்ளார். பேராசிரியர் என்ற பெயரில் ஐவர் காணப்படுகின்றனர் என்பது இப்பதிப்பாசிரியர் கருத்து. பாடவேறுபாடுகள் பற்றிய குறிப்பு உண்டு (பக். xvi). உரையாசிரியர் பாடவேறுபாடுகள் பற்றிக் குறிப்பிடுவதுண்டு. பேராசிரியர் செய்யுளியலில் 101ஆம் நூற்பா உரையில் "இனி இக்காலத்துள்ள ஆசிரியருள் ஒரு சாரார் 'தொண்டு தலையிட்ட பத்துக் குறையெழு நூற்றொன்றும்,' எனப் பாடந்திரிப்பாரும், இன்னொரு சாரார், 'ஏழு நூற்றொன்றும்' எனப் பாடந்திரிப்பாரும் உளர்" என எழுதுகின்றார். இங்கு வேறுபடுத்துதல் என்பதைத் திரித்தல் எனச் சுட்டுவது குறிக்கத்தக்கது. இப்பகுதியிலுள்ள மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல்,

மரபியல் ஆகிய நான்கு இயல்களுக்கும் உரைக்குமுன்பு பொருள மைப்புத் தந்துள்ளார். அடிக்குறிப்பில் நூற்பா பாடவேறுபாடு களும், உரைப்பாடவேறுபாடுகளும் தந்துள்ளார். இறுதியில் நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை உள்ளது.

4. **தொல்காப்பியம்—பொருளதிகாரம் (முதலைந்து இயல்கள்)** 1986; **நச்சினார்க்கினியம்**; **பக்**. 5+501+2=508; viii+xviii+523=549 **(இரு தொகுதிகள்)**

1986இல் பொருளதிகாரத்தின் முன் பகுதியாகிய ஐந்து இயல் களுக்கும், நச்சினார்க்கினியர் உரையை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டுள்ளனர். முதல் தொகுதியாகிய அகத்திணையியல், புறத்திணையியலில் உரைக்குமுன்பு அவ்வியல் பொருளமைப்புத் தந்துள்ளார். அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் குறித்துள்ளார். நூற்பா எண்கள்—6, 8, 11, 14, 15, 22, 32, 33, 39, 40, 41, 58, 59, 61, 64, 67, 68, 69, 72, 73, 75, 76, 77, 78, 79, 85, 90, 91, ஒன்றி ரண்டிடங்களில் விளக்கம் தந்துள்ளார். ஒவ்வொரு நூற்பாவிற்கும் உரைக்குப் பின்பு தம் விளக்க உரை தந்துள்ளார். இறுதியில் நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை உள்ளது.

அடுத்த தொகுதியில் களவியல், கற்பியல், பொருளியல் உள்ளன. 8 பக்க அளவில் ஒரு பதிப்புரை எழுதியுள்ளார். அதில் தொல்காப்பியப் பதிப்புகள் பொது நிலையில் தரப்பெற்றுள்ளன. வழக்கம்போல் ஒவ்வொரு இயலுக்கு முன்பும் அவ்வியலின் பொருள மைப்பு தந்துள்ளார். அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் கொடுத் துள்ளார். பதினெட்டுப் பக்கங்களில் ஆராய்ச்சி முன்னுரை எழுதியுள்ளார். நச்சினார்க்கினியர் மேற்கோளாக எடுத்தாண்டி ருக்கும் இலக்கியங்களைக் காலவரிசைப்படுத்தித் தந்துள்ளார். (பக். xvi-xvii). பா. வே. நூற்பா எண்கள்—95, 99, 100, 101, 104, 105. 107, 108, 111, 114, 115, 117, 127, 128, 130, 135, 136, 146, 147, 150, 151, 158, 163, 168, 169, 170, 171, 172, 174, 175, 176, 177, 179, 193, 196, 199, 202, 203, 207, 208, 210, 214, 217, 218, 220, 221, 222, 229, 231, 233, 235, 238, 243, 244, 247.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், இதுவரை வெளிவந்துள்ள தொல்காப்பிய உரைகளைத் தொகுத்து—விளக்கக் குறிப்புடன் வெளியிடவேண்டுமென எண்ணித் தொல்காப்பிய வல்லுநர் **ஆ. சிவலிங்கனாரைப்** பதிப்பாசிரியராகக் கொண்டு செப்டம்பர் 1980-முதல் உரைவளப் பதிப்புகளை வெளியிட்டு வருகின்றது.

**1. தொல்காப்பியம்—சிறப்புப்பாயிரம்; செப்.** 1980; **பக்.** 247

15 வரிகள் உள்ள சிறப்புப்பாயிரம் தொடர்பாக வந்துள்ள செய்திகள் அனைத்தும் தொகுக்கப்பெற்று விளக்கமும் தரப்பெற்றுள்ளன. ஓலைச்சுவடிகள், கையெழுத்துப் படிகள், அச்சு நூல்கள் பார்க்கப்பெற்றுள்ளன. சுவடிவேறுபாடு, ஐந்திரம்—அயிந்திரம் என்பது மட்டுமே. நூலுக்குரிய அமைப்புகளாகிய பதிப்புரை, முன்னுரை, பொருளடக்கம், பின்னிணைப்புகள், பயன் கொண்ட நூல்கள், சுவடிகள் பற்றிய குறிப்புகள் அனைத்தும் உள்ளன.

**2. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நூன்மரபு; டிச.** 1980; **பக்.** xxv+182=207

நூன்மரபு பற்றிய இளம், நச்சர், வெங்கடராஜுலு ரெட்டியார், சுப்பிரமணிய சாஸ்திரியார், வெள்ளைவாரணனார்—இவர் உரைகள், கருத்துகள், ஆய்வுகள் அனைத்தும் இணைத்துத் தம் கருத்தையும் சிவலிங்கனார் சுட்டியுள்ளார். சுவடிவேறுபாடுகள் முன்பு அச்சில் வந்த நூல்களிலுள்ளவை அனைத்தும் கொடுக்கப்பெற்றுள்ளன. சொல்லகராதி உட்பட நூலுக்குரிய எல்லா உறுப்புகளும் இதில் உள்ளன. சிறப்புப்பாயிரம், நூன் மரபு நூற்பாக்களின் ஆங்கில மொழிபெயர்ப்புகள் இலக்குவனார்' தமிழ்சுவலபில் இரண்டும் நூலின் முன் பகுதியில் கொடுக்கப் பெற்றுள்ளன.

**3. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—மொழிமரபு; சூன்** 1981; **பக்.** xvi+207=221

பதிப்புக்குரிய கூறுகள் அனைத்தும் உள்ளன. முதற்குறிப் பகராதி, சொல்லகராதிகள் உள்ளன. இந்நூல் வெளிவரும் காலத்துவரை வந்துள்ள கருத்துகள் அனைத்தும் பல நிலைகளில் தரப்பெற்றுள்ளன. பொருளதிகாரத்தில் பேராசிரியர் எங்கெல்லாம் மொழிமரபு நூற்பாக்களைக் கையாண்டுள்ளார் என்பது தரப் பெற்றுள்ளது. வழக்கம்போல் சுவடிவேறுபாடுகள் தரப் பெற்றுள்ளன. நல்ல பதிப்பு. உரைவளப் பதிப்புகள் அனைத்தும் நன்கு பல நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றை நோக்கிய பின்பு செய்யப்பெற்றுள்ளன.

**4. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—பிறப்பியல்; டிச.** 1981 **பக்.** xliv+132=176

க. முருகையனின் இரண்டு ஆங்கிலக் கட்டுரைகள் முதற்கண் வைக்கப்பெற்றுள்ளன. இலக்குவனார், தமிழ்சுவலபில் மொழி

பெயர்ப்புகள்—நூன்மரபுபோல் ஆய்வறிஞர் கருத்துகள் (தெ. பொ. மீ., முருகையன்) இடம் பெற்றுள்ளன. நல்ல பதிப்பு.

**5. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—புணரியல்; மார்ச் 1982; பக். xxxii+167=199**

மொழிபெயர்ப்புகள்—அறிஞர் கருத்துகள் தரப்பெற்றுள்ளன. சுவடி வேறுபாடுகள் 1969இல் அடிகளாசிரியர் பதிப்பிலுள்ளவற்றைக் குறித்துள்ளார். எழுத்து முதற் பதிப்புகள் 1847, 1868 இரண்டும் இவர் பார்க்கவில்லை என்பதைச் சில பாடவேறுபாட்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. நூற்பா 139.

**6. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—தொகைமரபு; மே 1982; பக் xxvii+156=183**

எப்போதும்போல் பதிப்புக்கூறுகள் அனைத்தும் உள்ளன. அல்-இல் என்பதற்குரிய வேறுபாடு கூறப்பெற்றுள்ளது (பக்-23). பதிப்பாசிரியரின் இரண்டு கட்டுரைகள் இணைப்பாகத் தரப் பெற்றுள்ளன. மொழிபெயர்ப்புகள், அறிஞர் கருத்துகள் உண்டு. உரை வளம் மிகுந்த உழைப்பாலும் முயற்சியாலும் செய்யப்பெற்றுள்ளது என்பதை இந்நூலும் தெளிவுபடுத்துகிறது.

**7. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—உருபியல்; நவம். 1982; பக். xxiv+88=112**

பதிப்புக்குரிய தகுதிகள் அனைத்தும் உள. மொழிபெயர்ப்புகள்—அறிஞர் கருத்துகள்—அடிகளாசிரியர் பதிப்பையொட்டிய சுவடி வேறுபாடுகள் என்பன காணப்படுகின்றன.

**8. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—உயிர்மயங்கியல்; டிச. 1982 பக். xxiv+228=252**

பதிப்புக் கூறுகள் உள. பயன்படுத்தப்பெற்ற நூல்கள், சொல்லகராதி எப்போதும்போல். முதற்பதிப்புகள் பார்க்காததால் குறிப்பிடும் சுவடி வேறுபாடுகள் பொருந்துமாறில்லை. சுவடி வேறுபாடுகள் குறிப்பிடும் அடிகளாசிரியரும் தொல்—எழுத்து—நச்சர். 1847 ஐப் பார்த்ததாகத் தெரியவில்லை.

**9. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—புள்ளிமயங்கியல்; ஏப். 1983; பக். xxxi+252=283**

மொழிபெயர்ப்புகள்—அறிஞர் கருத்துகள்—பிற்கால இலக்கண நூல்களின் ஒப்புமைகள் காட்டப்பெற்றுள்ளன. சமீபகாலத்து

வந்த கட்டுரைக் குறிப்புகள் மு. வ.; மு. வை. அரவிந்தன்; இரா. மதிவாணன் போன்றோர் எண்ணங்களும் இணைக்கப்பெற்றுள்ளன.

**10. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—குற்றியலுகரப் புணரியல்; செப்.** 1983; **பக்.** xxiv+200=224

பதிப்புக்குரிய தகுதிகள்—முன் நிலைகள் பின் இணைப்புகள் அனைத்தும் உள. இந்நூல் அச்சாகும் வரையுள்ள தொடர்புடைய கருத்துகள் எல்லாம் சேர்க்கப்பெற்றுள்ளன. சில இடங்களில் பாட வேறுபாடுகள் எதுபொருந்தும் எனவும் விளக்கம் தந்துள்ளார். கடுமையான உழைப்பும் முயற்சியும் தெரிகின்றன.

**11. தொல்காப்பியம்—சொல்லதிகாரம் — கிளவியாக்கம்; சூலை** 1982; **பக்.** xvi+493=509

சொல்லதிகாரத்திற்குரிய இளம், நச்சர், சேனா, தெய்வ, கல், அரசு ஆகிய ஆறு உரைகளும் முறைப்படி தொகுத்துத் தனித் தனியாகத் தரப்பெற்றுள்ளன. மொழிபெயர்ப்புகள்,—இலக்குவனார், கமில்சுவலபில். பதிப்பாசிரியர் தம் கருத்துக்களைத் தேவையான இடங்களில் குறித்துக் கருத்துகளைத் தெளிவுபடுத்தியுள்ளார். நல்ல முயற்சி. பாராட்டத்தக்க பதிப்பு. சொல்லதிகாரத்திற்குரிய முதற்பதிப்புகளை இவர் பார்த்திருந்தால் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும்.

**12. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—வேற்றுமையியல்; அக்.** 1983; **பக்.** xxiv+248=272

ஆய்வு—பொருட்சுருக்கம் என 24 பக். எல்லா இலக்கண நூல்களிலும் உள்ள வேற்றுமைப்பொருள் நிலை அட்டவணையைப் பிற்பகுதியில் கொடுத்துள்ளார். பயன்படுத்தப்பெற்ற நூல்கள், சொல், தொடர், மேற்கோள் அகராதி—சூத்திர முதற்குறிப்பகராதி இவை உள்ளன. உரைத்தொகுப்பு—மொழிபெயர்ப்புகள்—அறிஞர் கருத்துகள் ஆகியன வழக்கம் போல் உள.

**13. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—வேற்றுமைமயங்கியல்; மே** 1984; **பக்.** xiv+204=218

உரைகள், மொழிபெயர்ப்புகள், பதிப்பாசிரியர் குறிப்புகள், தற்கால அறிஞர் கருத்துகள், பதிப்புக் கூறுகள், சுவடி வேறுபாடுகள், அனைத்தும் உள.

**14. தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—விளிமரபு; மே** 1984; **பக்.** xii+104=116

பதிப்பு உறுப்புகள் — முன்பகுதிகள், பின்னிணைப்புகள், வழக்கம்போல் உரைவளப் பகுதிகள்

15. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—பெயரியல்; சூலை** 1984; **பக்.** xv+204=219

உரைப்பகுதிகள், மொழிபெயர்ப்புகள், தற்கால அறிஞர் கருத்துகள்—பதிப்பாசிரியர் குறிப்புகள், முன், பின் இணைப்புகள், பயன்பெற்ற நூல்கள், பிற என அமைந்துள்ளது.

16. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—வினையியல்; செப்.** 1984 **பக்.** xxiv+328=352

வழக்கம்போல் அனைத்துச் செய்திகளும், பிற இலக்கண நூற்பாக்கள், கருத்துகள், சுவடிவேறுபாடுகள். அறிஞர் எண்ணங்கள்—பதிப்பாசிரியர் குறிப்புகள், பிற.

17. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—இடையியல்; சூலை** 1986; **பக்.** xvi+222=238

வழக்கம்போல் எல்லாச் செய்திகளுடன் பாவலரேறு பாலசுந்தரம் உரையும், டி. ஆல்பர்ட் மொழிபெயர்ப்பும் இணைந்துள்ளன. சுவடிவேறுபாடுகள் உண்டு.

18. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—உரியியல்; அக்.** 1987; **பக்.** xx+184=204

முன்னைய நூல்களைப்போல் எல்லா உறுப்புகளுடனும் தற்கால ஆய்வறிஞர் கருத்துகளுடனும் முன் பின் இணைப்புகள் மற்றும் சுவடி வேறுபாடுகளுடனும் அமைந்துள்ளது.

19. **தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—எச்சவியல்; டிச.** 1988; **பக்** xix+443=462

உரைப்பகுதிகள்; மொழிபெயர்ப்புகள்; முன் பின் இணைப்புகள்; அறிஞர் கருத்துகள்; சுவடிவேறுபாடுகள் ஆகிய உள.

20. **தொல்காப்பியம்—பொருளதிகாரம்—அகத்திணையியல்; மார்ச்** 1991; **பக்.** xvi+487=503

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் முதலியலாகையால் இது தனக்கெனச் சில தனிச் சிறப்புகளைக் கொண்டுள்ளமை இந்நூலில் வெளிப்படுகின்றது. நூற்பா, ஆங்கில மொழிபெயர்ப்பு, ஒத்த பிறநூற் செய்திகள், மரபுரைகள், தற்கால உரை, உரைவளப் பதிப்பாசிரியர் கருத்துகள் என்பன பிறதொகுதிகளில் போல் இங்கும் தரப்படுகின்றன. தேவையானவிடத்து அடிக்குறிப்பு

விளக்கங்களும் அளிக்கப்படுகின்றன. முன்பகுதியில் பொருட் சுருக்கமும் உண்டு. சுருக்க விளக்கம், பிழைதிருத்தம், பயன்பெற்ற நூல்கள், நூற்பா முதற்குறிப்பகராதி, சொல் தொடர் அகராதி முதலியன பின்னிணைப்பாக அமைந்துள்ளன. பதிப்பாசிரியரின் நேரடிப் பார்வையில் அச்சாகவில்லையாதலால் பிழைகள் மிகுதி.

**21. தொல்காப்பியம்—பொருளதிகாரம்—மரபியல்; செப். 1981; பக். xxxxviii+208=256**

தொல்காப்பிய உரைவளத் திட்டத்தின் கீழ் நான்காவதாக வெளிவந்துள்ள இந்நூலை மட்டும் **கு. பகவதி** பதிப்பித்துள்ளார். நூற்பா, ஆங்கில மொழிபெயர்ப்பு, ஒப்புமை நூற்பாக்கள், இளம் பூரணர், பேராசிரியர் உரைகளுடன் க. வெள்ளைவாரணனார் மற்றும் சி. இலக்குவனாரின் மாறுபட்ட எண்ணங்களும் தேவையான இடங்களில் இணைக்கப்பட்டுள்ளன. 1969இல் கழகம் வெளியிட்ட இளவழகனார் பதிப்பான பொருளதிகார இளம் பூரணத்தை அடியொற்றியுள்ளது. பொருளதிகார முன் பகுதியில் புலவர் குழந்தை இணைத்துள்ள மரபியல் நூற்பா உரைகளும் உரிய இடத்தில் உள்ளன. முன்பகுதியில் பதிப்பாசிரியரின் மரபியல் ஆய்வுரை அமைகிறது. நூற்பா முதற்குறிப்பகராதி சொல்லகராதி ஆகியன இறுதியில் உள.

பொது நிலையில் உரைவளப் பதிப்புகள் அனைத்தும் மிகுந்த உழைப்புடனும், நன்முயற்சியுடனும் முறைப்படியும் செய்யப் பெற்றுள்ளன. முதற்பதிப்புகளைப் பார்த்துச் செய்யவேண்டுமென்ற எண்ணம்—அவைகளைப் பற்றிய முக்கியத்துவம் அப்போது உணரப்படாததால் அது ஒரு குறையாக அமைகின்றது. உரைப் பாடவேறுபாடுகளை அச்சு நூல்களைக் கொண்டு குறித்துள்ளார்.

**22. Tolkāppiyam Phonology and Morphology—An English Translation; (Tr) D. Albert; July 1985; PP. xxiv+288=312**

உரைவளப் பதிப்புகளை வெளியிடுவதில் மட்டுமல்லாது மொழிபெயர்ப்புகளை வெளியிடுவதிலும் நிறுவனம் ஆர்வம் காட்டியுள்ளது. 1985இல் டி. ஆல்பர்ட் தொல்காப்பியம், எழுத்து, சொல்லை மொழிபெயர்த்துத்தர வெளியிட்டுள்ளது. இடதுபக்கம் தமிழ் மூலமும் அதற்கு இணையாக வலதுபக்கம் மொழிபெயர்ப்புமாக நூல் அமைந்துள்ளது. முன்பகுதியில் தொல்காப்பியம் மற்றும் இம்மொழிபெயர்ப்பிற்கான அறிமுக உரைகள் உள.

இயல்வாரியாக அமைந்துள்ள அடிக்குறிப்புகளில் தகுந்த விளக்கங்களை ஆங்கிலத்தில் அமைத்துள்ளார், நூலின் இறுதியில் மேலாய்விற்காகச் சில தலைப்புகளையும் அவற்றிற்கான குறிப்பு களையும் தந்திருப்பது சிறப்பாகும். மொழிபெயர்ப்பில் பயன் கொண்டுள்ள ஆங்கிலக் கலைச் சொற்களுக்கான அகரவரிசையை இணைத்திருப்பதும் சுட்டத்தக்கது.

23. Tolkāppiyam; (Tr) Kamil Zvelebil; Journal of Tamil Studies Vol. 1—5. 7, 8; 13, 21, 28.

நிறுவன வெளியீடான 'தமிழியல்' அரையாண்டு இதழிலும் தொல்காப்பிய எழுத்ததிகார, சொல்லதிகார மொழிபெயர்ப்புகள் தொடராக வெளிவந்துள்ள நிலை குறிக்கத்தக்கது. தொல் மூலமின்றி மொழிபெயர்ப்பு மட்டும் சிறப்புப் பாயிரம் முதல் ஒவ்வொரு இயலாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அவற்றிற்கு ஆங்கில விளக்கவுரையும் அடிக்குறிப்புகளும் தந்துள்ளது பாராட்டத்தக்கது. இவற்றில் ஆங்காங்கே தொல்காப்பியத்தின் பெருமையை நன்கு புலப்படுத்தியுள்ளார்.

நூற்பாக்களுக்குத் தொடரெண் ஒவ்வொரு அதிகாரத் திற்குமாகத் தரப்பட்டுள்ளது. சொல்லதிகாரம் வேற்றுமை மயங்கியல் வரையே மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது.

தமிழைப் பல ஆண்டுகள் தமிழகத்திலேயே வந்து கற்றுத் தெரிந்த காரணத்தால் தமிழின் பெருமையை உணர்ந்து நன் முறையில் மொழிபெயர்த்துள்ளார். எஞ்சிய பகுதிகளுக்கும் இல்லையே என்ற ஏக்கம் இம்மொழிபெயர்ப்பைக் கற்பாருக்கு எழுவது தவிர்க்க இயலாதது.

## பாலசுந்தரம்

**தொல்காப்பியம்—ஆராய்ச்சிக்காண்டிகையுரை (4 தொகுதி கள்)**; 1988; 1989; **தாமரை வெளியீட்டகம்; தஞ்சாவூர்.**

தொல்காப்பியம்—ஆராய்ச்சிக்காண்டிகையுரை—எனப் பாவல ரேறு, பாலசுந்தரம், 4 தொகுதிகளைத் தந்துள்ளார்.

எழுத்ததிகாரம்—1988-செப்டம்பரிலும்(பக். xxxx+365=405)

சொல்லதிகாரம்—1988-அக்டோபரிலும்(பக். xxxii+428=460)

பொருளதிகாரம்—அகத்திணையியல்—புறத்திணையியல்-1989 நவம்பரிலும் (பக், lxiii+286=349)

பொருளதிகாரம்—களவு, கற்பு, பொருள், மெய்ப்பாடு, உவமவியல் 1989-அக்டோபரிலும் (பக். xxxvi + 396 = 432) வெளிவந்துள்ளன.

இந்நான்கு தொகுதிகளுக்கும்—எழுத்திற்கு—ஆய்வு அறிமுகவுரை எனவும் (25 பக்) சொல்லுக்கு—ஆராய்ச்சி முன்னுரை எனவும் (26 பக்) பொருள் அகம், புறத்திற்கு—ஆய்வு முன்னுரை எனவும் (31 பக்) பொருள்—களவு, கற்பு, பொருள், மெய்ப்பாடு, உவமத் திற்கு ஆராய்ச்சி முன்னுரை எனவும் (32 பக்) தி.வே. கோபாலையர் எழுதியுள்ளார். பதிப்பாசிரியரின் தமிழ் உணர்வையும், உரைத் தெளிவையும் பல இடங்களில் பாராட்டியுள்ளார். குறைகளையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

எழுத்ததிகாரப் பதிப்பு பக்-7இல் "மூலபாடம் சிதையாமல் உளதா, பாடவேறுபாடுகள் உண்டா எனவும் ஆராய்ந்து இஃது அறிவியலுக்கு ஒத்துள்ளதா எனவும் பலகால் நடுவு நின்று சிந்தித்து வரையலானேன்" என எழுதியுள்ளதால் இவற்றைப்பற்றி நன்கு சிந்தித்துள்ளார் எனத் தெரிகிறது.

எழுத்ததிகாரத்தில் பாடவேறுபாடுகளாக 14 வேறுபாடுகளை ஆய்வு அறிமுக உரையில் கோபாலையர் குறித்துள்ளார். நூற்பா எண்கள்—1, 16, 33, 39, 102, 112, 132, 140, 152, 211, 228, 342, 359, 472.

இப்பாடவேறுபாடுகள் பிறரால் குறிப்பிடப்பெறாதவை. இப்பாடவேறுபாடுகளைத் தருவதற்குச் சான்றாகச் சுவடிகளோ, முற்பதிப்புகளோ உள்ளதாகத் தெரியவில்லை. இவர் கொண்ட பொருளடிப்படையே அவற்றிற்குக் காரணமாக அமைவதாகத் தோன்றுகிறது.

ஆயின் நூற்பா33இல் 'அளபிறந் **துயிர்த்தலும்**' என்பதற்கு 'அளபிறந் **திசைத்தலும்**' என்ற பாடத்தைக் கொள்கிறார். இதற்கு முற்பதிப்புச் சான்றுகள் இல்லை. சுவடி எண் 1052இல் 'இசைத்தல்' என்ற பாடமுண்டு. அதை இவர் குறிப்பிடவில்லை. ஒருவேளை இவர் ஊகம் சரியாக அமைந்துள்ளதோ எனத் தோன்றுகிறது.

சொல்லதிகாரத்தில் எட்டு இடங்களில் பாடவேறுபாடுகள் கொண்டுள்ளார் (பக் xi). சில நூற்பாக்கள் 'இருந்து மறைந்தி ருத்தல் வேண்டும்' என்றும் சுட்டுகின்றார்.

பொருளதிகாரத்தில் பல இடங்களில் இளம்பூரணர் பாடத்தை ஏற்றுக்கொள்கிறார். சில இடங்களில் நச்சினார்க்கினியர்

பாடத்தைக் கொள்கின்றார். அவர் புதிதாகக் கூறுகின்ற பாடங் களாக இரண்டு அமைகின்றன (பக் ix-பொருள்-11).

பல ஆண்டுகளாகக் கரந்தைப் புலவர் கல்லூரியில் தொல் காப்பியம் பயிற்றுவித்த காரணத்தாலும் தாம் தெளிவாகத் தொல் காப்பியத்தைப் பயின்ற காரணத்தாலும் எல்லா உரையாசிரியரின் கருத்துகளும் இவர் உரையில் உள்ளன. உரையாசிரியரைப் போற்றிப் பாராட்டுகிறார். தமக்குச் சரியானவற்றை ஏற்றுக் கொள்கிறார்.

எழுத்ததிகாரத்தில் பிழைதிருத்தத்தில் 5 பக்கங்களில் 190 பிழைகளைச் சுட்டியுள்ளார். இதற்கு மேலும் பல பிழைகள் உள்ளன. சொல்லதிகாரத்தில் மூன்று பக்கங்களில் 112 பிழை களுக்குத் திருத்தம் தந்துள்ளார். அதோடு "இன்றியமையாத சிலவற்றிற்கே திருத்தம் கொடுக்கப்பட்டுள்ளது. ஏனையவற்றை மாணாக்கர் திருத்திக்கொள்வாராக" (பக்-426) என எழுதுகிறார். சில-112-ஆனால்-பல-?. பொருள்—தொகுதி Iஇல் ஒரு பக்கம் பிழை திருத்தம் தந்து "பிழைகளைத் திருத்திக்கொண்டு பயில்க" (பக்-Lxiii) எனக் குறிக்கின்றார். பொருள்—தொகுதி—IIஇல் பிழை திருத்தக் குறிப்பு இல்லை. பிழைகள் உள. அச்சு நிலை எல்லா வகைகளிலும் வளர்ந்துள்ள இக்காலத்தில் மிகுதியான அச்சுப் பிழைகளோடு தமிழில் நூல்கள் வரும்போது நெஞ்சம் நடுக்குறு கின்றது. அன்று முதல் இன்று வரை மேல் நாடுகளில் அச்சிடப் பெறும் நூல்களில் ஒரு பிழைகூடக் காண இயலவில்லை.

நான்கு தொகுதிகளிலும் சூத்திர முதற்குறிப்பு அகரநிரல் தவிர எவ்விதப் பின் இணைப்பும் இல்லை. உள்ளுறை அல்லது பொரு ளடக்கம் இல்லாத நூல்களாக இவ்வாராய்ச்சிக் காண்டிகையுரைத் தொகுதிகள் நான்கும் அமைந்துள்ளன. பயன்பெற்ற நூல்கள் பற்றிய குறிப்பில்லை. பதிப்பு முறைகள் எவ்வகையிலும் பின் பற்றப்பட்டதாகத் தோன்றவில்லை.

## இராம. சுப்பிரமணியன்

**தொல்காப்பியம்—எழுத்துப்படலம் (பேருரை)**; 1989; **தமிழ் வளர்ச்சி மன்றம்**; **சென்னை**; **பக்.** lxxxviii + 1008 = 1096

இவரின் தொல்காப்பியம்—எழுத்துப்படலப் பேருரையைத் தமிழ் வளர்ச்சி மன்றம் 1989இல் வெளியிட்டுள்ளது.

தொல்காப்பியத்திற்கு இதுவரை வந்துள்ள உரைகளெல்லாம் பார்த்துத் தெளிவுபடுத்தித் தம் பேருரையை எழுதியுள்ளார்.

இந்நூலின் வெளியீட்டு நோக்கம் இன்றைய தமிழர் தொல்—எழுத்ததிகாரத்தை நன்கு புரிந்துகொள்ள வேண்டுமென்பதுதான். அதனால் எல்லாவற்றிற்கும் மிகத் தெளிவான விளக்கங்களுடனும், காட்டுகளுடனும் பேருரை அமைந்துள்ளது பாராட்டத்தக்கது.

தொல்காப்பியரின் மூலபாடம் என்னவாயிருக்கலாம்? அக்காலத்துத் தமிழின் நிலை என்ன? என்பனபற்றி மிகுதியாக ஆயவில்லை. இருப்பினும் நூற்பா 158இல் (பக்-320) 'மிகற்கை மருங்கின் இயற்கை யாதலும்' என்ற பகுதியிருந்திருக்கலாமே எனக் கருதிப் பிறைகோடுகளுக்குள் அதனைத் தந்துள்ளார்.

'மானமில்லை' எனத் தொல்காப்பியத்தில் பயன்படுமிடங்கள் அனைத்தையும் 'ஆனமில்லை' எனப் பிரித்து ஆனம்—குற்றம் எனப் பொருள் தருகின்றார் (பக்-101-105). மானம்-என்ற சொல்லுக்குக் குற்றம் என்ற பொருளில்லை என்பதனைத் திருக்குறள் காட்டுகள் பல தந்து நிறுவுகிறார். மானம் என்ற சொல்லுக்குச் சிறப்பு, பெருமை என்ற பொருள்கள் உள. மானமில்லை என்றேகொண்டு—சிறப்பில்லை—பெருமையில்லை எனப் பொருள்கொள்ளலாம் என்பதொன்று! 'ஆனம்' என்ற வடிவம் குற்றம் என்ற பொருளில் தொல்காப்பியத்திலோ அல்லது சங்க இலக்கியங்களிலோ இருப்பதாகத் தோன்றவில்லை. நன்கு சிந்திக்கத் தூண்டும் கருத்து. இருப்பினும் அவர் குறிப்பிட்டுள்ள படி பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் இக்கருத்தை முன்பு குறிப்பிட்டுள்ளதும் நினைக்கத்தக்கது.

## நிர்மல் செல்வ மணி

Tolkappiyam; Akattinai Iyal; 1989; Sobitham; Nagercoil; P. iv+16=20

வீ. ப. கா. சுந்தரனார் அறிமுக உரை வழங்க, நிர்மல் செல்வ மணி என்னும் ஆங்கிலப் பேராசிரியர் தொல்காப்பியத்தின் பாலுள்ள மிகுந்த ஈடுபாட்டின் விளைவாக இம்மொழி பெயர்ப்பைச் செய்துள்ளார். பொருளதிகார முதலியலுக்கு மட்டுமாக இது அமைந்துள்ளது. ஆங்கில மொழிபெயர்ப்பும் தமிழ் மூலமுமாக நூல் அமைகிறது. அடிக்குறிப்பில்ஆங்காங்கே தேவையான விளக்கங்களும் கொடுத்துள்ளார்.

பயனுள்ள முயற்சி. நூல் முழுமைக்கும் தொடர வேண்டும்.

# பின்னிணைப்பு

## தொல்காப்பியப் பதிப்புகள் - கால வரிசை

| | காலம் | நூல் பகுதி, உரை | பதிப்பாசிரியர் | நூலுள் பக்க எண் |
|---|---|---|---|---|
| 1 | ஆக. 1847 (பிலவங்க, ஆவணி) | எழுத்து, நச்சர் | மழவை. மகாலிங்கையர் | 62 |
| 2 | 1858 | தொல். நன். மூலம் | சாமுவேல் பிள்ளை | 64 |
| 3 | செப். 1868 (விபவ.புரட்டாசி) | சொல். சேனா. | சி.வை. தாமோதரம் பிள்ளை | 69 |
| 4 | நவம். 1868 (விபவ, கார்த்திகை) | ,, | இராசகோபால பிள்ளை | 75 |
| 5 | நவ. 1868 | எழுத்து, இளம் | சுப்பராய செட்டியார் | 80 |
| 6 | 1868 | சூத்திர விருத்தி- சிவஞானமுனிவர் | ஆறுமுக நாவலர் | 82 |
| 7 | 1885 | பொருள், நச்சர், பேரா. | சி. வை. தா. | 72 |
| 8 | சூன். 1891 (கர, வைகாசி) | எழுத்து, நச்சர்* | ,, | |
| 9 | 1892 | சொல், நச்சர் | ,, | 75 |
| 10 | 1905 | பாயிரம். சண்முக விருத்தி | அரசன் சண்முகனார் | 82 |
| 11 | 1916 | பொருள் (1. 2) நச்சர் | பவானந்தம் பிள்ளை | 82 |
| 12 | 1916 | பொருள் (3, 4, 5), நச்சர் | ,, | 83 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13 | 1917 | பொருள், பேரா | ,, | 83 |
| 14 | 1917 | பொருள் (8) நச்சர் | ரா. ராகவையங்கார் | 85 |
| 15 | 1920 | பொருள் (1, 2), இளம் | கா. நமச்சிவாய முதலியார் | 86 |
| 16 | 1921 | ,, | வ.உ. சிதம்பரம் பிள்ளை | 90 |
| 17 | மார்ச் 1922 | எழுத்து, சொல் (மூலம்) | கா. நமச்சிவாய முதலியார் | 86 |
| 18 | மே 1922 | தொல், மூலம் | புன்னைவனநாத முதலியார் | 93 |
| 19 | 1922 | பாயிரங்கள்* | கா. நமச்சிவாய முதலியார் | |
| 20 | 1923 | பொதுப்பாயிரம்* | சதாசிவ பண்டாரத்தார் | |
| 21 | 1923 | எழுத்து, நச்சர் | கனகசுந்தரம் பிள்ளை | 94 |
| 22 | மார்ச் 1923 | சொல், சேனா. | கந்தசாமியார் | 95 |
| 23 | 1924 | பொருள், மூலம் | கா. நமச்சிவாய முதலியார் | 86 |
| 24 | 1927 | சொல், இளம் | ,, | 88 |
| 25 | 1928 | எழுத்து, இளம் | வ. உ. சி. | 90 |
| 26 | 1929 | சொல், தெய்வ | ரா. வேங்கடாசலம் பிள்ளை | 107 |
| 27 | 1930 | சொல், குறிப்புரை | பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார் | 108 |
| 28 | 1930 | எழுத்து (மொழி) | ,, | 110 |
| 29 | 1933 | பொருள் (3, 4, 5) இளம் | வ. உ. சி. | 91 |
| 30 | 1934 | சொல். சேனா | ஆறுமுக நாவலர் | 114 |
| 31 | 1934 | பொருள், நச்சர் | எஸ். கனகசபாபதிப் பிள்ளை | 115 |
| 32 | 1935 | பொருள், பேரா | ,, | 115 |
| 33 | 1935 | பொருள்-மேற்கோள்விளக்க அகராதி | ம. ஆ. நாகமணி | 117 |
| 34 | 1935 | பொருள் (6-9) இளம் | வ,உ.சி. எஸ்.வை. பிள்ளை | 91 |

| | | | | |
|---|---|---|---|---|
| 35 | 1935 | பொருள், இளம்* | வ.உ.சி, எஸ்.வை. பிள்ளை | |
| 36 | 1937 | எழுத்து, நச்சர் | யாழ்ப்பாணம் கணேசையர் | 118 |
| 37 | 1937 | எழுத்து, குறிப்புரை | பி.சா.சு. சாஸ்திரியார் | 110 |
| 38 | 1937 | சொல் (1, 2, 3) (மொழி) | ,, | 111 |
| 39 | 1938 | சொல், சேனா | கணேசையர் | 119 |
| 40 | ஏப்ரல் 1938 | பொருள் (1) விளக்கம் | தி.சு. பாலசுந்தரம் பிள்ளை | 122 |
| 41 | 1941 | சொல், நச்சர் | மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை | 83 |
| 42 | 1942 | பொருள் (1) | சோமசுந்தர பாரதியார் | 123 |
| 43 | 1942 | பொருள் (2) | ,, | 125 |
| 44 | 1942 | பொருள் (6) | ,, | 126 |
| 45 | மார்ச் 1943 | தொல் - மூலம் | தி.சு. பாலசுந்தரம் பிள்ளை | 96 |
| 46 | 1943 | பொருள், பேரா | கணேசையர் | 119 |
| 47 | அக், 1944 | எழுத்து, ஆராய்ச்சி | வேங்கடராஜுலு ரெட்டியார் | 127 |
| 48 | 1944 | எழுத்து, நச்சர் | தேவநேயப் பாவாணர் | 95 |
| 49 | 1945 | சொல் (மொழி) | பி.சா.சு. சாஸ்திரியார் | 112 |
| 50 | 1946 | சொல், சேனா | தேவநேயப் பாவாணர் | 98 |
| 51 | 1947 | பொருள் (1.2 நச்சர்) | கழகம் | 99 |
| 52 | 1948 | பொருள், நச்சர் | கணேசையர் | 121 |
| 53 | 1948 | பொருள் (1, 3) (மொழி) | ஈ.எஸ். வரதராஜ ஐயர் | 128 |
| 54 | ,, | பொருள் (4, 5) (மொழி) | ,, | 128 |
| 55 | 1949 | பொருள் (1, 2) (மொழி) | பி.சா.சு. சாஸ்திரியார் | 113 |
| 56 | 1950 | பொருள் (3-5) நச்சர் | கழகம் | 100 |

| | | | | |
|---|---|---|---|---|
| 57 | 1951 | பொருள், பேரா | ,, | 100 |
| 58 | 1952 | சொல், நச்சர்* | தி.த. கனகசுந்தரம் பிள்ளை | |
| 59 | 1952 | பொருள் (1, 2) இளம் | கழகம் | 101 |
| 60 | 1952 | பொருள் (3, 4, 5) மொழி | பி.சா,சு. சாஸ்திரியார் | 113 |
| 61 | 1953 | பொருள், இளம் | கழகம் | 101 |
| 62 | 1954 | சொல், சேனா | ஆ. பூவராகம் பிள்ளை | 99, 102 |
| 63 | 1955 | எழுத்து, இளம் | சுந்தரமூர்த்தி | 56 |
| 64 | 1956 | பொருள் (6-9) மொழி | பி. சா. சு. | 114 |
| 65 | 1960 | தொல், மூலம் | பதிப்பாசிரியர் குழு (மர்ரே ராஜம்) | 128 |
| 66 | 1961 | தொல், முழுவதும் | புலியூர் கேசிகன் | 129 |
| 67 | 1962 | சொல், நச்சர் | கு, சுந்தரமூர்த்தி | 102 |
| 68 | ,, | ,, | இராம. கோவிந்தசாமி | 131 |
| 69 | ,, | தொல், நன். எழுத்து | வெள்ளைவாரணனார் | 130 |
| 70 | 1963 | சொல், இளம் | கு. சுந்தரமூர்த்தி | 103 |
| 71 | ,, | சொல், தெய்வ | ,, | 104 |
| 72 | ,, | சொல், | வி.ஐ. சுப்பிரமணியன் | 133 |
| | | (1-4 இயல்கள்) உ.வ | ஆபிரகாம் அருளப்பன் | |
| 73 | ,, | தொல் (மொழி)* | இலக்குவனார் | 156 |
| 74 | 1964 | சொல். கல். பழைய | கு. சுந்தரமூர்த்தி | 105 |
| 75 | 1965 | எழுத்து - நச்சர்* | ,, | |
| 76 | ,, | தொல், பொருள் (8) நச்சர் | ,, | 106 |
| 77 | 1966 | சொல், சேனா | ,, | 155 |

| | | | | |
|---|---|---|---|---|
| 78 | 1967 | எழுத்து, நச்சர் | இராம. கோவிந்தசாமி | 132 |
| 79 | ,, | இ. தொகை (எழுத்து) | ச.வே. சுப்பிரமணியன் | 135 |
| 80 | 1968 | தொல், பொருள் | புலவர் குழந்தை | 137 |
| 81 | 1968 | சூத்திரவிருத்தி | தண்டபாணி தேசிகர் | 82 |
| 82 | ,, | பொருள் (8) | ஆபிரகாம் அருளப்பன் | 135 |
| 83 | 1969 | தொல். (வளம்) | வடலூரனார் | 142 |
| 84 | ,, | எழுத்து, இளம் | அடிகளாசிரியர் | 138 |
| 85 | 1970 | சொல், சேனா | கு.மா. திருநாவுக்கரசு | 145 |
| 86 | செப். 1971 | தொல். நன். சொல். | வெள்ளைவாரணனார் | 130 |
| 87 | 1971 | சொல், கல், பழைய | தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் | 145 |
| 88 | ,, | இ. தொகை (சொல்) | ச.வே.சு. | 136 |
| 89 | 1972 | தொல். நன். | ரா. சீனிவாசன் | 146 |
| 90 | 1974 | பொருள் (8)* | வடலூரனார் | |
| 91 | 1975 | தொல். பொருள் (1) உ.வ. | மு. அருணாசலம் பிள்ளை | 149 |
| 92 | 1975 | தொல். களஞ்சியம் | அறவாணன், தாயம்மாள் அறவாணன் | 147 |
| 93 | 1975 | தொல், ஒப்பியல் | அறவாணன் | 148 |
| 94 | 1977 | தொல். சொல் | அ.கு. ஆதித்தர் | 154 |
| 95 | 1978 | இ. தொகை (யாப்பு, பாட்டியல்) | ச. வே. சு. | 136 |
| 96 | 1979 | எழுத்து, இளம்<br>**உரைவளம்** | கு. சுந்தரமூர்த்தி | 154 |
| 97 | செப். 1980 | சிறப்புப் பாயிரம் | ஆ. சிவலிங்கனார் | 158 |
| 98 | டிச. 1980 | நூன்மரபு | ,, | 158 |

| | | | | |
|---|---|---|---|---|
| 99 | சூன். 1981 | மொழி மரபு | ,, | 158 |
| 100 | 1981 | மரபியல் | கு. பகவதி | 162 |
| 101 | டிச. ,, | பிறப்பியல் | ஆ. சிவலிங்கனார் | 158 |
| 102 | மார்ச். 1982 | புணரியல் | ,, | 159 |
| 103 | மே. ,, | தொகைமரபு | ,, | 159 |
| 104 | சூலை ,, | கிளவியாக்கம் | ,, | 160 |
| 105 | நவ. ,, | உருபியல் | ,, | 159 |
| 106 | டிச. ,, | உயிர் மயங்கியல் | ,, | 159 |
| 107 | ஏப். 1983 | புள்ளி மயங்கியல் | ,, | 159 |
| 108 | செப். ,, | குற்றியலுகரப் புணரியல் | ,, | 160 |
| 109 | அக். ,, | வேற்றுமையியல் | ,, | 160 |
| 110 | 1983 | புறம் | வெள்ளைவாரணனார் | 150 |
| 111 | ,, | களவு | ,, | 151 |
| 112 | ,, | கற்பு | ,, | 151 |
| 113 | 1983 | பொருள் | ,, | 152 |
| 114 | மே. 1984 | வேற்றுமை மயங்கியல் | ஆ. சிவலிங்கனார் | 160 |
| 115 | ,, | விளிமரபு | ,, | 160 |
| 116 | சூலை ,, | பெயரியல் | ,, | 161 |
| 117 | செப் ,, | வினையியல் | ,, | 161 |
| 118 | 1985 | எழுத்து, சொல் (மொழி) | டி. ஆல்பர்ட் | 162 |
| 119 | ,, | பொருள், பேரா | கு. சுந்தரமூர்த்தி | 156 |
| 120 | ,, | செய்யுளியல், இளம் | அடிகளாசிரியர் | 140 |

| | | | | |
|---|---|---|---|---|
| | | உரைவளம் | | |
| 121 | 1985 | உவமவியல் | வெள்ளைவாரணனார் | 153 |
| 122 | 1986 | மெய்ப்பாடு | ,, | 152 |
| 123 | சூலை ,, | இடையியல் | ஆ. சிவலிங்கனார் | 161 |
| 124 | 1986 | பொருள், நச்சர் | கு. சுந்தரமூர்த்தி | 157 |
| 125 | அக். 1987 | உரியியல் (உ.வ.) | ஆ. சிவலிங்கனார் | 161 |
| 126 | செப். 1988 | சொல். இளம் | அடிகளாசிரியர் | 139 |
| 127 | ,, | எழுத்து | பாலசுந்தரம் | 163 |
| 128 | அக் ,, | சொல் | ,, | 163 |
| 129 | டிச. 1988 | எச்சவியல் (உ.வ.) | ஆ. சிவலிங்கனார் | 161 |
| 130 | 1989 | சொல், ஆத் | வ. வேணுகோபாலன் | 132 |
| 131 | 1989 | செய்யுளியல் (உ.வ) | க. வெள்ளைவாரணனார் | 153 |
| 132 | 1989 | சொல், சேனா | கு. சுந்தரமூர்த்தி | 155 |
| 133 | அக். ,, | பொருள் (3-7) | பாலசுந்தரம் | 163 |
| 134 | நவ. ,, | பொருள் (1, 2) | ,, | 163 |
| 135 | 1989 | எழுத்து (பேருரை) | இராம. சுப்பிரமணியன் | 165 |
| 136 | ,, | அகம் (மொழி) | நிர்மல் செல்வமணி | 166 |
| 137 | மார்ச் 1991 | அகத்திணையியல் (உ.வ) | ஆ. சிவலிங்கனார் | 161 |
| 138 | 1972 முதல் 1985 | எழுத்து, சொல் (மொழி) | கமில்சுவலபில் | 162 |

# தொல்காப்பியப் பதிப்பு விவரப் பட்டியல்

(எண்—அட்டவணையின் வரிசை—எண்)

மூலம் 2, 17, 18, 23, 45, 65

எழுத்து—இளம் 2, 55, 63, 96

எழுத்து—நச்சர் 1, 8, 21, 36, 48, 75, 78

சொல்—இளம் 24, 70, 84, 126

சொல்—நச்சர் 9, 41, 58, 67, 68

சொல்—சேனா 3, 4, 22, 30, 39, 50, 62, 77, 85, 132

சொல்—தெய்வ 26, 71, 130

சொல்—கல்+பழைய 74, 87

பொருள்—இளம் 15, 16, 29, 34, 59, 61, 120

பொருள்—நச்சர் 7, 11, 12, 14, 31, 51, 52, 56, 76, 124

பொருள்—பேரா 7, 13, 32, 46, 57, 119

உரைவளம் எழுத்து : 97, 98, 99, 101, 102, 103, 105, 106, 107, 108

சொல் : 72, 104, 109, 114, 115, 116, 117, 123, 125, 129

பொருள் : 91, 100, 110, 111, 112, 113, 121, 122, 131, 137

ஒப்பியல் 69, 86, 89, 93

மொழி பெயர்ப்பு 28, 38, 49, 53, 54, 55, 60, 64, 73, 118, 136, 138

களஞ்சியம் 92

அகராதி 33

இ. தொ. 79, 88, 95

புத்துரை எழுத்து : 10, 37, 47, 127, 135

சொல் : 27, 94, 128

பொருள் : 40, 42, 43, 44, 80, 82, 90, 133, 134

முழுவதும் : 66, 83

விருத்தி : 6, 81

பொதுப்பாயிரம் : 20

## துணை நூற் பட்டியல்


அச்சுக்கலை; மா. சு. சம்பந்தன்; தமிழர் பதிப்பகம் சென்னை; 1976

அச்சும் பதிப்பும்; மா. சு. சம்பந்தன்; தமிழர் பதிப்பகம்; சென்னை; 1980

தமிழ் இலக்கியங்களில் பாடவேறுபாடுகள்; வெ. பழநியப்பன்; அண்ணாமலைப் பல்கலைக்கழகம்; அண்ணாமலை நகர்; 1990

தொல்காப்பிய ஆய்வின் வரலாறு; கோ. கிருஷ்ணமூர்த்தி; சென்னைப் பல்கலைக் கழகம்; சென்னை; 1990

தொல்காப்பியச் சிந்தனைகள்; அண்ணாமலைப் பல்கலைக்கழகம்; அண்ணாமலை நகர்; 1978

தொல்காப்பியப் பதிப்புகள் (தமிழாய்வு-8); மு. சண்முகம்பிள்ளை; சென்னைப் பல்கலைக்கழகம்; சென்னை; 1978

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்; மயிலை சீனி. வேங்கடசாமி; சென்னை; 1962

மூலபாட ஆய்வியல்; அ. விநாயகமூர்த்தி; பாலமுருகன் பதிப்பகம்; மதுரை; 1978

# சிறப்புச் சொல்லகராதி

(எண்: பக்க எண்)


அசெமீஸ் 68
அடியார்க்கு நல்லார் 3, 51
அமிதசாகரர் 42
அரசஞ் சண்முகனார் 131
அரவிந்தன், மு.வை. 159
அருணாசலம் பிள்ளை, மு., 35
அரும்பத உரையாசிரியர் 8
அளபெடை 118
அழகப்பிரான் இடக்கரை ஆழ்வான் 145
ஆத்திரேய கோத்திரம் 28
ஆத்திரேயர் உரை 28
ஆதித்யம் 154
ஆந்திரசப்த சிந்தாமணி 127
ஆறுமுக நாவலர் 4, 82
இரத்தினம், க.பொ. 119
இராமையா பிள்ளை 125
இலக்கணக் கொத்து 136
இலக்கண விளக்கம் 45, 135, 136, 140
இலக்குவனார் 158, 162
இறையனார் களவியல் உரையாசிரியர் 45
இளைய பெருமாள் 34
ஈழகேசரி அதிபர் நா. பொன்னையா 122
உரைப் பதிப்புகள் 24
உரைவளப் பதிப்புகள் 35
எழுத்தச்சன் 35
ஒப்பியல் பதிப்புகள் 31
ஒரியா 68
கம்பராமாயணம் 3
கம்பன் 22
கமில் சுவலபில் 156
கர்ணாடக பாஷாபூஷணம் 127
கலித்தொகை 42
கன்னடம் 35
கன்னியப்ப முதலியார் 80
கனக சுந்தரம் பிள்ளை, தி.த., 96
காக்கைப் பாடினியம் 42, 135
கிருட்டிண மூர்த்தி, கோ. 115
குறள் 21, 22, 82
குறுந்தொகை 46
கேரள பாணினீயம் 127
கையெழுத்துப் படிகள் 49
கோபாலையர், தி.வே. 164
கோவிந்தராச முதலியார் 82
சங்க இலக்கியம் 3, 72, 127
சங்க இலக்கியச் செம்பதிப்பு 83
சங்க இலக்கியப் பாட வேறு பாட்டுப் பதிப்பு 11
சங்கச் சொல்லாட்சி 51
சங்க யாப்பு 42, 135
சண்முகம் பிள்ளை, மு. 39, 115 148, 155
சப்தமணி தர்ப்பணம் 127
சமஸ்கிருத இலக்கணம் 113
சமஸ்கிருதச் செய்திகள் 114
சாம்பசிவன், ச. 125
சிதம்பரப் பாட்டியல் 135, 140
சிலப்பதிகாரம் 3
சிறுபொழுதாராய்ச்சி 121
சீவக சிந்தாமணி 3, 52
சீனிவாச ஐயங்கார் 93
சுந்தரனார், வீ, ப. கா. 166
சுப்பிரமணிய ஐயர், கி.நா. 91
சுப்பிரமணிய பிள்ளை, எஸ்.ஜி. 34
சுப்பிரமணிய பிள்ளை, கா., 95. 122
சுவாமிநாதம் 135, 136
சூடாமணி நிகண்டு 44
செந்தமிழ் 11, 118
செய்யுளியலுடையார் 42
சேக்ஸ்பியர் 22
சொர்ணம் பிள்ளை, த. மு. 91
சோமசுந்தரம் பிள்ளை, ம. நா. 41, 116
சோழவந்தான் கந்தசாமியார் 96
ஞானியாரடிகள் 36
தண்டபாணி தேசிகர் 82

தண்டியாசிரியர் 45
தாண்டவராய சுவாமிகள் 62
தாயவலந் தீர்த்தான் கவிராயர் 85
தியாகராச செட்டியார் 80
திரனதூ மாக்கினி கதை 64
திரிசிரபுரம் பெரியண்ணப் புலவர் 80
திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை 85
திருமேனி இரத்தின கவிராயர் 85
திவாகர நிகண்டு 44, 141
துரைசாமி ஐயர். வே. 41, 116
தேசிய நூலகம் 48
தேவர்பிரான் கவிராயர் 85
தொல்காப்பிய ஆய்வடங்கல் 57
தொல்காப்பிய வரதப்ப முதலியார் 10. 72
தொல்காப்பிய வளம் 37
தொன்னூல் விளக்கம் 135, 136
நம்பியகப் பொருள் 45
நல்லூர் ஆறுமுக நாவலர் 69
நற்றத்தம் 135
நன்னயாதர்வணம் 127
நன்னூல் 130, 135, 136, 147
நாராயணயங்கார் 93
நிலனகழ் ஆய்வாளன் 4
நேமிநாதம் 135, 136. 140
பதித்தல் 8
பரிமேலழகர் 51
பல்காயம் 42, 135
பழைய உரையாசிரியர் 51
பால வ்யாகரணம் 127
பிங்கல நிகண்டு 44
பிரயோக விவேகம் 136
பிரிட்டிஷ் மியூசியம் 49
பிறநிலைப் பதிப்பு 37
புத்துரைப் பதிப்புகள் 30
புறநானூறு 52, 141
பேராசிரியர் 45
பொது மக்கட் பதிப்பு24, 129
மதிவாணன், இரா. 159
போலி எழுத்து 118
மதுரைத் தமிழ்ச் சங்கம் 119, 121
மயேச்சுர யாப்பு 42
மரபுரைப் பதிப்புகள் 24
மலிவுப் பதிப்பு 24
மாரியப்ப பட் 35
மாற்று வடிவங்கள் 69
மீனாட்சி சுந்தரம் பிள்ளை 80
முத்துசாமிப் பிள்ளை, மு. 35,149
முத்து வீரியம் 136, 140
முருகையன், க. 158, 159
மூலப் பதிப்புகள் 21
மொழிபெயர்ப்புப் பதிப்புகள் 33
யாப்பருங்கலம் 42, 135, 140
லீலா திலகம் 127
வடுகநாத தேசிகர், பிறையூர், 10, 73
வரதராசனார் மு. 159
வால்ற்றர் ஜாயீஸ் 10
வீரசோழிய உரையாசிரியர் 45
வீரசோழியம் 45, 135, 140, 147
வெண்பாப் பாட்டியல் 140
வேங்கடராசுலு ரெட்டியார் 87
வேங்கடாசல முதலியார் 10
வையாபுரிப்பிள்ளை, எஸ். 4, 12, 41, 48, 91, 93



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF
TAMIL STUDIES

டி.டி.டி.ஐ. (அஞ்சல்), தரமணி,
சென்னை-600 113.

## அறக்கட்டளைச் சொற்பொழிவு வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| இஸ்லாம் வளர்த்த தமிழ் | 15 | 00 |
| தமிழரின் தாயகம் | 10 | 00 |
| உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | 10 | 00 |
| இனிக்கும் இராசநாயகம் | 50 | 00 |
| பாவாணரும் தனித்தமிழும் | 12 | 00 |
| தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் | 10 | 00 |
| உ.வே.சா. காப்பியப் பதிப்புகள் | 10 | 00 |
| விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் | 20 | 00 |
| அகலமும் ஆழமும் | 12 | 00 |
| செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | 15 | 00 |
| உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள் | 15 | 00 |
| மகாமதிப்பாவலர் | 11 | 00 |
| உலக முதன் மொழி தமிழ் | 12 | 00 |
| மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | 15 | 00 |
| தமிழ் தந்த வ.உ.சி. | 15 | 00 |
| உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு | 15 | 00 |
| வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் | 15 | 00 |
| மு.வ. புதினங்களில் தமிழ் — தமிழினம் | 20 | 00 |
| பாவாணர் ஆய்வு நெறி | 25 | 00 |
| கிறித்தவமும் தமிழகமும் | 15 | 00 |
| நாமக்கல் கவிஞர் கவிதைகள்-தேசியம், காந்தீயம் | 16 | 00 |
| தமிழில் அறிவியல்—அன்றும் இன்றும் | 25 | 00 |
| இதழாளர் ஆதித்தனார் | 26 | 00 |
| காந்தீயப் பெருந்தலைவர் காமராசர் | 20 | 00 |
| மலையாளக் கவிதை | 15 | 00 |
| நாட்டுப்புறப் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் | 18 | 00 |
| நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை | 14 | 00 |